# மெய்கண்ட சாத்திரங்களில் திருவருள் விளக்கம்

முனைவர் (திருமதி) தேவகி இராசாமாணிக்கம்



பாண்டிமாதேவி பதிப்பகம்

# மெய்கண்ட சாத்திரங்களில் திருவருள் விளக்கம்

ஆசிரியர்
'சித்தாந்த கலாநிதி'
முனைவர் (திருமதி) **தேவகி இராசமாணிக்கம்**
எம்.ஏ., பி.எட்., எம்.ஃபில்., பிஎச். டி.,
உதவி ஆசிரியர்
சைவ சித்தாந்தத் தத்துவத் துறை
ம.கா. பல்கலைக் கழகம்
மதுரை–21.

*வெளியீடு*
**பாண்டிமாதேவி பதிப்பகம்**
*91/26, முத்துக்கருப்பபிள்ளை சந்து,*
*தெற்குவெளி வீதி, மதுரை - 625 001*

முதற்பதிப்பு : 2001
உரிமை : முனைவர் (திருமதி) தேவகி இராசமாணிக்கம்
படிகள் : 1000
விலை : ரூ. 80/-

*MEIKANDA SATHIRANGALIL*
*THIRUVARUL VILAKKAM*
*By*
*'Siddhanta Kalanidhi'*
*Dr. (Mrs.) DEVAKI RAJAMANICKAM, M.A., B.Ed., M.Phil., Ph.D.,*

*This book is published with the financial assistance of **TIRUMALA-TIRUPATI DEVASTHANAMS** under their scheme aid to publish religious books. My sincere thanks to T.T.D.* *- Author.*

**Published by:**

Dr. (Mrs.) M. DEVAKI
PANDIMADEVI PATHIPPAKAM
91/26, Muthukaruppa Pillai Lane
South Veli Street
**Madurai** - 625 001. (T.N).
Ph : 730526

Amuthachakam, Madurai - 625 016 (Ph : 782029)

# முன்னுரை

*"தென்னா டுடைய சிவனே போற்றி!*
*எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி!"*

என்பது மணிவாசகர் திருவாக்கு! இத்தகு முழுமுதற் பரம் பொருளாம் சிவபெருமானைப் பற்றியும் அவனது 'திருவருள்' பற்றியும் அறிந்து கொள்ளத் துணையாய் இருப்பன, சைவத் திருமுறைகளும், சைவசித்தாந்த சாத்திர நூல்களுமாம்! இச் சாத்திரநூல்களில் மணிமுடியாய்த் திகழ்வது, மெய்கண்டார் அருளிய 'சிவஞான போதம்'. இந்நூல் தோன்றுதற்கு முன்பே 'திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார்' எனும் இரு நூல்கள் தோன்றிவிட்டன. எனினும் மெய்கண்டாரை முதன்மையாகக் கொண்டே 'மெய்கண்ட சாத்திரங்கள்' என்று போற்றப்படும் மரபு உண்டாயிற்று. இத்தகு சாத்திரங்கள் பதினான்கு. இவற்றில் சொல்லப்படும் 'திருவருள்' குறித்து விரிவாக ஆராய்வது, 'மெய்கண்ட சாத்திரங்களில் திருவருள் விளக்கம்' எனும் இந்நூல்.

மதுரையில், தருமை ஆதீனம் நடத்திய சைவசித்தாந்த வகுப்பில் சேர்ந்து முறையாகச் சைவசித்தாந்தம் பயின்று 'சைவசித்தாந்த கலாநிதி'எனும் பட்டம் பெற்றதன் பயனாய், 'மெய்கண்ட சாத்திரங்களில் திருவருள் விளக்கம்' எனும் இத்தகு ஆய்வினைச் செய்ய முடிந்தது. யான், மதுரைக் காமராசர் பல்கலைக்கழகச் சைவசித்தாந்தத் தத்துவத் துறையில் எம்.ஃபில்., பயின்ற போதும், பிஎச்.டி. ஆய்வாளராக இருந்த போதும், எனக்கு மேற்பார்வையாளராக இருந்த பெருந்தகை பேராசிரியர் திரு **ஆ. ஆனந்தராசனாராவர்!** துறைத்தலைவராக இருந்து எனக்கு வழிகாட்டியாக விளங்கிய சான்றோர் **முனைவர் ச. கங்காதரன்** ஆவார்! யான் ஆய்வு மேற்கொண்டபோது அவ்வப்போது கருத்துரை வழங்கியவர் **முனைவர் (திருமதி) கோமதி சூரியமூர்த்தி** ஆவார்! இவ் ஆய்வு நன்முறையில் வெளிவரப் பல்லாற்றானும் துணைபுரிந்தவர், எம் குடும்ப நண்பரும், இத்துறையின் சிறப்புநிலைப் பேராசிரியரும், 'தமிழ் மாருதம்' என்னும் தரமான திங்களிதழின் ஆசிரியருமான **முனைவர் திரு. ச. சாம்பசிவனார்** ஆவார்! இவர்கள் அனைவர்க்கும் என் மனமுவந்த நன்றியை உளப்படுத்துகின்றேன்.

யான் பிஎச்.டி., ஆய்வு செய்தபோது, ம.கா. பல்கலைக்கழகம், உதவித் தொகை தந்து ஊக்கப்படுத்தியதோடு, இவ் ஆய்வு, நூலாக வெளிவர அனுமதியும் அளித்ததை என்றும் நன்றியுடன் போற்றுவேன்.

என் குடும்பத்தினர் அனைவரும் இந்நூல் வெளிவருவதில் ஆர்வம் காட்டி ஒத்துழைப்பு நல்கினர்.

**இந்நூல் வெளிவர நிதி உதவி அளித்த 'திருமலை – திருப்பதி தேவத்தானத்'தார் அனைவர்க்கும் என் நெஞ்சார்ந்த நன்றி!** இதனை நன்முறையில் அச்சிட்டு வெளிக் கொணர்ந்த அமுதச்சகத்தார்க்கு–குறிப்பாக உரிமையாளர் **திரு. சா. திருமாவளவன்** அவர்கட்கு என் நன்றி.

அனைத்திற்கும் மேலாகத் தோன்றாத் துணையாக இருக்கும் சொக்கநாதர் திருவருளை நினைந்து போற்றுகின்றேன்.

இங்ஙனம்
**முனைவர் (திருமதி) எம். தேவகி**

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

பொது

| | |
|---|---|
| உ. ஆ. | – உரை ஆசிரியர் |
| உ. வெ. | – உதாரண வெண்பா |
| ப. | – பக்கம் |
| ப. ஆ. | – பதிப்பு ஆசிரியர் |
| பக். | – பக்கங்கள் |
| மு. கா. நூ. | – முன்னர்க் காட்டிய நூல் |
| வ. எ. | – வரிசை எண் |
| வி. உ. | – விளக்க உரை |
| ed. | – edited. |
| Ibid. | – Ibidem : 'In the same place/work'. |
| Nos. | – Numbers |
| op. cit. | – Opera Citato : 'In the work cited quoted'. |
| p. | – page |
| p.p. | – pages |
| Qy. | – Quarterly |
| Vol. | – Volume. |

பெயர், கழகம், பதிப்பகங்கள்

| | |
|---|---|
| அ. ப. க. | – அண்ணாமலைப் பல்கலைக் கழகம் |
| உ. வே. சா. | – உ. வே. சாமிநாதையர் |
| கழகம் | – சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| சமாசம் | – சைவ சித்தரந்த சமாசம் |
| செ. ப. க. | – சென்னைப் பல்கலைக் கழகம் |
| த. ப. க. | – தமிழ்ப் பல்கலைக் கழகம் |
| ம. கா. ப. க. | – மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம் |
| மன்றம் | – சைவசித்தாந்தப் பெருமன்றம் |
| A.U. | – Annamalai University |
| M.K.U. | - Madurai Kamaraj University. |

மேற்கோள் விளக்கம்

இவ் ஆய்வில் மேற்கோளாக எடுத்தாளப்படும் பதினான்கு சாத்திரங்கள், சைவ சித்தாந்தப் பெருமன்றம் வெளியிட்ட 'சித்தாந்த சாத்திரம் பதினான்கு மூலமும் உரையும்' (மூன்றாம் பதிப்பு) என்ற நூலினை அடிப்படையாகக் கொண்டவை. மூவர் அருளிய தேவாரப்பாக்கள், மயிலை இளவழகனார் வெளியிட்ட 'தேவார அடங்கன் முறை' என்ற நூலையும்; திருவாசகப்பாக்கள் பெருமன்றம் வெளியிட்ட 'திருவாசகம் மூலமும் பல ஆராய்ச்சி அகராதிகளும்' என்ற நூலையும்; திருமந்திரப் பாக்கள், சீவைகுண்டம் குமரகுருபரர் சங்கம் வெளியிட்ட நூலையும்; பெரியபுராணப்பாக்கள், திருவாவடுதுறை ஆதீனம் வெளியிட்ட நூலையும்; ஏனைய தோத்திரப் பாக்கள், சென்னை வர்த்தமானன் பதிப்பகம் (தமிழ்நிலையம்) வெளியிட்ட 'பன்னிரு திருமுறைகள் மூலமும் உரையும்' என்ற நூல்களையும் அடிப்படையாகக் கொண்டவை.

# 1
# முன்னுரை

## ஆய்வு நோக்கம்

மெய்கண்டார் அருளிய சிவஞானபோதத்தை முதன்மை நூலாகக் கொண்டு, தோன்றி வளர்ந்தவை, 'மெய்கண்ட சாத்திரங்கள்'. இவை, கி.பி. 12, 13, 14ஆம் நூற்றாண்டுக்கால இடைவெளியில் உருவாயின. 'முதல்நூல் - வழிநூல் - சார்பு நூல்' எனும் முறைப்படி அமைந்துள்ளன. இவற்றுக்கிடையே, கருத்து வளர்ச்சிகளைக் காணமுடிகின்றது. அம்முறையில், 'திருவருள்' பற்றிய கோட்பாடு, 'சிவஞானபோதம்' தொடங்கி, எவ்வெவ்வாறு விளக்கம் பெற்று வந்துள்ளது என்பதை ஆராய்வதே இவ் ஆய்வின் நோக்கம்.

## ஆய்வு முன்னோடிகள்

மெய்கண்ட சாத்திரங்கள் கூறும் சைவசித்தாந்தத் தத்துவங்களை விளக்கத் தமிழில் வெளிவந்த நூல்கள், ஆய்வுகள், கட்டுரைகள் பலவாகும். மெய்கண்டார் அருளிய 'சிவஞானபோதத்'திற்குச் சிற்றுரை, பேருரை (மாபாடியம்) கண்டவர் மாதவச் சிவஞான முனிவராவர். இவ்வுரைகளை அடிப்படையாகக் கொண்டே, பின்வந்தோர் விளக்கங்கள் தருவாராயினர். ஜே.எம். நல்லசாமிப்பிள்ளை, மறைமலையடிகள், பொ. முத்தையபிள்ளை, கா. சுப்பிரமணியபிள்ளை, ப. இராமநாதபிள்ளை, சி. அருணைவடிவேலு முதலியார், க. வச்சிரவேல் முதலியார், முரு.பழ. இரத்தினம் செட்டியார், ம. பாலசுப்பிரமணிய முதலியார், ர. ராமானுஜாசாரி, வ.ஆ. தேவசேனாபதி, வை. இரத்தினசபாபதி, கு. சுந்தரமூர்த்தி போன்றோர் எழுதிய நூல்களும் விளக்கங்களும் பலவாம். இவைதவிரச் சைவசித்தாந்தத்தில் ஆராய்ச்சிப் பட்டம் பெறும் பொருட்டு மேற்கொண்ட ஆய்வுகளும் உண்டு. முனைவர் டி.பி. சித்தலிங்கையாவின் 'சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும்' (ஆங்கிலம்), முனைவர் ச. கங்காதரனின் 'ஞானாமிர்தம்' (ஆங்கிலம்), முனைவர் ஆ. ஆனந்தராசனின் 'சிவஞான முனிவரின் சைவசித்தாந்த விளக்கம்', முனைவர் (திருமதி) கோமதி சூரியமூர்த்தியின் 'திருஞானசம்பந்தரின் தேவாரமும் சைவசித்தாந்தக் கருத்துக்களும்' ஆகியனவும், இன்ன பிறவும் சைவசித்தாந்தம் பற்றிய ஆய்வுகளாம். இவைதவிரச் சைவசித்தாந்தத்தில் சொல்லப்படும் 'திருவருளை'க் கிறித்தவ சமயக் கருத்துக்களோடு ஒப்பிட்டு எழுதப்பட்ட ஆய்வேடுகளும் உண்டு. ம.கா. பல்கலைக் கழகச்

சைவசித்தாந்தத்துறையில், 'சிறப்புநிலைப் பேராசிரியர் ஆய்வுத் திட்டத்'தின் கீழ், முனைவர் ச. சாம்பசிவனார் எழுதி வெளியிட்ட, 'திருவாசகத்தில் சைவசித்தாந்தக் கருத்துக்கள்', 'திருநாவுக்கரசர் தேவாரத்தில் சைவசித்தாந்தக் கருத்துக்கள்' என்னும் நூல்களும் இங்குக் குறிப்பிடத்தகும். பல்கலைக் கழகங்களில் எம்.ஃபில்., பட்டத்திற்காக மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளிற் சில, சைவசித்தாந்தம் பற்றியனவாம். மேலும், 'சித்தாந்தம், மெய்கண்டார், தமிழ்மாருதம்' முதலான இதழ்களில் வெளிவந்த கட்டுரைகள் சிலவும் இவண் குறிக்கத்தகும். இவை அனைத்துமே இவ் ஆய்வுக்குத் துணை செய்வன எனலாம். எனினும், "மெய்கண்ட சாத்திரங்களில் 'திருவருள்' விளக்கம்" எனத் தனித்து, முழுமையாகவும் விரிவாகவும் எவரும் ஆய்வு செய்யவில்லை. அம் முயற்சியில் இதுவே முதல் ஆய்வாகும்.

## ஆய்வு எல்லை

மெய்கண்ட சாத்திரங்களுக்கு முந்திய நூல் 'ஞானாமிர்தம்'. எனவே அஃது ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படவில்லை. அதேபோல, மெய்கண்ட சாத்திரங்களுக்குப் பிற்பட்ட, தருமை, திருவாவடுதுறை முதலான ஆதீனங்களிலிருந்து தோன்றிய 'பண்டார சாத்திரங்கள்' போன்றவையும், இவ் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படவில்லை. இவ்வாறே 'சிவஞான சித்தியார் - பர பக்கம்' எனும் பகுதியும் இவ் ஆய்வில் இடம்பெறவில்லை.

'மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கு' என்ற எல்லைக்குள் மட்டுமே 'திருவருள்' பற்றிய ஆய்வு நிகழ்த்தப் பெற்றுள்ளது.

முதல்வனின் 'திருவருள்' கடல்போல் பரந்தது; விரிந்தது; ஆழமானது. ஆதலின், அத் திருவருள் முழுமையும் பற்றி ஆராய்வது என்பது அருமை. அக் கடலில் ஒரு சிறுதுளி அளவே இவ் ஆய்வு எனலாம்.

"சிவஞானபோதம் - முதல்நூல்; சிவஞான சித்தியார் - வழிநூல்; சிவப்பிரகாசம் - சார்பு நூல்" ஆதலின், இவ் வரிசைப்படி, முதற்கண் இம்மூன்று நூல்களும் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன. இம் மூன்றிலும் இடம்பெறும் 'திருவருள்' பற்றிய ஆய்வு, விளக்கமாகவே மேற்கொள்ளப்பட்டுள்ளது. ஆனால், எஞ்சிய சாத்திரநூல்களில் சொல்லப்பட்டுள்ள 'திருவருள்' பற்றிய ஆய்வு, விரிவு கருதி, ஈண்டுச் சுருக்கமாகவே மேற்கொள்ளப்பட்டுள்ளது.

'இறை, உயிர், தளை' எனும் இம் மூன்றும் ஒன்றுக்கொன்று இயைபுடையன. அவ்வாறே, 'தளை' எனப்படும் 'ஆணவம், கன்மம், மாயை' எனும் இம் மூன்றும் இயைபுடையன. ஒன்றை விளக்குமிடத்து ஏனைய இரண்டும் இடம் பெறல் இயல்பு. ஆதலின், ஒருசில இடங்களில் '**கூறியது கூறல்**' தவிர்க்கமுடியாததாகிறது.

## ஆய்வு அடிப்படைகள்

ஆய்வு அடிப்படை, இருவகையில் அமையும் :

(1) முதன்மை ஆதாரம்;
(2) துணைமை ஆதாரம்.

'மெய்கண்ட சாத்திர நூல்கள்' பதினான்கும், இவ் ஆய்வுக்கு 'முதன்மை ஆதாரங்கள்' ஆகும். இப் பதினான்கும் அடங்கிய பதிப்புக்கள் பல வெளிவந்துள்ளன. எனினும் சைவசித்தாந்தப் பெருமன்றம் வெளியிட்டுள்ள, 'மெய்கண்டசாத்திரம் என வழங்கும் சித்தாந்த சாத்திரம் பதினான்கு மூலமும் உரையும்' (3ஆம் பதிப்பு) என்ற நூலே இவ் ஆய்வுக்கு முதன்மை ஆதாரமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. பொ. முத்தையபிள்ளையின், 'சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்', மு. திருவிளங்கத்தின், 'சிவஞானசித்தியார் சுபக்கம் - புத்துரை', ஆ. ஆனந்தராசனின் 'சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை', சி.சு. மணியின் 'சிவப்பிரகாசம் உரை' ஆகியனவும் முதன்மை ஆதாரங்களாம்.

இவற்றின் அடிப்படையில் அமைந்த ஆராய்ச்சி நூல்கள், உரை விளக்க நூல்கள், சைவத்திருமுறைகள், 'மாநாட்டு மலர்கள், இதழ்கள்' ஆகியவற்றில் வெளிவந்த கட்டுரைகள் ஆகியன, இவ் ஆய்விற்குத் துணைமை ஆதாரங்களாம்.

## ஆய்வு அணுகுமுறை

இவ் ஆய்வில் 'பகுப்பு முறை, விளக்க முறை, ஒப்பீட்டு முறை' எனும் அணுகுமுறைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

இயல் தலைப்பு விளக்கம், மெய்கண்டார் முதலான நூலாசிரியர்கள் கூறும் இலக்கணம், சாத்திரங்களில் வரும் செய்திகள், திருமுறைகளில் கூறப்படும் செய்திகள் என்பன 'பகுப்பு முறை'யில் அடங்கும். நூலாசிரியர்கள் கூறுவனவற்றிற்குத் தரப்படும் உரைகளும் பிறவும் 'விளக்கமுறை'யில் அடங்கும்.

ஆங்காங்கே தரப்படும் பிறநூற் கருத்துக்கள் 'ஒப்பீட்டு முறை'யில் அடங்கும்.

## ஆய்வுப் பகுப்பு

இவ் ஆய்வேடு, பின்வரும் எட்டு இயல்களைக் கொண்டுள்ளது:

1. முன்னுரை
2. மெய்கண்ட சாத்திரங்கள் - ஓர் அறிமுகம்
3. திருவருள் - ஒரு விளக்கம்
4. சிவஞானபோதத்தில் 'திருவருள் விளக்கம்'
5. சிவஞானசித்தியாரில் 'திருவருள் விளக்கம்'

6. சிவப்பிரகாசத்தில் 'திருவருள் விளக்கம்'
7. பிற சாத்திரங்களில் 'திருவருள் விளக்கம்'
8. முடிவுரை

## முன்னுரை

இவ் ஆய்வில், முதற்கண் அமையும் இம் 'முன்னுரை'யில், "ஆய்வுநோக்கம், ஆய்வு முன்னோடிகள், ஆய்வு எல்லை, ஆய்வு அடிப்படைகள், ஆய்வு அணுகுமுறை, ஆய்வுப் பகுப்பு, இயல்கள், முடிவுரை, பின்னிணைப்புக்கள், மேற்கோள் விளக்கம்" ஆகியன இடம்பெறுகின்றன.

## மெய்கண்ட சாத்திரங்கள் - ஓர் அறிமுகம்

இவ்வியலில், "மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கு - நூற்சிறப்பு, ஆசிரியர் குறிப்பு" ஆகியன இடம்பெறுகின்றன. 'உந்தி களிறே' எனும் பாடல், 'திருவுந்தியார்' முதல், 'சங்கற்பநிராகரணம்' ஈறாகப் பதினான்கு நூல்கள்பற்றி வரிசைப்படுத்துகின்றது. இந்நூல்களுள் 'சிவஞானபோதம்' அருளிய மெய்கண்டாரே, சைவசித்தாந்தக் கோட்பாடுகளை முதன்முதல் வரன்முறைப்படுத்தி மன்பதைக்கு உணர்த்திய அருளாளர் என்பதும்; திருக்கயிலாய பரம்பரையில், புறச்சந்தான குரவரில் இவரே முதன்மையானவர் என்பதும், இவரை முதலாகக் கொண்டே சைவசந்தான ஆசாரிய பரம்பரை உருவாயிற்று என்பதும், இவரது திருப்பெயரை அடியொற்றியே 'மெய்கண்ட சாத்திரம்' எனும் பெயர் வழங்கலாயிற்று என்பதும் எடுத்துரைக்கப்படுகின்றன. இவ்வாறே பிற சாத்திரங்களின் சிறப்பும் இதன்கண் இடம் பெறுகின்றது.

## 'திருவருள்' - ஒரு விளக்கம்

இறைவனது சிற்சத்தியாகிய ஆற்றலே 'திருவருள்' எனப்படும். இது, 'பதிஞானம், சிவஞானம்' எனவும் கூறப்படும். 'சத்தி' எனப்படுவதும் இதுவே. இவ்வுலகைப் படைத்துக் காத்து அழிக்கின்ற முதல்வன், அதற்காகத் தன் சத்தியைப் பயன்படுத்துகின்றான். 'தாதான்மிய சம்பந்தம்'; 'இறைவனின் அருள் வடிவம்'; 'அருட்சத்தி'; 'அத்துவிதம்'; 'திருவருளே உயிரை வாழ்விக்க வந்த பேரொளி' என்பன போன்ற கருத்துக்கள் இவ்வியலில் இயம்பப்படுகின்றன.

## சிவஞானபோதத்தில் 'திருவருள் விளக்கம்'

இறைவன், உயிர்களோடு அத்துவிதமாய் இருத்தல் ஒன்றே, அவனது திருவருட்டிறத்தை விளக்கப் போதிய சான்றாகும். அவனுக்குக் கருவியாக அமைவது - அவனது சத்தி. அஃது 'ஆணை' எனவும் படும். முதல்வனாகிய சிவனும் அவனது சத்தியும், பொருளால் ஒன்றேயாயினும், செயற்பாட்டில் இருதிறப்பட்டுவிளங்கும். "அத்துவிதமும் திருவருளும்;

முதல்வனும் திருவருளும்; உயிர்களும் திருவருளும்; பாசநீக்கமும் திருவருளும்; சிவப்பேறும் திருவருளும்" என்பன, பிற சாத்திர - தோத்திரக் கருத்துக்களுடன் ஒப்பிட்டு இவ்வியலில் ஆராயப்படுகின்றன.

மெய்கண்டார், தம் நூலில் 'பதி'யாகிய சிவபெருமானுக்கு முதன்மை தருகின்றார். நூல் தலைப்பே இதற்குச் சான்று. பதியைச் சூரியனுக்கும், திருவருளை ஒளிக்கும் உவமைப்படுத்திக் கூறுவதைப் பின்னர் வந்த சித்தியாரும் சிவப்பிரகாசமும் மிகச் சிறந்த முறையில் எடுத்தாள்வதும் இவ்வியலில் சுட்டப்படுகின்றது.

**சிவஞான சித்தியாரில் 'திருவருள் விளக்கம்'**

இது, வழி நூலாதலின், முதல் நூலான சிவஞானபோதத்தை உள்ளவாறே பின்பற்றிச் செல்கின்றார் அருணந்தி சிவாசாரியர். இவ்வியலிலும், "அத்துவிதமும் திருவருளும்; முதல்வனும் திருவருளும்; உயிர்களும் திருவருளும்; பாசநீக்கமும் திருவருளும்; சிவப்பேறும் திருவருளும்" எனும் உட்தலைப்புக்களில் சித்தியார் கருத்துக்கள் ஆராயப்படுகின்றன. பிற சாத்திர - தோத்திரக் கருத்துக்கள், ஒப்பீட்டு முறையில் தரப்படுகின்றன.

**சிவப்பிரகாசத்தில் 'திருவருள் விளக்கம்'**

இந்நூல் தலைப்பே (பிரகாசம் - ஒளி - திருவருள்) முதல்வனின் திருவருளைக் குறிப்பதாக அமைந்துள்ளது. எனவே இந் நூலாசிரியராகிய உமாபதி சிவம், முதல்வனின் திருவருளுக்கு முதன்மை தருகின்றார் எனலாம். இவ் இயலிலும், "அத்துவிதமும் திருவருளும்; முதல்வனும் திருவருளும்; உயிர்களும் திருவருளும்; பாசநீக்கமும் திருவருளும்; சிவப்பேறும் திருவருளும்" எனும் உட்தலைப்புக்களில் திருவருளைப்பற்றிய விளக்கங்கள், பிற சாத்திர - தோத்திர நூற் கருத்துக்களுடன் ஒப்பிடப்பட்டு ஆராயப்படுகின்றன.

**பிற சாத்திரங்களில் 'திருவருள் விளக்கம்'**

'சிவஞானபோதம், சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம்' எனும் இம் மூன்றும் நீங்கலாக, எஞ்சிய பதினொரு சாத்திர நூல்களில் சொல்லப்படும் 'திருவருள்' பற்றிய ஆய்வு இவ்வியலில் சுருக்கமாக மேற்கொள்ளப்படுகின்றது. இவற்றுள் 'திருவருட்பயன்' எனும் நூலின் தலைப்பே, திருவருளுக்கு முதன்மை தருவதாக அமைந்துள்ளது. இதன்கண் இடம்பெறும் 'அருளது நிலை, அருளுரு நிலை' எனும் இரண்டு அதிகாரங்களும், முதல்வனின் திருவருளைக் குறித்தனவாம். "திருவருள் என்ற வாளை எப்போதும் கையகத்தே கொண்டிருக்க வேண்டும்" என்கின்றது 'திருவுந்தியார்'. இவ்வாறே பிற சாத்திர நூல்களில் சொல்லப்படும் 'திருவருள்' பற்றிய குறிப்புக்கள் தரப்படுகின்றன. ஆங்காங்கே ஒப்பீட்டு முறையில் திருமுறைப் பாடல்களும் சுட்டப்படுகின்றன.

**முடிவுரை**

இவ்வியலில், ஒவ்வோர் இயலிலும் இறுதியில் சொல்லப்பட்ட ஆய்வு முடிபுகள் தொகுத்துரைக்கப்படுகின்றன. மேலும் இவ் ஆய்வினால் உண்டாகும் பயனும்; 'எதிர்காலத்தில் மேலும் ஆராய்வதற்குரிய வழி உண்டு' என்ற கருத்தும் சுட்டப்படுகின்றன.

**பின்னிணைப்புக்கள்**

இவ் ஆய்வுக்குத் துணையாக, "மெய்கண்ட சாத்திர அட்டவணை, சிவஞானபோதம் - பாகுபாடு விளக்க அட்டவணை, சிவஞானபோதம் - நூற்பா, அதிகரண அட்டவணை, மாயை - விளக்கப்படம்" முதலாயினவும் பிறவும் பின்னிணைப்புக்களில் தரப்படுகின்றன.

**மேற்கோள் விளக்கம்**

இவ் ஆய்வில், ஆங்காங்கே மெய்கண்டாரும் பிற ஆசிரியர்களும் அருளிய நூற்பா, செய்யுள் முதலானவையும்; உரையாசிரியர்கள் கூறும் உரைப்பகுதிகளும்; சாத்திர நூல்கள், திருமுறைகள், பிற நூல்கள் ஆகியவற்றின் மேற்கோள்களும் எடுத்தாளப்பட்டுள்ளன.

'சிவஞானபோதம்' முதலான பதினான்கு சாத்திர நூல்களிலிருந்து காட்டப்படும் நூற்பா, அதிகரணம், ஏது, உதாரணம், செய்யுள் ஆகியன, சைவசித்தாந்தப் பெருமன்றம் வெளியிட்டுள்ள 'மெய்கண்ட சாத்திரம் என வழங்கும் சித்தாந்த சாத்திரம் பதினான்கு மூலமும் உரையும்' என்ற நூலினை அடிப்படையாகக் கொண்டவை. மூவர் அருளிய தேவாரப் பாக்கள், மயிலை இளவழகனார் பதிப்பித்த 'தேவாரம் அடங்கன் முறை'யில் கொடுக்கப்பட்ட வரிசை எண் முறையைப் பின்பற்றித் தரப்பட்டுள்ளன. திருவாசகப் பாக்கள், மன்றப் பதிப்பில் காட்டப்பட்ட 'பாடல் எண், அடி எண்' என்ற முறையில் அமைந்தவை. திருமூலர் திருமந்திரம், ஸ்ரீவைகுண்டம் குமரகுருபரர் சங்கப்பதிப்பாகிய 'திருமூலர் திருமந்திரத்'தில் வரும் 'பாடல் தொடர் எண்' முறையில், அமைந்தது. பெரியபுராணம், திருவாவடுதுறையாதீனப் பதிப்பில் உள்ள 'பாடல் எண், பக்க எண்' முறை இடம்பெற்றுள்ளது. இவை தவிர ஏனைய திருமுறைப் பாடல்கள் ஒரு சிலவற்றிற்குச் சென்னை வர்த்தமானன் பதிப்பகத்தார் வெளியிட்டுள்ள நூல்கள் ஆதாரமாகும்.

மேற்கோள்கள் அனைத்திற்கும் அடிக்குறிப்பெண்கள் இடப்பட்டு அவை, இயலின் இறுதியில் 'சான்றெண் விளக்கங்களா'கத் தரப்பட்டுள்ளன.

இறுதியாக, ஆய்விற்குத் துணைபுரிந்த நூற்பட்டியல் இடம்பெறுகின்றது.

# 2
# மெய்கண்ட சாத்திரம் - ஓர் அறிமுகம்

## முன்னுரை

சைவசித்தாந்தக் கோட்பாடுகளை எடுத்துரைப்பன, 'மெய்கண்ட சாத்திரங்கள்' ஆகும். இச் சாத்திரங்கள், பதினான்கு உள்ளன. இவைகுறித்து ஒருசிறிது ஆராய்வதே இவ் இயலின் நோக்கம்.

## சைவசித்தாந்தமும் சாத்திர நூல்களும்

சிவபரம்பொருளை முதன்மையாகக் கொண்டு இயங்குவது 'சைவ சமயம்' ஆகும்.[1] இது, காலத்தாற் பழமையானது என்பது அறிஞர் பலரது துணிபு.[2]

> *"சைவ சமயம், இந்தியாவில் அனாதிகாலமாக வழங்கிய சமயம்; இது, அன்றுமுதல் இன்றுவரை வழிபாடு செய்கின்ற மதம் என்றில்லாமல், மக்கள் வாழ்க்கையின் எல்லாத் துறைகளையும் செம்மைப்படுத்திய வாழ்க்கை நெறியாக இருந்து வந்திருக்கிறது . . . உலகத்திலே வழங்கும் சமயங்கள் பல. அவையாவும் காலத்துள் கட்டுப்பட்டுள்ளன. சைவ சமயம் ஒன்றுதான் சரித்திர காலத்தைக் கடந்துநின்று இன்றுவரை நின்று நிலவுவது. இது, ஒருகாலத்தில் ஒருவரால் உண்டாக்கப்பட்டதன்று."*[3]

என மு. அருணாசலம் கூறும் கருத்து இவண் எண்ணத்தகும்.

இத்தகு சைவ சமயத்தின் தத்துவங்களை விளக்குவது 'சைவசித்தாந்தம்'.

சித்தம் + அந்தம் = சித்தாந்தம். சித்தம் = நிலை நிறுத்தப்பட்ட உண்மை; அந்தம் = முடிவு. முற்ற முடிந்த மெய்ப்பொருட் கொள்கை. இம்முடிபிற்குமேல் ஒரு முடிபில்லை. இதுவே ஏனைய தத்துவவாதிகளின் முடிபுகளுக்கெல்லாம் மேற்பட்ட இறுதி முடிபு; தத்துவச் சிந்தனையின் இறுதி முடிவிடம்.[4]

'சைவம்' என்பது 'சிவசம்பந்தம்' என்று பொருள்படும். சிவசம்பந்தம், சைவம் ஆதலால், சிவத்துக்கும் உயிர்களுக்குமுள்ள சம்பந்தம், 'சைவம்'; சிவத்துக்கும் உயிரற்ற உலகத்துக்கும் உள்ள

தொடர்பும் சைவமே. எனவே உயிர்களுக்கும் அந்த உலகிற்குமுள்ள தொடர்பும் சைவமாகும். உயிருக்கும் உடம்பிற்கும் உளதாகிய தொடர்பும் சைவம். இத் தொடர்பைத் திருவள்ளுவர் 'அன்பு' என்றார்; திருமூலர் 'சிவம்' என்றார்.

*"அன்புசிவம் இரண்டு என்பர் அறிவிலார்"*[5]

என்பது திருமந்திரம். இத்தொடர்பை அறிந்து ஒழுகும் திருநெறி 'சைவம்' எனப்படும். இதை, அளவைகளாலும், பொருந்தும் நெறிகளாலும் ஆராய்ந்து தெளிந்து முடிபு கூறுவது சைவசித்தாந்தமாகும். 'சைவசித்தாந்தம்' என்பதற்குச் 'சைவத்தின் முடிந்த முடிபு' என்று பொருள். இவ்வாறு கூறுவர் ஔவை சு. துரைசாமிபிள்ளை.[6]

'சித்தாந்தம்' என்ற சொல்லையும், சித்தாந்தத் தத்துவங்களின் கருத்துக்களையும் விரிவாக முதன்முதலில் எடுத்துரைத்தவர் திருமூலராவர்.[7]

> *"சித்தாந்தம் மூடநம்பிக்கையும் அன்று; பழமைக்கு அடிமையும் அன்று. அறிவாராய்ச்சியின் சிறந்த நிலையே சித்தாந்தமாகும்"*[8]

என்பது தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் கருத்து.

'சித்தாந்தம்' என்பதற்குச் ச. தண்டபாணி தேசிகர் கூறும் விளக்கமும் இங்குக் குறிப்பது பொருத்தமாகும் :

> *"சித்தாந்தம் - முடிந்த முடிபு, வேறொன்றானும் மறுக்க முடியாததாய், அநுபவத்திற்கு எளியதாய், தடை விடைகளுக்குச் சலியாததாய் இருப்பது எதுவோ அது 'சித்தாந்தம்'? ஏது, உதாரணம் இவற்றால் விளைந்த முடிபு, 'சித்தாந்தம்'. சித்தாந்தம் என்ற இச்சொல், காரணம் கருதியவழிப் பலராலும் பல சமய முடிபுகளுக்குப் பெயராக்கப் பெறுமாயினும், இடுகுறியளவாய் அடைமொழியின்றியே சுத்தாத்துவித சைவ சித்தாந்தம் ஒன்றனையே உணர்த்துவது. 'சிவம்' என்பது காரணம் கருதியபொழுது, 'மங்கலம், நித்தியம்' முதலான பல்வேறு பொருள் தருமாயினும், சந்தர்ப்பம் நோக்காது நேரே அந்தமில் குணத்து எந்தை பெருமானையே உணர்த்துவதுபோலச் சித்தாந்தமும் சுத்தாத்துவித சைவசித்தாந்தத்தையே உணர்த்துதல் காண்க."*[9]

கா. சுப்பிரமணிய பிள்ளை,

*"சைவநூல்களின் முடிந்த முடிபைக் கூறும் நூல்களைச் சைவ சித்தாந்தமென்ப"*[10]

என்பர்.

இத்தகு சைவசித்தாந்தத்தின் தத்துவச் சிறப்புக்களைக் குறித்து அறிஞர் பலரும் பலவாறு விதந்து போற்றுவர்.[11]

நற்கலை கற்று, யோகம் பயின்று, பதமுத்தி எய்துதற்குரிய ஞானம் எய்தித், தம்மையும் தலைவனையும் உணர்ந்தோரே 'சைவசித்தாந்தர்' ஆவர் என்கிறது திருமந்திரம்.[12]

தமிழ் இலக்கியப் பரப்பில் சைவ சமய நூல்கள் பலவாக உள்ளன. அவற்றைத் 'தோத்திரம்' என்றும்; 'சாத்திரம்' என்றும் இருவகையில் அடக்கலாம்.[13] சிவபரம்பொருளைப் பற்றிப் பத்திச்சுவை ததும்பப் பாடியவை 'தோத்திரம்' எனப்படும்; சைவ சமயக் கோட்பாடுகளை விளக்குவன 'சாத்திரம்' எனப்படும். தோத்திரங்களின் பிழிவாக அமைந்தனவே 'சாத்திரங்கள்'.[14] இச் சாத்திர நூல்கள், கி.பி. 12,13,14ஆம் நூற்றாண்டுகளில் செம்மையுறத் தோன்றுதற்கு மூலமுதற் கருவாய்த் திகழ்ந்தவை 'தோத்திரங்கள்' எனப்படும் திருமுறைகளேயாம்.[15]

மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கு என மேலே சுட்டப்பட்டது. அவையாவன : திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம், சிவஞானசித்தியார், இருபா இருபஃது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடு தூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம்.

*"உந்தி களிறு உயர்போதம் சித்தியார்*
*பிந்திருபா உண்மை பிரகாசம் - வந்தஅருட்*
*பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு*
*உண்மைநெறி சங்கற்பம் உற்று"*[16]

எனும் பழைய வெண்பாவால் இப்பதினான்கு சாத்திர நூல்களைப் பற்றி அறியலாம். நூல்களுள் காலத்தால் முற்பட்டவை திருவுந்தியாரும், திருக்களிற்றுப்படியாரும் ஆகும். இவற்றிற்குப் பின்னர் வந்த நூலே சிவஞானபோதம் ஆகும்.

மெய்கண்டாரே, சைவசித்தாந்தக் கோட்பாடுகளை முதன்முதல் வரன்முறைப்படுத்தி மன்பதைக்கு உணர்த்திய அருளாளர். திருக்கயிலாய பரம்பரையில், புறச்சந்தான குரவரில் இவரே முதன்மையானவர். இவரை முதன்மையாகக் கொண்டே சைவ சந்தான ஆசாரிய பரம்பரை உண்டாயிற்று. எனவே இவரது திருப்பெயரை அடியொற்றியே 'மெய்கண்ட சாத்திரம்' எனும் பெயர் வழங்கலாயிற்று.[17] இவை கி.பி. 12ஆம் நூற்றாண்டு முதல் விரிவடைந்தன.[18]

### சைவசமயப் பெரியோர்

சைவசமயத் திருமுறைகள் பன்னிரண்டு ஆகும். இவை இலக்கியமெனில், இவற்றிற்கு இலக்கணம் ஆக விளங்குவன பதினான்கு சாத்திர நூல்களாகும். சைவ சமயப் பெரியோரைச் 'சமயாசாரியர், சந்தானாசாரியர்' என இருவகையாகப் பிரிக்கலாம்.[19] தேவாரப் பாக்களை அருளிய சம்பந்தர், அப்பர், சுந்தரர் மூவரும், திருவாசகமருளிய மணிவாசகரும் ஆகிய இந்நால்வரும் 'சமயாசாரியர்' எனப்படுவர். மெய்கண்டார், அருணந்தி சிவாசாரியர், மறைஞானசம்பந்தர், உமாபதிசிவம் என்ற நால்வரும் 'சந்தானாசாரியர்' எனப்படுவர். சைவசித்தாந்தத்தில் சிறப்பாகப் பேசப்படும் 'பதி பசு பாசம்' எனப்படும் முப்பொருள் உண்மைகளைச் சமயாசாரியர்கள் ஆங்காங்கே மொழிந்தவற்றை வரன்முறைப்படுத்தி எடுத்துரைத்தவர்கள் 'சந்தானாசாரியர்கள்' ஆவர். இச்சந்தானாசாரியர்கள் வழிவழியாக ஞானபுத்திரர்களாய், உபதேசக்கிரமத்தில் சைவமரபைக் காத்தவர்கள் ஆதலின் இவர்களுக்கு இப்பெயர் ஏற்பட்டது.[20]

புறச்சமயங்களின் நுழைவால், தமிழ்நாட்டில் மக்கள் மயங்கி மனந்திரிந்து நின்ற நிலையில், சமயாசாரியர்கள் தோன்றி, வேத நெறியையும், மிகுசைவத் துறையையும் தழைக்கச் செய்தனர். அதுபோலவே, சைவசமயம், வளர்ச்சி குன்றியிருந்த அக்காலகட்டத்தில், சந்தானாசாரியர்கள் தோன்றி, சைவசமயத்தையும் அதன் தத்துவங்களையும் மக்கள் அறியச் செய்து, சைவசமய வளர்ச்சிக்குப் பாடுபட்டனர். சமயாசாரியர்கள் மக்களிடையே பக்திமார்க்கத்தைப் பரப்பினர்; சந்தானாசாரியர்கள் தத்துவ ஞானத்தைப் பரப்பினர்.[21]

## மெய்கண்ட நூல்கள்

### 2.1. திருவுந்தியார் - நூற்குறிப்பும், சிறப்பும்

சித்தாந்த சாத்திரங்களுள் காலத்தால் முற்பட்டது இது. அனுபவ நூலாகவும், உபதேச நூலாகவும் உள்ளது; இறையனுபவத்தை நேராகப் பிழிந்து தருவது. திரு +உந்தி +ஆர் =திருவுந்தியார். திரு - கண்டாரால் விரும்பப்படும் தன்மை; ஈண்டு அடைமொழியாக வந்தது. 'உந்தி' என்ற சொல்லுக்குப் பல பொருள்களைத் தமிழ் அகராதி தருகிறது.[22] எனினும் இங்கு 'மகளிர் விளையாட்டு' என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளது. சிலப்பதிகாரத்தில் "அம்மானைவரி, கந்துகவரி, ஊசல்வரி, வள்ளைப்பாட்டு"[23] என மகளிர் ஆடும் விளையாட்டுக்கள் சொல்லப்பட்டுள்ளன. திருவாசகத்திலும் "திருஅம்மானை, திருப்பொற்சுண்ணம், திருக்கோத்தும்பி, திருத்தெள்ளேணம், திருச்சாழல், திருப்பூவல்லி, திருவுந்தியார், திருத்தோணோக்கம், திருப்பொன்னூசல்"[24] என்னும் பெண்டிர் விளையாட்டுக்கள் இடம்பெற்றுள்ளன. இவற்றைப் பின்பற்றித் 'திருவுந்தியார்' என இந்த நூலின் தலைப்பு அமைந்ததாகக் கருதலாம்.

'உந்தி பறத்தல்' என்பது, பெண்கள் விளையாடும்போது இரு கைகளையும் இருபக்கமும் நேராக நீட்டிக் கால் விரல்களின் மேல்நின்று, பாடிச்சுழன்றாடும் ஓர் ஆட்ட வகையாகும். பண்டைக் காலத்தே சமயத்தோய்வுடைய மகளிர் விளையாடும்போதும் இறையருளை நினைந்தே விளையாடினர். பெண்கள் விளையாட்டு[25] என்பதற்கேற்ப இந்நூலில் இரண்டாவது பாடல், 'உழப்புவது என்பெணே.' எனவருவது எண்ணத்தகும். முதல் 2 அடிகளை ஒருத்தி கூறுவாள்; மூன்றாவது அடியை மற்றொருத்தி கூறுவாள். 'உந்தீ பற' என்ற சொல் பிற தொடர்களோடு தொடர்பு இன்றி, புறத்துறுப்பாய் வருவதாகும். அரிய மெய்ப்பொருளை, இனிய மகளிர் விளையாட்டு மூலம் விளக்கும் ஆசிரியரின் திருவுள்ளம் எண்ணி அறியத்தக்கது. 'உந்தீ பற' என்பதை உம் + தீ + பற என்று பிரித்து "உமது பழமையாகவே குற்றங்களை விளைவித்துவரும் மும்மலங்களையும், உடல், உலகு, கரணங்கள் ஆகியவற்றையும் உம்மிடம் விட்டு நீங்குமாறு இஞ்ஞான நூலின் கருத்தையே கருத்தாகக் கொண்டு நிற்பாயாக" எனத் தத்துவ உரை கூறுவதும் உண்டு.[26]

இந்நூல், நாற்பத்தைந்து கலித்தாழிசைகளால் ஆனது. இவை ஈரடியாய், ஈற்றடி மிக்கு வந்துள்ளன. நாற்பத்து நான்காம் செய்யுள், வாழ்த்துக் கூறுகின்றது; நாற்பத்து ஐந்தாம் செய்யுள், பயனும் தற்சிறப்பும் கூறுகின்றது.

## ஆசிரியர் குறிப்பு

இந்நூலாசிரியர், உய்யவந்த தேவநாயனார். 'ஆன்மாக்கள் உய்யும்பொருட்டு வந்தவர்' என்று சிறப்பிக்கப்படுவர்; "பரிபூரணமாய் இருக்கிற சிவன், ஆன்மாக்களுக்குச் சிவானுபவம் விளையும் நிமித்தமாக மானுடச் சட்டை சாத்தி திருவியலூரிலே எழுந்தருளினார்" எனப் பழைய பொழிப்புரை கூறுகிறது.[27]

## நூல்நுவலும் பொருள்

இந்நூல், 'திருவடி உணர்வு' எனப்படும் 'சிவஞானம்' ஒன்றனையே சிறப்பாக எடுத்து மொழிகின்றது. அதனால் சிவஞான போதத்தின் எட்டாவது நூற்பாமுதல் ஒருபுடை ஒப்பாக ஒத்து உணரற்பாலது. ஆராய்ந்து பார்த்தால், 'சீலம், நோன்பு, செறிவு, அறிவு' என்னும் நாற்படியுள் இறுதியாக உள்ள அறிவுப்படி அமைவினை, ஒருபுடை ஒப்பாக இந்நூலில் காணலாம்.[28]

ஏனைய சாத்திரங்கள் போலவே இந்நூலும் 'பதி, பசு, பாசம்' என்னும் முப்பொருள் இலக்கணத்தையும், ஞானநெறியின் பயன்களையும், அதற்குரிய வழிமுறைகளையும் கூறுகிறது. "பக்குவ ஆன்மாவுக்கு இறைவனே குருவாய் வரும் தன்மை, ஆதாரயோகம், நிராதாரயோகம், நிருத்த வழிபாடு, பரமுத்தியின் தன்மை, சீவன்

முத்தரின் இயல்பு, திருவருளின் தன்மை, பாச வீடு, சிவப்பேறு, இன்புறும் நிலை" ஆகியன, முறையே எடுத்தோதப்படுகின்றன.

## 2.2. திருக்களிற்றுப்படியார் - நூற்குறிப்பும் சிறப்பும்

திருவுந்தியாருக்கு வழிநூலாக அமைவது 'திருக்களிற்றுப்படியார்'. தில்லையிலே அம்பலவாணப் பெருமான் ஆனந்தக் கூத்தாடுகின்ற பொன்னம்பலத்தை ஏறிச் சென்று அடைவதற்கு ஐந்து படிகள் உள்ளன. இவை 'பஞ்சாக்கரப் படிகள்' எனப்படும். இந்தப்படிகளின் இருபுறங்களிலும் கல்லால் ஆன இரு களிறுகள் துதிக்கையை நீட்டி, உள்ளனபோல் அமைக்கப்பட்டுள்ளன. எனவே அவை, 'திருக்களிற்றுப்படி' என்றும் வழங்கப்பெறும். சேக்கிழார் இதனைத் 'திருக்களிற்றுப்படி' என்றே குறிப்பிடுவர்.[29]

இந்நூலாசிரியராகிய திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார், இந்நூலைத் திருக்களிற்றுப்படியில் வைக்க, கல்லால் ஆன களிறு, இதனைத் தன் துதிக்கையால் எடுத்து, நடராசப் பெருமானின் திருவடி மலர்களில் வைத்தது என்றும்; அதனால் இந்நூலுக்கு இப்பெயர் வந்தது என்றும் அறிஞர் கூறுவர்.[30]

மேலும், களிறானது தன் முதுகில் ஏற விரும்புவோரைத் தானே மண்டியிட்டுத், தன் மடித் தலைப்படியாக்கி, ஏற உதவும்; அதுபோலத் திருவருளும் தன்னைச் சேரவிரும்புவோரைத் தானே படிநெறியாக இருந்து அழைத்துத் திருவருளில் சேர்க்கிறது. இந்நூலும், களிற்றின் முதுகில் ஏற விரும்பும் அதன் கால்போலப் படியாக இருந்து, உயிர்களை வீட்டின் நெறிக்கு அழைத்துச் செல்கிறது.[31]

இது, நூறு வெண்பாக்களை உடையது. திருவுந்தியாருக்கு விளக்கமாகவும், விரிவாகவும் அமைந்து விளங்குவதால் இவ்விரு நூல்களும் கருத்தாலும், சொல்லாட்சியாலும் ஒருமித்து விளங்குவன. ஆதலின் இவற்றை, 'இரட்டைச் சாத்திரங்கள்' எனலாம். இவை, திருமுறைகளின் காலத்திற்கும், சாத்திரங்களின் காலத்திற்கும் இடைப்பட்ட காலத்தனவாதலின் அக்காலத்துச் சைவசமய மரபுகளைத் தெரிவிக்கும் அரிய கருவூலங்களாகும். இந்நூல்கள், மெய்கண்ட சந்தானத்திற்கு முற்பட்ட சமயநெறி இத்தகையதென்பதை உணர்த்துவன எனலாம்.

> *"மெய்கண்ட தேவநாயனார் சிவஞானபோத ஞாயிறு எழுமுன்னர், சைவ வானகத்தே, கீழ்த்திசை வெள்ளிபோல முளைத்தது இந் நூல் (திருக்களிற்றுப்படியார்)"*[32]

என டி.எஸ். தியாகராஜதேசிகன் கூறுவதும் மனங்கொளத்தகும்.

பதினான்கு சாத்திர நூல்களுள், முப்பொருள்களின் பொது இயல்பு கூறும் நூல்களைப் 'பொதுநூல்கள்' எனவும்; சிறப்பு இயல்புகளைக் கூறும் நூல்களைச் 'சிறப்பு நூல்கள்' எனவும் கூறலாம். திருவுந்தியாரும், திருக்களிற்றுப்படியாரும் சிறப்பியல்புகளைக் கூறுவதால் 'சிறப்பு நூல்கள்' என்று கூறத்தகும். மேலும் இத்திருக்களிற்றுப்படியாரைச் சாத்திர உரையாசிரியர் பலரும் குறிப்பிட்டுச் செல்கின்றனர். சிவஞான முனிவர், தம் மாபாடியத்தில், ஏழு இடங்களில் இந்நூற் பாடல்களைக் கையாண்டுள்ளார்.[33]

### ஆசிரியர் குறிப்பு

இந் நூலின் ஆசிரியராகிய திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார், திருவியலூர் உய்யவந்த தேவநாயனாரின் சீடரான ஆளுடை தேவநாயனாரின் மாணவராவர். திருக்கடவூருக்கு எழுந்தருளிய ஆளுடைதேவ நாயனாரின் திருவடியை இவர் பணிய, இவர் பரிபக்குவத்தை உணர்ந்த அவர், இவருக்குச் சிவதீக்கை அருளி, தம்முதல்வர் அருளிய திருவுந்தியாரைச் செவியறிவுறுத்தித் தம் ஆசிரியர் திருப்பெயராகிய உய்யவந்த தேவநாயனார் எனும் திருப்பெயரையும் அருளினர். எனவே திருக்களிற்றுப்படியார் என்னும் இந்நூல், திருவுந்தியாருக்குச் செவ்விய விளக்கமாக அமைந்துள்ளது எனலாம்.

### நூல் நுவலும் பொருள்

இந்நூலாசிரியர், தம் சிவானுபவங்களைத் திருக்குறள், திருமுறைகள் முதலியவற்றிலிருந்து எடுத்துக்காட்டி விளக்குகிறார். அறுபத்து மூன்று சிவனடியார்களின் சிவத்தொண்டை "வன் தொண்டு, மென் தொண்டு" என்ற முறையில் பிரித்து விளக்குகிறார். இவ்வகையில் "சம்பந்தர், அப்பர், மாணிக்கவாசகர், மங்கையர்க்கரசியார், அரிவாட்டாயர், சிறுத்தொண்டர், சண்டேசுவரர், திருக்குறிப்புத் தொண்டர், ஏயர்கோன் கலிக்காமர், மூர்க்கர், மூர்த்தியார், கண்ணப்பர், சேந்தனார் ஆகியோரின் தொண்டுகள்; இறைவனுடைய திருவடிகளை அடைவதற்குரிய சிவதன்மம், சிவயோகம், சிவஞானம்; ஞானாசிரியர்; சத்தியும் சிவமும் வேறுபடாத நிலை; சிவனின் ஐந்தொழில்கள்; இறைவனுக்கும் உயிர்களுக்கும் உள்ள தொடர்பு; உயிர்களை ஆட்கொள்ளும் தன்மை, முத்தியிலும் இறைவனுக்கு உயிர் அடிமையாய் இருத்தல்" போன்ற பல அரிய செய்திகளை இந்நூலின்கண் காணலாம்.

### 2.3. சிவஞானபோதம் - நூற்குறிப்பும் சிறப்பும்

மெய்கண்டார் அருளிய சிவஞானபோதம், அளவில் மிகச்சிறியது; பொருளில் மிகப்பெரியது; சிவம் - ஒன்று; அதனைத்தேர்தல் - ஞானம்; தேர்ந்ததனைத் தெளிதல் - போதம். எனவே 'சிவஞானபோதம்' எனப்பட்டது.

*"நின்றிவை ஒன்று அதனைத் தேர்தல் ஞானம்*
*நிகழும் மதம் சிந்தனைத் தெளிதல் ஆம்"*[34]

என்பது வாதவூரடிகள் புராணம்.

'சிவஞான மாபாடியத்'தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த க. வச்சிரவேல் முதலியார் கூறுவது இவண் கருதத்தகும் :

> *"அவர் (மெய்கண்டார்) தென்னகத்திலிருந்த, சைவ சித்தாந்தத் தத்துவத்திற்கு அளவை அடிப்படையில், விளக்கம் தந்துள்ளார்; . . . சைவசித்தாந்தத் தத்துவத்தை விளக்கும் 'அடிப்படை' நூல், 'சிவஞான போதம்' ஆகும்.*[35]

'சிவஞானம்' என்பது ஆகமத்தால் நிகழும் ஞானமாகும். ஆகமங்களின் பொருளை வரையறுத்துத் தெளிவுபடுத்துவதால் 'சிவஞானபோதம்' எனப்பட்டது என்றும் கொள்ளலாம். சரியை, கிரியை, யோகமென்னும் மூன்று பாதங்களையும் ஆராயும் நூல்களைக் கடந்து ஞானபாதத்தை ஆராய்வதால் 'உயர்சிவ ஞானபோதம்' எனப்பட்டது.

இவண், சிவஞானபோதத்திற்கு 'மாபாடியம்' கண்டருளிய மாதவச் சிவஞானசுவாமிகள் கூறுவது சுட்டத்தகும் :

> *"உயர் சிவஞானபோதம் என்றது, ஏனை மூன்று பாதத்தை ஆராயும் நூல்கட்கு மேற்பட்ட 'சிவஞானபோதம்' என்றவாறு; எனவே, அந்நூல்கள் உணர்ந்தபின்னர் இந்நூல் கேட்கற்பாற்று என்பது பெற்றாம்; பெறவே, முன்னர்த் தீக்கையுற்றுச் சிவாகமங்களை ஓதி, அதன்பின் ஏனை மூன்று பாதங்களை ஆராயும் நூலை முறையே கேட்டு, அவ்வாறு ஒழுகி, மனந் தூயராய் நித்தியாநித்திய உணர்வு தோன்றிப் பிறவிக்கு அஞ்சி வீடுபேற்றின் அவாமிக்குண்டாயவழி, அவர்க்கு இந்நூல் உணர்த்துக என்பது போந்ததெனக் கொள்க."*[36]

நூலின் தொடக்கத்தில் உள்ள "மங்கல வாழ்த்து, அவையடக்கம்" என்னும் இரண்டு நீங்கலாகப் பன்னிரண்டு நூற்பாக்கள் உள்ளன. இவற்றில் அமைந்த அடிகள் - 40; மொத்தச் சொற்கள் - 216; மொத்த எழுத்துக்கள் - 624.[37]

இப்பன்னிரண்டு நூற்பாப் பொருளை ஏதுக்களானும், எடுத்த மொழியானும் ஆராய்ந்து கூறுவதற்கு ஏதுவாக 39 அதிகரணங்கள், 81 வெண்பாக்கள் உள்ளன.[38]

இந்நூல் இரு அதிகாரங்களைக் கொண்டது : (1) பொது அதிகாரம்; (2) சிறப்பு அதிகாரம். பொது அதிகாரம், (1) பிரமாண இயல்;

(2) இலக்கண இயல் எனும் இரு இயல்களைக் கொண்டது; அவ்வாறே, சிறப்பு அதிகாரமும், (1) சாதன இயல்; (2) பயனியல் எனும் இரு இயல்களைக் கொண்டது.[39]

இந்நூலின் சிறப்புக் குறித்துப் பல்வேறு அறிஞர்களும் பலவகையாகப் போற்றுவர். அவற்றுள் ஒருசில மட்டும் இவண் தரப்படுகின்றன.

*"இந்திய மண்ணில் மட்டுமன்றி, உலக முழுவதிலும் புத்த சமயக் கருத்துக்களையும், வேதாந்தக் கருத்துக்களையும் மறுக்குமுகமாக அமைந்த சிறந்த தத்துவநூல் எனில் மிகையன்று."*[40]

எனத் தமது ஆங்கில நூல் ஒன்றில், சிவஞானபோதச் சிறப்புக் குறித்துக் குறிப்பிடுவர், கே. லோகநாதன் முத்தரையன்.

*"இந்நாட்டில் தோன்றி வழங்கிவரும் தத்துவத்துறை நூல்களில் தலைசிறந்த அறிவுநூலாக விளங்குவது சிவஞானபோதம் ஆகும். இந்நூல் அளவிற் சிறியது; சொற்சுருக்கமும் பொருட்பெருக்கமும் உடையது; அளக்கலாகா மலையையே தன்னுள் அடக்கிக்காட்டும் ஆடிபோல, அறிவு நூல்களின் பொருளனைத்தையும் தன்னுள்ளே அடங்கக்கொண்டு நிற்பது."*[41]

என்பர் ஆ. ஆனந்தராசன்.

ர. ராமானுஜாச்சாரி கூறுவது வருமாறு :

*"மெய்கண்டார், சைவசித்தாந்தக் கொள்கைக்கு ஒரு புதிய எழுச்சியை அளித்தார். சைவசித்தாந்தக் கொள்கை, சித்தாந்த சமயம் ஆகியவை பற்றிய தெளிவான அமைப்பை, அவரது சிறந்த நூலான சிவஞானபோதம் அளிக்கிறது."*[42]

இந்நூலின் சிறப்புக் குறித்துத் திரு.வி.க. கூறுவது வருமாறு :

*"சிறுநூல், பெரிய உலகையும் எண்ணிறந்த உயிர்களையும், எல்லையற்ற இறையையும் காட்டுதல் வியப்பன்றோ? 'சிவஞானபோதம்' சுருங்கியசொல்லும் பெருகிய பொருளும் உடையது; சிவஞானபோதச் சொல், ஆலின் விதை போன்றது; அதன் பொருள் மரம் போன்றது."*[43]

சிவஞானபோதத்தை ஆராய்ந்து, அதன் அருமை பெருமைகளை உலகிற்கு எடுத்துரைத்த தமிழ்ப் பேரறிஞர்களுள் குறிப்பிடத்தக்கவர் மறைமலையடிகளாவர். அவர் கூறுவது வருமாறு :

*"சைவ சித்தாந்தம் பதினான்கனுட் சிறந்ததாயும், சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம் முதலான வழிநூல் புடைநூல்கட்கு முதனூலாயும், சுவேதவனப் பெருமாள் என்னும் பிள்ளைத் திருநாமம் உடைய ஆசிரியர் மெய்கண்டதேவ நாயனாரால் ஞானபாதப் பொருளெல்லாஞ் சுருக்கிப் பன்னிரண்டு சூத்திரங்களில் அருளிச் செய்யப்பட்டதாயும் உள்ள சிவஞானபோத நூல், உரையிடற்காகா அருமை பெருமையுடையதாய் விளங்குகின்றது."*[44]

- இவ்வாறு பல்வேறு சிறப்புக்களையும் தன்பாற் கொண்டு, தனக்கு ஈடு இணை ஏதுமின்றி விளங்கும் ஒப்பில் பெருநூல் 'சிவஞானபோதம்' எனலாம்.

## ஆசிரியர் குறிப்பு

இத்தகு 'சிவஞானபோதம்' எனும் செந்தமிழ்ப்பனுவல், மெய்கண்டார் இவ்வுலகிற்கு அளித்த அருட்கொடை எனலாம். தமிழ் நூல்களில் காலத்தாற் பழமையான தொல்காப்பியத்திலும், அதன் பின்னர்த் தோன்றிய சங்க இலக்கியங்களிலும்[45], திருக்குறளிலும்[46], சைவத்திருமுறைகளிலும்[47] சைவசித்தாந்தக் கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன. எனினும் சைவசித்தாந்தக் கொள்கைபற்றித் தெளிவான அமைப்பைத் தம் நூல் வாயிலாகத் தமிழ் உலகிற்கு வழங்கியவர் மெய்கண்டாரே ஆவர்.

வேற்றவர் வருகையாலும், பிறவாற்றாலும் தமிழ்ப்பற்றும், சைவப்பற்றும் குன்றிச், சைவசித்தாந்த நூற்பயிற்சியும் குறைந்த காலத்தே, மெய்கண்டார் தோன்றி, முன்னைச் சைவசித்தாந்தப் பேரொளி எங்கும் பரவும் வண்ணம் 'சிவஞானபோதம்' எனும் ஆராவமுதத்தை அளித்தருளினார்.[48] ஆதலின் இவரை 'அருட்கொடைஞர்' எனலாம்.

தொண்டைநாட்டுக்கும், சோழநாட்டுக்கும் நடுவில் உள்ள திருமுனைப்பாடி நாட்டில் 'திருப்பெண்ணாகடம்' என்ற ஓர் ஊர் உண்டு. இதனைக் 'கடந்தை' என்றும் கூறுவர். சம்பந்தர், அப்பர் ஆகியோரால் பாடப்பெற்ற சிறப்பினை உடையது.[49]

அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவரான கலிக்கம்ப நாயனார் தோன்றிய சிறப்பினை உடையது இவ்வூர்.

*"பெருமை உலகுபெற விளங்கும் மேல்பாற் பெண்ணா கடமூதூர்"*[50]

எனச் சேக்கிழார் ஏத்துவர்.

இத்தகு பெருமைமிக்க திருப்பெண்ணாகடத்தில், சைவ வேளாளர் குலத்தில், அச்சுதக்களப்பாளர்[51] என்னும் சைவ மெய்யன்பர் ஒருவர் பிறங்கினார். இவர், மணமுடித்து ஆண்டுகள் பலவாகியும், மகப்பேறின்றி வருந்தினார். தம் குல ஆசிரியராகிய திருத்துறையூர் அருணந்தி சிவாசாரியர்பாற் சென்று, குறை நீங்க வழிகேட்டார். அப்போது, சிவாசாரியர், திருமுறையை வழிபட்டுக் கயிறு சாத்திப் பார்த்தார்.

*"பேயடையாப் பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை*
*வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டாவொன்றும்*
*வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்*
*தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாம் தீவினையே"*[52]

என்னும் சம்பந்தரின் திருவெண்காட்டுப் பதிகப்பாடல் வந்துற்றது. இப்பாடலில், திருவெண்காட்டிலுள்ள முக்குளநீரில், நீராடுபவர்க்குப் பிள்ளையினோடு எண்ணிய யாவும் கைகூடும் என அறுதியிட்டுக் கூறப்பட்டுள்ளதால், சிவாசாரியர் "திருவெண்காடு சென்று நீரில் மூழ்கி, அக்கோயிலிலுள்ள இறைவனை வழிபட்டு வருக" என அச்சுதக் களப்பாளருக்குக் கட்டளையிட்டார்.

சிவாசாரியரின் ஆணையைத் தலைமேற்கொண்ட அச்சுதக் களப்பாளர், தம் துணைவியாரோடு திருவெண்காட்டு முக்குள நீரில் ஒரு மண்டலம் மூழ்கி, அவ்விறைவனை வணங்கிவர, இறைவன், அவர் கனவில் தோன்றி, "இப்பிறவியில் உனக்கு மகப்பேறு கிட்டும் பான்மை உனக்கு இல்லையெனினும், ஞானசம்பந்தரின் பாடலை நம்பி வழிபட்டமையால், ஞானசம்பந்தனைப்போல் உனக்கு ஒருமகவை அளிக்கிறோம்" எனத் திருவாய் மலர்ந்தருளினார். பின் ஒரு நன்னாளில், சித்தாந்தச் செந்நெறி செழித்து விளங்கி, நிலவுலகம் உய்யும் பொருட்டு 'மெய்கண்டார்' தோன்றினார். குழந்தைக்குத் திருவெண்காட்டு இறைவனாம் 'சுவேதவனப் பெருமாள்' என்னும் திருநாமத்தையே தந்தையார் சூட்டி மகிழ்ந்தார்.

மெய்கண்டாருடைய குடும்ப வரலாற்றுப்படி, அவர் 'ஊருடைய, பெருமாளான எடுத்தது வலிய வேளார்' என்று அழைக்கப்பட்டார் எனத் திருவண்ணாமலைக் கோயிலிலுள்ள கல்வெட்டால் தெரியவருகின்றது. இக்கல்வெட்டின்காலம் கி.பி. 1232. . . . ஆனால், சி.வை. சதாசிவப் பண்டாரத்தார், 'ஊருடைய பெருமாள்' என்பதும், 'எடுத்தது வலிய வேளார்' என்பதும் மெய்கண்டாருக்கு அளிக்கப்பட்ட பட்டங்களாகும் என்பர்.[53]

திருவெண்ணெய்நல்லூரில் தம் மாமனார் இல்லத்தில் வளர்ந்த சுவேதவனப் பெருமாள், மூன்று வயதிற்குள் ஞானம் அடையக்கூடிய பக்குவநிலையை எய்தினார். அப்பொழுது, பரஞ்சோதி மாமுனிவர் ஆகாயவழியே சென்றபோது, இவ்விடம் வந்ததும் ஆகாய கமனம்

தடைப்பட்டதைக்கண்டு, கீழிறங்கிவந்து சுவேதவனப் பெருமாளுக்கு ஞானத்தைப் புகட்டினார். தாம் உபதேசித்த குழந்தைக்குத் தம் குருவின் பெயராகிய சத்தியஞான தரிசினிகள் என்பதன் தமிழ் வடிவமாகிய மெய்கண்டார் என்ற பெயரைச் சூட்டினார் என்பர்.[54]

இவ்விடத்துக் கா. சுப்பிரமணியபிள்ளை கூறுவது குறிக்கத்தகும்:

> *"சிவபெருமான் தக்க பக்குவமுடையார்க்குக் குருவாய் வந்துணர்த்துவது பெரும்பான்மையும் தமது பேரன்பரை நிலைக்களமாகக் கொண்டேயாம். பரஞ்சோதி மாமுனிவர், மெய்கண்ட தேவர்க்கு மெய்யுணர்வு அளித்த காலை, அவர் கடவுளோடு இரண்டறக் கலந்து நிற்கும் நிலையினின்று அருள் செய்தாராகலின், சிவபெருமானே நமது நாயனாருக்கு உண்மைப் பொருள் உணர்த்தியதாகக் கொள்ள வேண்டும்."*[55]

மெய்கண்டார், கலைஞானம் அனைத்தையும் திருவெண்ணெய்நல்லூர் பொல்லாப்பிள்ளையார்பால் கேட்டுத் தெளிந்தார்; பின்னர் அதே சந்நிதியில் நிட்டைகூடிச் சிவஞானபோதத்தைத் தம் மாணவர்க்கு அருளிச் செய்தார்.[56] பின், தம் குல குருவாகிய சகலாகம பண்டிதரின் ஆணவத்தை நீக்கி, மெய்யுணர்வை உபதேசித்துத், தம் நூலுக்கு வழிநூல் செய்யுமாறு உத்தரவிட்டார். பின் தம்முடைய மாணாக்கர்கள் நாற்பத்தி ஒன்பது பேருக்கு மெய்யுணர்வை அருளி, ஐப்பசி சுவாதி நாளில் சிவபரம்பொருளுடன் இரண்டறக் கலத்தலாகிய சுத்தாத்துவித முத்திநிலை எய்தினர்.[57]

> *"பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித*
> *மெய்கண்ட நாதனருள் மேவுநாள் எந்நாளோ"*[58]

என்னும் தாயுமானவர் திருவாக்கால் மெய்கண்டாரின் சிறப்பை உணரலாம்.

இச் சிவஞானபோதத்திற்கு அக்காலத்தில் உரைகண்டவர் பலர். மெய்கண்டசந்தானத்திலே, வழிவழியாகக் குருவருள் பெற்ற ஆசிரியர் பலர் உரை எழுதியுள்ளனர். அம்பலவாண தேசிக மூர்த்திகள் 'சிவஞானசிந்தனை' என்றதோர் உரை அருளினர். இவைதவிரப் பழைய உரை ஒன்றும் இருந்தது. திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த பாண்டிப்பெருமாள் என்பவர் ஒருவிருத்தியுரையும் பதவுரையும் இயற்றினர். அவற்றுள் பதவுரைப் பகுதியில் சில மட்டும் கிடைத்துள்ளன. மாதவச் சிவஞானயோகிகள் இந்நூலுக்குச் சிற்றுரையும், பேருரையாகிய 'மாபாடியமும்' அருளி உள்ளனர்.[59] இவர் உரைகள், சிவஞானபோத நூலின் மெய்ப்பொருளை அறியத் துணை செய்வன ஆகும்.

### நூல் நுவலும் பொருள்

இந்நூலின் தொடக்கத்தில் "கல்லா னிழன்மலை" என்னும் மங்கல வாழ்த்துப்பாடல் அமைந்துள்ளது. இப் பாடல், பல்வேறு சிறப்புக்களை உடையது.[60]

நூற்பாக்கள் - 12. தமிழிலுள்ள உயிரெழுத்து - 12. எனவே மொழிக்கு உயிரெழுத்துப் போலச் சைவசித்தாந்த அறிவுக்கு இப் பன்னிரண்டு நூற்பாவாம். மொத்தச் சொற்கள் - 216; தமிழிலுள்ள உயிர்மெய்யும் இருநூற்றுப் பதினாறே என்பதும் இவண் கருதத்தக்கது. இயல்கள் நான்கு; தமிழில் இயம்பப்படும் உறுதிப் பொருள் 'அறம் பொருள் இன்பம் வீடு' எனும் நான்கே. ஒவ்வோர் இயலிலும் மும்மூன்று நூற்பா; தமிழில் அமைந்த நூல்களும் 'இயல் இசை நாடகம்' எனும் மூன்றிலடங்கும்.[61]

இதன்கண் அமைந்த 12 நூற்பாக்களில் முதல்மூன்று, 'இறை, தளை, உயிர்' ஆகிய மூன்றும் உள்பொருளே என்பதை நிறுவுகின்றன. எனவே இவற்றைப் 'பிரமாணஇயல்' என்பர்; அடுத்துள்ள மூன்று நூற்பாக்களும் இவற்றின் இலக்கணங்களை விரித்து உரைப்பன; எனவே இவற்றை 'இலக்கணவியல்' என்பர்; இம்முப்பொருள்களில் உயிரானது, இறைஅருள் வழிநின்று எஞ்சிய இரண்டையும் உணர்தற்குரியது. ஆதலின், அவ்வுயிர், தவத்தால் குருவருளைப் பெற்று உய்திபெற வேண்டுமென்பதை அடுத்துள்ள மூன்று நூற்பாக்களும் இயம்புகின்றன. ஆதலின் இவற்றைச் 'சாதனவியல்' என்பர்; அச் சாதனத்தால் உயிரானது பாசநீக்கம் பெற்று, சிவப்பேறு எய்தும்; அச் சிவப்பேற்றினின்றும் வழுவாமல் இருத்தற்குரிய அருமைகளை அடுத்துள்ள மூன்று நூற்பாக்கள் கூறுகின்றன; எனவே இவற்றைப் 'பயனியல்' என்பர்.

இதன்கண் அமைந்த நூற்பாக்களும் வெண்பாக்களும் சுவையுடையன. 'அமைச்சு அரசு ஏய்ப்ப'; 'காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்' என்பனபோல் வரும் உவமைகள்[62] நூற்பாக்களிலேயே வந்துள்ளன. 'பண்ணையும் ஓசையும்போல'; 'அரக்கொடு சேர்த்தியணைத்த அக் கல்போல' என்பன போன்ற உவமைகள்[63] வெண்பாக்களிலேயே வந்துள்ளன. 'ஊசல்கயிறு அற்றால்; வேம்புகின்ற புழுப்போல'[64] என்பனபோல் வரும் உவமைகள் அதிகரணங்களில் வரும் ஏதுக்களில் காணப்படுவன; அரிய தத்துவக் கூறுகளை இவ்வாறு உவமைகள் மூலம் விளக்கும் ஆசிரியரின் அருள் உள்ளம் எண்ணி எண்ணிப் போற்றுதற்குரியது.[65]

### 2.4. சிவஞானசித்தியார் - நூற்குறிப்பும் சிறப்பும்

சிவஞானபோதத்திற்கு வழிநூலாகத் திகழ்வது இந்நூல். "மெய்கண்டான் நூல் சென்னியில் கொண்டு சைவத்திறத்தினைத்

தெரிக்கலுற்றாம்"[66] என அருணந்தி சிவாசாரியர் கூறுவது 'வழிநூல்' என்பதைக் குறிப்பதாகும். இந்நூல் '(1) சுபக்கம், (2) பரபக்கம்' என்னும் இருபெரும் பிரிவுகளை உடையது. சிவஞானபோதத்தில் அவையடக்கமாக வரும் "தம்மை உணர்ந்து . . ." எனும் செய்யுளின் முதல் 2 அடிகளுக்குரிய விளக்கமாகச் சுபக்கத்தையும், பின் இரு அடிகளின் விளக்கமாகப் பரபக்கத்தையும் அமைத்துள்ளார் இந்நூலாசிரியர்.

இந்நூல் 328 விருத்தப்பாக்களால் ஆனது.[67]

சமயசாத்திரம் ஒன்றை முதன்முதலில் விருத்தப்பாவால் எடுத்துக்கூறிய பெருமை அருணந்திசிவத்துக்கு உண்டு. இந்நூல், ஆகம உணர்வின் பிழிவு என்பது மட்டுமன்று, அனுபவ உணர்வின் சிகரமும் ஆகும் என்பர் அறிஞர்.[68]

*"பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியின் சித்தியிலே*
*ஓர்விருத்தப் பாதி போதும்"*[69]

என்பர் குருஞானசம்பந்தர்.

*"பாதி விருத்தத்தால் இப்பார்விருத்தமாக உண்மை*
*சாதித்தார்"*[70]

என்பர் தாயுமானவர்.

*"சிவத்துக்கு மேல் தெய்வமில்லை*
*சித்திக்குமேல் நூலில்லை"*

என்பதும் பழமொழி.

சிவஞானம் சித்தித்தற் பொருட்டாகச் செய்யப்பட்டமையின் இது 'சிவஞானசித்தி' என்னும் பெயர் பெற்றது; இஃது இந்நூலுக்கு ஆசிரியர் இட்ட பெயர் என்றும்; "இந்நூலுக்கு உரைகண்டார் அறுவர்" என்றும் கூறுவர்.[71]

## ஆசிரியர் குறிப்பு

இந்நூலாசிரியராகிய அருணந்தி சிவாசாரியர், தமிழ்நாட்டின் ஒரு பகுதியாகிய நடுநாட்டில், பெண்ணையாற்றின் வடகரையிலே உள்ள திருத்துறையூரில் ஏறக்குறைய 700 ஆண்டுகளுக்குமுன், முப்பொழுதும் திருமேனி தீண்டும் சிறப்பையுடைய ஆதிசைவ அந்தணர் மரபில் தோன்றியவர். 'சகலாகம பண்டிதர்' என்னும் சிறப்புப் பெயர் எய்தியவர். சித்தாந்த நன்னெறிகளைத் தம் மாணாக்கர்களுக்கு உபதேசித்தவர்.

மெய்கண்ட தேவரால், 'அருணந்திசிவாசாரியர்' என்னும் தீட்சாநாமம் சாத்தப்பெற்ற சிவாகம பண்டிதர், தம் ஆசிரியரின் ஆணைக்கிணங்கச் 'சிவஞானசித்தியார்' என்னும் நூலினை அருளிச்

செய்தனர். மேலும், 'இருபா இருபஃது' என்ற நூலினையும் செய்தருளினர். பின்பு, இவ்விரு நூல்களையும் சிவஞானபோதத்தையும். திருப்பெண்ணாகடத்தில் அவதரித்த மறைஞானசம்பந்தருக்கு உபதேசித்து இறைவன் திருவடி நீழல் எய்தினர்.[72]

### நூல் நுவலும் பொருள்

சிவஞானசித்தியார் சுபக்கம், 'அளவையியல்' பகுதியில் சைவசித்தாந்தம் கூறுகின்ற மூவகை அளவை இலக்கணங்களைக் கூறுகின்றார் ஆசிரியர். இவை, முப்பொருள்கள் உண்டு என அறிதற்கும், தெளிதற்கும் கருவியாக உள்ளன. பிரமாணவியலில், "பதியுண்மை, மாயையே முதற்காரணம், முதல்வனது தடத்தஇயல்பு, திருவுருவம், சத்தியின் வடிவு, இருவினைகள், உயிர்இறந்தும் பிறந்தும் வருதல், உலகப்படைப்பின் நோக்கம், முப்பத்தாறு தத்துவங்கள், மும்மலங்கள், உயிரின் உண்மை" ஆகியன விளம்பப்படுகின்றன. இலக்கணவியலில், "உயிரைப் பற்றிய பல்வேறு சமயக் கருத்துக்களின் மறுப்புக்கள், அவத்தைகள்" ஆகியன விளக்கப்படுகின்றன. "முதல்வனது தன்னியல்பு, சத்து, சிவசத்து" ஆகியன விளம்பப்படுகின்றன. சாதனவியலில், உயிரின் உண்மையியல்பு, "இறைவன் உயிர்களுக்கு அருளும் முறைமை, தீக்கைகள், சிவநெறி, நால்வகை நெறிகள், ஐந்தெழுத்து, சிவஞானம்" ஆகியன மொழியப்படுகின்றன. இறுதியாக உள்ள பயனியலில், "இறைபணி நிற்றல், பரமுத்தி, மலநீக்கம், அணைந்தோர்தன்மை" முதலாயின சொல்லப்படுகின்றன.

இதன் பெருமையை உணர்ந்த தருமை யாதீன குரு முதல்வராகிய குருஞானசம்பந்தர், தமது அருள் மரபில் வருவோர்க்கு, இதனையே முதன்மை உபதேச நூலாக வைத்துள்ளார்.

## 2.5. இருபாஇருபஃது - நூற்குறிப்பும் சிறப்பும்

அருணந்திசிவம் இயற்றிய மற்றொரு நூல் இது. இந்நூல் 10 திருவெண்பாக்களையும், 10திருவாசிரியங்களையும் உடையது. எனவே, யாப்பின் அடிப்படையிலும், பாடலின் அடிப்படையிலும் இப்பெயர் பெற்றது. இது அந்தாதித் தொடையில், மண்டலித்து முடியும் வகையில் அமைந்துள்ளது. இந்நூலாசிரியர், தமக்கு ஏற்பட்ட ஐயங்களைத் தம் ஞானாசிரியராகிய மெய்கண்டாரிடத்து வினவுமுகமாக இதன் போக்கு அமைந்துள்ளது.

### நூல் நுவலும் பொருள்

இந்நூற் பாடல்களைப் பொருள் வகையில் ஐந்தாகப் பிரிக்கலாம். குருவழிபாடு - 1 பாடல், பதிக்கொள்கைகள் - 3 பாடல்கள் (2, 12, 17), உயிர்க் கொள்கைகள் - 8 பாடல்கள் (3, 5, 6, 7, 8, 9, 11, 13),

தளைக்கொள்கைகள் - 5 பாடல்கள் (4, 10, 14, 15, 16); திருவருளைப் பற்றி 3 பாடல்கள் (18, 19, 20) என்று அமைந்துள்ளன.

பதிஞான நிலைபேறு அடைவோர்க்குப் பாசஞானத்து எழும் ஐயங்கள், அனைத்தும் அகலப் பெற்றிருக்க வேண்டும். எனவே, பாசம் பற்றிய எல்லா ஐயங்களையும் இந்நூல் எழுப்பிக் கசடறக் களைகின்றது. மேலும், சகலாகம பண்டிதராகிய இந்நூலாசிரியர், படிப்பவர்க்கு மலைவு தோன்றாவண்ணம் எல்லா ஆகம சாரங்களையும், பாச நீக்கக் கருவியாகிப் பயன்படுமாறு தடைவிடைகளால் அருளிச் செய்கின்றார் எனலாம். பாசம் நீங்கினாலன்றிச் சிவத்திடம் அன்பு வாராது. எனவே, பாசநீக்கமே முதற்கண் வேண்டப்படுவது. பாசநீக்கமே சிவப்பேற்றை அளிக்கும். இவ்வகையில் இந்நூலாசிரியர், இதன் வாயிலாக ஞானச் செல்வங்களை வாரி வழங்கியுள்ளார் எனலாம்.[73]

## 2.6. உண்மை விளக்கம் - நூற்குறிப்பும் சிறப்பும்

'உண்மை' என்பது ஈண்டுத் 'தத்துவம்' என்ற பொருளில் அமைந்து உள்ளது. உலகத் தோற்றத்திற்கு அடிப்படை, தத்துவங்களாகும். இவற்றை விவரிக்கும் நூலாதலின் 'உண்மை விளக்கம்' எனப்பட்டது. மேலும், சைவசித்தாந்த உண்மைகளாகிய 'பதி, பசு, பாசம்' இவற்றை விளங்க உரைப்பதால், இப்பெயர் பெற்றதாகவும் கூறலாம். இந்நூலின்கண் காப்புச் செய்யுள் உட்பட 54 வெண்பாக்கள் உள்ளன. வினாவும் விடையுமாக அமைந்துள்ளது. வினா எழுப்புபவர், இந் நூலாசிரியராகிய மனவாசகங்கடந்தாராகவும், விடை அளிப்பவர் மெய்கண்டார் ஆகவும் விளங்குகின்றனர். விடையாக அமைந்த செய்யுட்கள் - 45. அவற்றோடு மூன்றாவது செய்யுள், விடைகூற இசைந்தமையைத் தெரிவிக்கும் ஆசிரியர் கூற்றாக அமைந்து உள்ளது. 7 செய்யுட்கள் (1, 2, 23, 30, 39, 49, 53) மாணாக்கர் கூற்றாக உள்ளன.

### ஆசிரியர் குறிப்பு

இந்நூலாசிரியர், மனவாசகங் கடந்தார் ஆவர். திருவாசகத்தில் 'மனவாசகங் கடந்தான்' என்ற தொடர் சிவபெருமானைக் குறிப்பதாக உள்ளது.[74] மேலும், இந்நூலும் 'வாக்குமனம் இறந்த வான்கருணையாளன்' என்று இறைவனைக் குறிப்பிடும். ஆதலின், இறைவனின் நிலையைக் குறிப்பிடும் இப்பெயரையே தம் பெயராகக் கொண்டவர் இவ்வாசிரியர் என்பது புலனாகும். இவர் மெய்கண்டாரின் நேர்மாணவர். எனவே இவரும் அருணந்தி சிவாசாரியரும் ஒருசாலை மாணவர் ஆவர். இவர் திருவதிகை என்ற ஊரினர் என்ற குறிப்பு மட்டுமே தெரியவந்துள்ளது.[75]

### நூல் நுவலும் பொருள்

இந்நூலின்கண், "மாயை, ஆன்மதத்துவம், ஐம்புலன், ஞானேந்திரியம், கன்மேந்திரியம், வித்தியா தத்துவம், சிவதத்துவம்,

ஆணவம், கன்மம், உயிர், சிவம், நாதாந்த நடனம், ஞானநடனம், ஐந்தெழுத்துண்மை, முத்திநிலை அனுபவம்'' முதலாயின விளக்கப்படுகின்றன. இந்நூலின்கண்ணும் வினா விடைகள் இடம்பெற்றுள்ளன.[76]

## 2.7. சிவப்பிரகாசம் - நூற்குறிப்பும் சிறப்பும்

சந்தானகுரவருள் நான்காமவராகிய உமாபதி சிவாசாரியர், எட்டு சாத்திரநூல்களை இயற்றியுள்ளார். அவை 'சித்தாந்த அட்டகம்' எனப்படும். அந்நூல்களாவன : சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடு தூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்பநிராகரணம். இவற்றுள் 'சிவப்பிரகாசம்', சிவஞானபோதத்தின் சார்பு நூலாகும். ஆகவே, சிவஞானபோதம், சித்தியார் ஆகிய நூல்களை அடியொற்றிய கருத்துக்களும், இறைவன் திருவருளால் இந்நூலாசிரியருக்கு உணர்த்தப்பட்ட செய்திகளும் ஆகிய இவை இந்நூலெங்கும் இடம்பெற்றுள்ளன. இதனை, "விளம்பிய நூல் அவையிரண்டும் விரும்பி நோக்கிக் கருத்தில் உறை திருவருளும் இறைவன் நூலும் கலந்து"[77] என்று இவரே கூறுவதுகொண்டு உணரலாம். இதன்கண் காப்புச் செய்யுள் தவிர 100 விருத்தப்பாக்கள் அமைந்துள்ளன. "பொது, உண்மை" எனும் இரு அதிகாரங்கள்; அதிகாரத்திற்கு ஐம்பது ஐம்பது பாடலென அமைந்துள்ளன. இந்நூல் பெரும்பாலும், மெய்கண்டாரின் சிவஞானபோதத்தை அடியொற்றிச் செல்வது என்பதை முதல் நூற்பாத் தொடங்கி 12ஆம் நூற்பாவரை காணப்படும் செய்திகளை வரிசைப்பட அமைத்துள்ளமை கொண்டு அறியலாம்.[78] இந்நூலாசிரியர் அக, புறச் சந்தானகுரு முதல்வர்களுக்கும், தம் ஆசிரியரான மறைஞானசம்பந்தருக்கும் வணக்கம் கூறுகின்றார். இவ்வாறு வணக்கம் கூறும்முறை, இந்நூலுக்கே அமைந்த தனிச் சிறப்பாகும். "சிவாகமங்களாகிய கடலைக் கடத்தற்கு உதவும் மரக்கலம் போன்றது"[79] என நிரம்ப அழகிய தேசிகர் பாராட்டுகிறார்.

செறிவான சொற்கட்டு, தருக்கமுறை, ஆழமான கருத்து ஆகியன இந்நூலுக்குரிய தனித்தன்மைகள் எனலாம். இந்நூலுக்குப் பல உரைகள் உள்ளன. மதுரைச் சிவப்பிரகாசர் எழுதிய பேருரை, காஞ்சிபுரம் இலக்கணம் சிதம்பரநாத முனிவர் உரை, நல்லசிவதேவர் சிந்தனை உரை, திருவுரு மாமலைஅடிகள் உரை, யாழ்ப்பாணம் திருவிளங்கம் எழுதிய புத்துரை ஆகியன குறிப்பிடத்தக்கன.

### ஆசிரியர் குறிப்பு

அருணந்தி சிவத்தின் சீடராகிய மறைஞான சம்பந்தரின் சீடர் உமாபதி சிவாசாரியர் ஆவர். இவர், புறச் சந்தானகுரவருள் நான்காமவர் ஆவர். தில்லை வாழ் அந்தணர் மரபில் தோன்றியவர். வடமொழி,

தென்மொழி ஆகிய இருமொழிகளிலும் வல்லவர். ஒருநாள் தில்லைக கோயில் வழிபாட்டை முடித்துக் கொண்டு தில்லைவாழ் அந்தணருக்குரிய பல விருதுகளுடன், ஒரு சிவிகையிலேறி வீட்டைநோக்கிச் சென்றுகொண்டு இருந்தார். வழியில் இதனைக் கண்ட மறைஞானசம்பந்தர், தம் சீடர்களை நோக்கிப் "பட்டகட்டையில் பகல் குருடு ஏகுதல் பாரீர்" என்று கூறினார். இதனைக் கேட்ட உமாபதிசிவம், உடனே சிவிகையினின்றும் கீழிறங்கி, மறைஞானசம்பந்தரின் திருவடிகளில் வீழ்ந்து, வணங்கி, அவர் சொன்ன வாக்கியத்தின் பொருளை வினவினார். ஆசிரியரும் அவ்வாக்கியத்தின் பொருளைத் தெரிவித்தருளினார்.

பட்டகட்டை - சிவிகை,
பகல்குருடு - பகலிலே விருதாக விளக்கெடுத்துச் சென்றது.

இது, வெளிப்படைப் பொருள்.

**இதன் குறிப்புப் பொருள் :**

பட்டகட்டை - இன்பம் இல்லாத உலகம்
பகல்குருடு - கல்விகற்றும் இதனை அறியாதிருத்தல்.

உடனே உமாபதிசிவம் சிவஞானப் பேறொன்றினையே விரும்பி ஆசாரியருக்குத் தொண்டு செய்துவந்தார்.

மறைஞானசம்பந்தரால் ஆட்கொள்ளப்பெற்று அவருடன் செல்கையில், செங்குந்தர் வார்த்தகூழை உண்டதால், தில்லை மூவாயிரவர் இவரைக் குலமுறை பிறழ்ந்தவராகக் கருதி, நடராசப் பெருமானுக்குப் பூசை செய்யத் தகுதியற்றவரென்று இகழ்ந்தனர். எனவே இவர் கொற்றவன் குடிக்குச் சென்று மடம் அமைத்து அங்கு வாழ்ந்திருந்தனர். தில்லைப்பெருமான் அருள்பெற்றுப், பெற்றான் சாம்பான் என்ற விறகுவெட்டிக்கும், பெருமான் திருமஞ்சனநீர் தினமும் பட்டுப் பரிபக்குவமடைந்திருந்த முள்ளிச் செடிக்கும், தனது அருட்பார்வையால் முத்தி கொடுத்தார். நடராசப் பெருமான், திருவிழாவின்போது ஏறாத கொடியை ஏற்றுவித்தார். பின் சித்தாந்த அட்டகமான எட்டு நூல்களையும், வடமொழியில் பௌஷ்கர ஆகமத்துக்கு விருத்தியொன்றும், தமிழில் கோயிற் புராணம், திருத்தொண்டர் புராணசாரம், திருமுறை கண்ட புராணம், சேக்கிழார் நாயனார் புராணம், திருப்பதிக் கோவை, சிவக்ஷேத்திர சிவநாமக்கலிவெண்பா முதலியவற்றையும் செய்தருளினார். இவைதவிர, 'ஞானபூசாகரணம், ஞானபூசை, ஞான தீக்ஷாவிதி, ஞானஅந்தியேட்டி, போசனவிதி' என்னும் ஐந்து சிறுசாத்திர நூல்களையும் இவர் செய்தனவாகக் கூறுவர்.[80] ஸ்ரீ உமாபதி சிவாசாரியர், பல நல்லாசிரியர்க்குச் சிவஞானோபதேசஞ்செய்து, பலநாள் ஞானநிட்டை

செய்துகொண்டு இருந்து, கொற்றவன்குடிக்கண்ணே, சித்திரை மதியிலே அத்த நட்சத்திரத்திலே சுத்தாத்துவித முத்தியடைந்தார்.[81]

சிதம்பரம் இரயில் நிலையத்திற்கு அருகிலுள்ள கொற்றவன்குடி என்ற ஊரில் உமாபதி வாழ்ந்து வந்த மடம் இன்றும் உள்ளது.[82]

### நூல் நுவலும் பொருள்

பாயிரத்தில் திருக்கயிலாய பரம்பரை பற்றியும், சைவநூல்களின் இயல்பும், தீக்கை முறைகளும் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. "புறச்சமயத்தவர்க்கு இருளாய்"[83] என்ற செய்யுளால் சைவசித்தாந்தச் சிறப்பு விளக்கப்படுகிறது. பொது அதிகாரத்தில் "பதிஇயல்பு, பசுஇயல்பு, பாச இயல்பு, அவத்தை இயல்பு" ஆகியன மொழியப்படுகின்றன. உண்மையதிகாரத்தில் "ஆன்ம இயல்பு, ஐந்தவத்தை இயல்பு, தன் உண்மை உணர்த்தும் தன்மை, ஞானவாய்மை, ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி ஆன்ம லாபம், உபாயநிட்டை, பரமுத்தியின் இயல்பு, பாசநீக்கம், வினை நீக்கம் அணைந்தோரின் தன்மை, ஞானத்தில் யோகம், கிரியை, சரியை" ஆகியன விளக்கப்படுகின்றன.

## 2.8. திருவருட்பயன் - நூற்குறிப்பும் சிறப்பும்

திரு +அருள் +பயன் =திருவருட்பயன். திருவருளால் உண்டாகும் பயன்; திருவருளும் பயனும்; திருவருளாகிய பயன்; என்றெல்லாம் பொருள் கொள்ளும்படி இஃது அமைந்துள்ளது. திருக்குறள், எத்துணைத் தெளிவும் நுண்மையும் சிறப்பும் உடையதாய் விளங்குகிறதோ அதைப்போன்றே இந்நூலும் சைவசித்தாந்த நுண்பொருளைத் தெளிவதற்குப் பயன்படுகிறது. மெய்ந் நூற்பொருள்களை அறிவதற்கு விரும்புவோர், திருவருட்பயனையும், முன்னர்க் கூறிய உண்மை விளக்கத்தையும் முதற்கண் பயில்வது மரபு.

100 குறள் வெண்பாக்களால் ஆனது இந்நூல்; 10 அதிகாரங்களைக் கொண்டது. அதிகாரம் ஒவ்வொன்றும் பத்துப் பத்துக் குறள் வெண்பாக்களை உடையது.

இந்நூல், சைவசித்தாந்தத்திற்குப் பாயிரம்போல், அதனைத் தொகுத்துக் கூறும். இதனைக் கற்போர் எவரும் சைவ சித்தாந்த நுண்பொருளை அறிய வேண்டுமென ஆவல் கொள்வர். இது ஆற்றொழுக்கான நடையை உடையது. இதன் ஆசிரியர், இதன் பகுப்பிலேயே மூவர் தேவாரங்களை வகுத்துக்கொண்டு, தேவார அருள்முறைத் திரட்டு என்ற நூலையும் அருளிச் செய்துள்ளார். திருமுறைகளை இவ்வாறு எண்ணி மகிழலாம் என்பது உமாபதி சிவத்தின் கருத்து. இந்நூலில் ஆசிரியர் கையாளும் உவமைகள் பல.

*"அணுகு துணையறியா ஆற்றோன் . . ."*

*"பாலாழி மீனாளும் பான்மைத்து . . ."*[84]

போன்ற உவமைகள், எண்ணி இன்புறுதற்குரியன.

### நூல் நுவலும் பொருள்

நூலின் தொடக்கத்தில் 'கணபதி வணக்கம்' அமைந்துள்ளது. "பதிமுதுநிலை, உயிரவைநிலை, இருள்மலநிலை, அருளது நிலை, அருளுருநிலை, அறியும் நெறி, உயிர் விளக்கம், இன்புறுநிலை, ஐந்தெழுத்து அருள்நிலை, அணைந்தோர் தன்மை" என்னும் அதிகாரங்கள் அமைந்துள்ளன.

இறைவனோடு இணைபிரியாது இருக்கின்ற திருவருளே, அனாதியாகவே ஆணவத்தால் அறிவு மறைக்கப்பட்டுச் சொல்லொணாத் துன்பத்தில் ஆழ்ந்திருக்கும் உயிருக்குத் தோன்றாத் துணையாயிருந்து, துன்பத்தினின்றும் உயிரை மீட்டு இறைவனிடம் சேர்க்கிறது. உயிரின் சகலநிலை, சுத்தநிலை இரண்டிலும் உயிருக்கு ஆதாரமாயிருப்பது திருவருளே என்று திருவருளின் இன்றியமையாமையை இந்நூல் விளக்குகிறது. "இறைவனின் முதன்மை, அவனுடைய எண் குணங்கள், மும்மல இயல்பு, உயிர்களின் அனாதித்தன்மை, மூவகை உயிர்கள், உயிர்கள் பல என்ற கருத்து, உயிர்களின் தன்னியல்பு, அருளே குருவுருத் தாங்கி உயிரின் பிறவிப்பிணி தீர்க்கும் கருணை, ஆன்ம சுத்தி, ஐந்தெழுத்தின் மேன்மை, ஐந்தெழுத்தின் வகைகள், சீவன் முத்தரின் இயல்பு" போன்ற செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

## 2.9. வினா வெண்பா - நூற்குறிப்பும் சிறப்பும்

கேட்போருக்கு உய்த்துணர்வு உண்டாதற் பொருட்டுச் சில கருத்துக்களைச் சிந்தனை செய்யுமாறு தூண்டுதலும் உண்டு. இவ்வகையில் அமைந்தது 'வினாவெண்பா' எனும் நூல். இந்நூலில் கேட்கப்படும் வினாக்களுக்குரிய விடைகளை இந்நூலாசிரியர் அருளிய பிற நூல்களிலிருந்து கண்டு தெளியலாம். இந்நூல் மிகச்சிறியது. 13 வெண்பாக்களை உடையது. இந்நூலாசிரியராகிய உமாபதிசிவம், தம் ஞானாசிரியராகிய மறைஞானசம்பந்தரை வினவுமுகமாக இஃது அமைந்துள்ளது. இவற்றுள், 11, 13 ஆகிய இரு பாடல்களும் வினவுதலின்றி அமைந்தவை. இறுதி வெண்பா - நூற்பயனைக் கூறுவதாக உள்ளது.

### நூல் நுவலும் பொருள்

சுத்தாத்துவித சித்தாந்த முத்தியின் இயல்பை இந்நூல் தெளிவுற விளக்குகிறது. "அறிபவன், அறிவு, அறியப்படும் பொருள்" இவை மூன்றும் இல்லாது, அறியப்படும் பொருளாகிய சிவமே முனைத்து நிற்கும் நிலையே முத்தியாகும் என்பதை விளக்குகிறது. "உயிர், பாசம்" நீங்கிய சுத்தநிலையில் அருளுடன் சேர்ந்து, அருளாகவே நிற்கும். அந்நிலையில் அந்த மூவகை நிலைகள் என்ற வேறுபாடு இன்றி

உயிர் சிவத்தைக் காண்பதே 'பேரானந்த முத்தியாகும்' என்று கூறுகிறது.

## 2.10. போற்றிப் பஃறொடை - நூற்குறிப்பும் சிறப்பும்

இந்நூல் உமாபதிசிவம், தம் ஞானாசிரியராகிய மறைஞானசம்பந்தர், தம்மை ஆட்கொண்ட அருட்செயல் குறித்துப் பலவாறு போற்றி மகிழும்படியாக அமைந்துள்ளது. இது 95கண்ணிகளை உடையது. நூல் இறுதியில் ஒரு வெண்பாவைக் கொண்டுள்ளது. 'பஃறொடை வெண்பா' என்ற யாப்பில் அமைந்துள்ளது. இது, போற்றிசைக்கும் அமைப்பில் அமைந்துள்ளதால் இதனைச் 'சாத்திரத்தில் தோத்திரம்' என்று கூறலாம்.

### நூல் நுவலும் பொருள்

இந்நூலில், சிவபெருமானின் பெருங் கருணையை 14 முறை போற்றி வணங்குவதாக வந்துள்ளது. இந்நூலின் இறுதியில் 'முன்னோனை, என்கொண்டு போற்றிசைப்பேன் யான்' என்று கூறி நூலை நிறைவு செய்கின்றார் ஆசிரியர்.

"இறைவனே குருமூர்த்தியாக வந்து ஆட்கொள்ளல்; உயிரின் வினை நீக்கத்திற்கு இவ்வுடலும் உலகும் அளிக்கப்பெறுதல்; கருவாக உள்ளபொழுதும், அஃது உருப்பெற்று வெளிவரும்பொழுதும் இறைவன் கருணை; குழந்தையின் பசியை நீக்கும்பொருட்டு, அதன் தாயிடத்துத் தீம்பாலைத் தந்தருளும் இறைவனின் கருணை; உயிர்களுக்கு இன்ப துன்பங்களைத் தரும் அறம், வினைப்பயன்களுக்குத் தகுந்தவாறு நன்மை தீமைகளைச் செய்யும் திறம்; உயிர்களை உய்யக் கொள்ளும் அறக்கருணை, மறக்கருணை; உயிர்களுக்கு வினைப்பிறவி நேராதபடிச் செய்யும் பெருங்கருணை; 'விஞ்ஞானகலர்' முதலிய மூவர்க்கும் அருள்புரியும் திறம், இவ்வாறு உயிர்களை ஆட்கொண்டருளும் குருநாதன் தம்மையும் ஆட்கொண்டு, அயல்நெறியில் போகவிடாமல், சைவசமயநெறியில் நிறுத்திய பெருங்கருணை" ஆகியன இந்நூல் நுவலும் பொருள்களாகும்.[85]

> *"இறைவன் தொழிலனைத்தும் உயிர்கள் உய்தற்பொருட்டே என்பதை நினைவு கூர்ந்து, தமக்குச் சிவஞானம் தந்தருளிய இறைவனை வாழ்த்தும் நூல்"*[86]

எனக் கலைக்களஞ்சியம் கூறுவது இவண் குறிக்கத்தகும்.

## 2.11. கொடிக்கவி - நூற்குறிப்பும் சிறப்பும்

இந்நூல் எழுந்ததுபற்றி ஒரு வரலாறு கூறப்படுகிறது. தில்லையில் கூத்தப்பிரானின் திருவிழாவின்போது, கொடியேற்ற முயன்றபோது, கொடி ஏறாமல் தடைப்பட்டது; அதுகண்டு தில்லைவாழ் அந்தணர் வருந்தினர்; அப்போது, "உமாபதிசிவம் வந்தால் கொடியேறும்"

என்றதோர் அசரீரி எழுந்தது. தில்லைவாழ் அந்தணர்களும் அவர்பால் வேண்டிக்கொள்ள, அவரும் இக் 'கொடிக்கவி' பாடி அதனை ஏற்றினர். எனவே, இந்நூலுக்குக் 'கொடிக்கவி' அல்லது 'கொடிப்பாட்டு' என்ற பெயர் வழங்கலாயிற்று.

இந்நூல் ஒரு கட்டளைக் கலித்துறையும், மூன்று வெண்பாக்களும் உடையது.[87]

### நூல் நுவலும் பொருள்

"கொடியின் சிறப்பு, கொடியில் எழுதப்படும் விடையின் (காளை) உருவம், திருவிழாவின் நோக்கம், திருவருளால் உயிர்கள் மும்மலம் நீங்கி, முதல்வன் திருவடியைச் சேரும் வழி" ஆகியன கூறப்படுகின்றன. திருக்கோயிலில் கொடியேற்றும் நிகழ்ச்சியானது, "உயிர், மும்மலங்களினின்றும் நீங்கித் திருவருளின் துணைகொண்டு சிவத்தைச் சேரவேண்டும்" என்ற தத்துவப் பொருளை உட்கொண்டது. இந்நூல், "திருவைந்தெழுத்தின் துணைகொண்டு, உயிரின் அறிவை மறைக்கும் மலத்தை நீக்கிச் சிவப்பேறு அடையலாம்" என்பதை உணர்த்துகிறது.[88]

## 2.12. நெஞ்சுவிடு தூது - நூற்குறிப்பும் சிறப்பும்

உமாபதிசிவம், தம் ஞானாசிரியராகிய மறைஞானசம்பந்தரைத் தலைவராகவும், தம்மைத் தலைவியாகவும் கொண்டு, அவரிடம் சென்று அவர்தம் அருளைப்பெற்று, அதற்கடையாளமாக, அவரிடமிருந்து திருக்கொன்றை மாலையை வாங்கிவருமாறு தமது நெஞ்சைத் தூதாக விடுப்பதே இந்நூலமைப்பாகும். சாத்திரநூல்களுள் இஃது ஒன்றே சிற்றிலக்கிய வகையில் அமைந்தது. இந்நூல் கலிவெண்பா யாப்பில் அமைந்துள்ளது. 125 கண்ணிகளை உடையது; நூலின் இறுதியில் ஒரு தனி வெண்பா உள்ளது.

இந்நூல், வேற்றுச் சமயக் கருத்துக்கள் சிலவற்றை மறுத்தும், சைவசித்தாந்தக் கருத்துக்களை வலியுறுத்தியும் பாடப்பெற்றுள்ளது. இந்நூலின்கண், மறைஞானசம்பந்தர், சிவபெருமானாகவே போற்றப்படுகின்றார்.

### நூல் நுவலும் பொருள்

"இறைவனின் பெருமை, சிற்றறிவுடைய உயிரின் சிறுமை, பாசங்களின் இயல்பு" ஆகியன, முற்பகுதியில் விளக்கப்படுகின்றன. தாம் அடையத்தக்க தலைவனின் பெருமையைக் கூறுமுகமாகத் 'தசாங்கங்களின் இயல்பு' இடைப் பகுதியில் கூறப்படுகின்றது. "தலைவனை அடையுங்கால் இடையே உலோகாயதன், மாயாவாதி, புத்தன், சமணன், ஸ்மார்த்தன் முதலான புறச்சமயத்தோரிடத்துச் செல்லாமல், தம் தலைவனிடத்திலேயே சென்று, கொன்றைமாலை

வாங்கி வரவேண்டும்" என்பது, இந்நூலின் இறுதிப்பகுதியில் சொல்லப்படுகின்றது. இந்நூலில் "தெய்வப்புலமைத் திருவள்ளுவர் உரைத்த மெய்வைத்த சொல்லை"[89] எனவரும் பகுதி திருக்குறளின்பால் இவர் வைத்துள்ள அளவற்ற மதிப்பைக் காட்டுவதாகும். இறுதியிலுள்ள வெண்பா, நூற்பொருளின் பிழிவாக விளங்குகிறது.

## 2.13. உண்மைநெறிவிளக்கம் - நூற்குறிப்பும், சிறப்பும்

இது ஆறு பாடல்களை உடையது; விருத்தப்பாக்களால் ஆனது. மிகச் சிறிய நூலாயினும் இதன்கண் பத்துப்பொருள்கள் விளக்கப்படுகின்றன.

இந்நூலினை உமாபதி சிவமே இயற்றினர் என்பதே நெடுவழக்காக இருந்து வருகிறது. ஆனால் இந்நூலாசிரியர், 'சீகாழித்தத்துவநாதர்' என்றும் கூறுவது உண்டு.[90]

### நூல் நுவலும் பொருள்

ஆன்மா, இறைவனையடையக் கடைப்பிடிக்கக்கூடிய ஞானநெறியைப் பத்துப் படிநிலைகளாகப் பிரித்து விளக்குகிறது. அவையாவன : "தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்ம தரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம்" - இத் தசகாரியங்களால் உயிரானது இறைவன் திருவடியைத் தலைக்கூடும் ஞானநெறிக்குட்படும் அனுபவங்களை விளக்குகிறது.

## 2.14. சங்கற்ப நிராகரணம் - நூற்குறிப்பும் சிறப்பும்

இந்நூல், அகவற்பாக்களால் ஆனது. நூலின் தொடக்கத்தில் காப்புச் செய்யுளும், பாயிரமும் அமைந்துள்ளன. 'மாயாவாதி சங்கற்பம்' முதல், 'சைவவாதி நிராகரணம்' வரை 17 பிரிவுகள் உள்ளன. நூலின் இறுதியில் ஒரு வெண்பாவும் உண்டு. "மாயாவாதம், ஐக்கியவாதம், பாடாணவாதம், பேதவாதம், சிவசமவாதம், சங்கிராந்தவாதம், ஈசுரஅவிகாரவாத சைவம், நிமித்தகாரண பரிணாம வாதம், சைவவாதம்" போன்ற சமயங்களைச் சங்கற்பங்களாக வைத்து அவற்றை நிராகரிக்கும் முறையில் இந்நூல் அமைந்துள்ளது. "சித்தாந்த சைவமே பரமுத்தி அளிக்கக்கூடியது" என்று கூறுகிறது. உண்மைச் சமயம் பற்றிய தெளிவு பெறுதற்கும், உண்மையோடு பொருந்தாத கொள்கைகளைக் கண்டுகொள்வதற்கும், உதவக்கூடியன, சிவஞானசித்தியாரும் சங்கற்ப நிராகரணமும் ஆகும். "தவறான கொள்கையினால் தீமையே விளையும், எனவே அதனை மறுத்து ஒதுக்க வேண்டும்" என்பதற்காகவே 'சங்கற்பநிராகரணம்' தோன்றியது.

'சங்கற்பம்' என்பதற்குக் "கருத்து, கொள்கை, எண்ணம்" என்ற பொருள்கள் உண்டு. பிறருடைய கொள்கைகள் முடிந்த முடிபு அன்று என்று மறுப்பதால், 'சங்கற்ப நிராகரணம்' எனப்படுகிறது. உண்மையற்றவை நிராகரிக்கப்படுவதால், உண்மை தானாக நிலைத்து நிற்கும் என்பது கருத்து.

## நூல் நுவலும் பொருள்

சாலிவாகன ஆண்டு 1235இல் (கி.பி.1313இல்) தில்லை நடராசர் ஆனிப் பெருந்திருவிழாவில் நடந்த நிகழ்ச்சியாகச் சொல்லப்படுவது வருமாறு :

அகச் சமயவாதி எண்மர் ஒருபுறம் கூடியிருக்க, மற்றொருபுறம் மெய்கண்டாரின் அருள்பெற்ற அடியார் ஒருவரும் இருந்தனர். உண்மை அறிய விழைவோன் ஒருவன் வந்து, மாயாவாதியிடம், 'இறைவன் திருவருள் நிலை எத்தன்மையது' என்று வினவினான். அதற்கு மாயாவாதி, விடைகூற, அங்கிருந்த மற்ற எண்மரும் குறுக்கிட்டு ஒருவரையொருவர் மறுத்து உரைத்தனர். அவர்கள் கூறியவற்றைச் சங்கற்பங்களாக வைத்து, நிராகரித்து, உசாவினானைத் தமது சிவப்பிரகாச நூலைக் கற்று உண்மையறிந்து கொள்ளலாம் என உமாபதி சிவம் அறிவுறுத்துகின்றார். சித்தியார் பரபக்கத்தைப்போல, இந்நூலும் வேற்றுச் சமயங்கள் சிலவற்றின் கொள்கைகளையும் அவற்றிற்கும் சித்தாந்தத்திற்கும் உள்ள வேறுபாடுகளையும் உணர்ந்துகொள்ள உதவுகிறது.

## முடிவுரை

இவ் இயல் வாயிலாக அறியத்தகும் முடிபுகளாவன :

1. சைவ சமய நூல்களைத் 'தோத்திரம், சாத்திரம்' என இருவகையாகப் பிரிக்கலாம்.

2. சைவசித்தாந்தக் கோட்பாடுகளை முதன்முதல் வரன்முறைப்படுத்திச் 'சிவஞானபோதமெ'னும் நூலினை அருளியவர் மெய்கண்டாராவார். ஆதலின் அவர்தம் திருப்பெயரை அடியொற்றி 'மெய்கண்ட சாத்திரம்' எனும் பெயர் வழங்கலாயிற்று.

3. சைவ சமயப் பெரியோர்களைச் 'சமயாசாரியர், சந்தானாசாரியர்' என இருவகையாகப் பகுக்கலாம். சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர் ஆகியோர் 'சமயாசாரியர்' எனப்படுவர். மெய்கண்டார் முதலான நால்வர் 'சந்தானாசாரியர்' எனப்படுவர்.

4. திருவியலூர் உய்யவந்த தேவர் அருளிய திருவுந்தியாரும், திருக்கடவூர் உய்யவந்த தேவர் அருளிய திருக்களிற்றுப்படியாரும் காலத்தால் முற்பட்ட, அனுபூதி

நூல்களாகும். இவை தோத்திர காலத்திற்கும் சாத்திர காலத்திற்கும் இடைப்பட்ட, தமிழகத்தின் சைவ சமய மரபுகளை அறிவிப்பன. இவ்விரண்டும் 'இரட்டைச் சாத்திரங்கள்' எனப்படும்.

5. 'சிவஞானபோதம்' சுருங்கிய சொல்லும், பெருகிய பொருளும் உடையது. சாத்திர நூல்களுக்கெல்லாம் மணிமுடியாகத் திகழ்வது.

6. சிவஞான போதத்தின் வழிநூல் 'சிவஞானசித்தி'யாகும். 'சுபக்கம், பரபக்கம்' என இரு பிரிவுகளைக் கொண்டு விளங்குவது. இந்நூல் "ஆகம உணர்வின் பிழிவு; அனுபவ உணர்வின் சிகரம்" எனப் புகழப்படுவது.

7. 'சிவஞானசித்தியார்' என்னும் இந்நூல் தவிர, 'இருபா இருபஃது' என்ற நூலையும் அருளியவர் அருணந்திசிவம்.

8. பதினான்கு சாத்திர நூல்களுள், 'சித்தாந்த அட்டகம்' என்னும் எட்டு நூல்களைச் செய்தவர், சந்தானாசாரியர்களுள் நான்காமவரான உமாபதிசிவம் ஆவர்.

9. மனவாசகங் கடந்தார் அருளிய நூல் 'உண்மை விளக்கம்'.

10. சிவஞானபோதத்தை முதல்நூலாகக் கொண்டு, சித்தியார் வழிநூலாகவும் சிவப்பிரகாசம் சார்பு நூலாகவும் கொள்ளப்படும்.

11. புறச்சமயங்களின் நுழைவால் சைவசமய வளர்ச்சி குன்றியிருந்த காலத்தில், சமயாசாரியரும், சந்தானாசாரியரும் தோன்றிச் சைவ சமயத்தையும், சைவசித்தாந்தத் தத்துவத்தையும் மக்கள் அறியச் செய்து, மீண்டும் சைவம் தழைக்கப் பாடுபட்டனர்.

## சான்றெண் விளக்கம்

1. (அ) சி. அருணை வடிவேலு முதலியார், (ப.ஆ) **மெய்கண்ட சாத்திரம்.** **சைவசித்தாந்தம்,** ப.1.

   (ஆ) வ.ஆ. தேவசேனாபதி, **சைவசித்தாந்தத்தின் அடிப்படைகள்,** ப.1

2. (அ) Devaboopathy Nadarajah, **The Strength of Saivism**, p.p. 1,3,4.

   (ஆ) கா. சுப்பிரமணியபிள்ளை, **தமிழ்நாட்டு இந்து சமயங்களின் வரலாறு,** ப.10.

   (இ) க. கைலாசபதி, **பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்,** ப.5.

   (ஈ) சோ.ந. கந்தசாமி, **தமிழும் தத்துவமும்,** பக்.297-298.

   (உ) டி.பி. சித்தலிங்கையா, **சைவசமயத் தோற்றமும் வளர்ச்சியும்,** ப.16.

3. மு. அருணாசலம், **'முகவுரை', சைவசமயம்,** பக்.1,7.

4. சோ.ந. கந்தசாமி, **மு.கா. நூல்,** ப.305.

5. **திருமந்திரம்,** 270.

6. ஔவை சு. துரைசாமிபிள்ளை, 'தலைமையுரை', **தூத்துக்குடி சைவசித்தாந்த சபை 65ஆம் ஆண்டு நிறைவு விழா, துண்டறிக்கை,** பக். 13-15.

7. டி.பி. சித்தலிங்கையா, **மு.கா. நூல்,** ப.17.

8. தெ.பொ. மீனாட்சிசுந்தரனார், **தமிழா நினைத்துப்பார்,** ப.90.

9. ச. தண்டபாணி தேசிகர், **'முகவுரை', பண்டார சாத்திரம் - சித்தாந்தப் பஃறொடை,** ப.7.

10. கா. சுப்பிரமணியபிள்ளை, **சைவசித்தாந்த உண்மை வரலாறு,** ப.5.

11. (அ) N.R. Murugavell, Research Paper on **'The Characteristic of Saiva Siddhanta'**, I International Seminar on Saiva Siddhanta, 1984.

    (ஆ) R. Gopalakrishnan, 'Social Perspectives in Saiva Siddhanta', **Saiva Siddhanta**, Qy. Nos.. **XXVI**, Vol. 1,2.

    (இ) N. Murugesa Mudaliar, **'The Relevance of Saiva Siddhanta Philosophy'**, p.200.

    (ஈ) ஆதாரம் : G. Subramania Pillai, 'Introduction and History of Saiva Siddhanta', **Collected Lecturer on Saiva Siddhanta**, p.1.

12. **திருமந்திரம்,** ஐந்தாம் தந்திரம், 3.

13. Dorai Arangaswamy, **The Religion and Philosophy of Tevaram, Book-I**, p.1.

14. ச. சாம்பசிவனார், **திருவாசகத்தில் சைவசித்தாந்தக் கருத்துக்கள்**, ப.151.

15. ந.ரா. முருகவேள், 'பல்லவர்காலச் சைவம்', **சைவசமயச் சொற்பொழிவுகள்**, ப.51.

16. பழைய வெண்பா. ஆதாரம் : **மெய்கண்ட சாத்திரம்**, தருமையாதீனம், 1988.

17. **'மெய்கண்ட சாத்திரங்கள்'** விரிவான விளக்க அட்டவணை பின்னிணைப்பு எண் 1இல் தரப்பட்டுள்ளது.

18. சி. அருணை வடிவேலு முதலியார், **மு.கா. நூல்**, ப.4.

19. எம். தேவகி, **மெய்கண்டார் வழங்கும் உயிர் விளக்கம்**, பக்.9,10.

20. இராமலிங்கத் தம்பிரான், **'ஸ்ரீமெய்கண்ட தேவர் வரலாறு'**, **குரு வழிபாடு**, ப.56.

21. ந.சி. கந்தையாபிள்ளை, **சைவசமய வரலாறு**, ப.42.

22. **கழகத் தமிழ்க் கையகராதி**, ப.64.

23. **சிலப்பதிகாரம்**, வாழ்த்துக்காதை உட்பிரிவுகள்.

24. **திருவாசகம்**, உட்பிரிவுகள் எண் 14,15,16 முதலியன.

25. Devaboopathy Nadarajah, op.cit.p.38.

26. கு. சுந்தரமூர்த்தி, **'ஆராய்ச்சி முன்னுரை'**, **மெய்கண்ட சாத்திரம்**, பக்.16,17.

27. **சித்தாந்த சாத்திரம்**, மன்றம், ப.656.

28. ப. இராமநாதபிள்ளை, **'பதிப்புரை'**, **திருவுந்தியார்**, பக்.3,4.

29. **பெரியபுராணம்**, தடுத்தாட்கொண்டபுராணம், 105.

30. சி.சு. மணி, **திருவுந்தியார் - திருக்களிற்றுப்படியார்**, ப.35.

31. மு. அருணாசலம், **தமிழ் இலக்கிய வரலாறு - தமிழ்ப் புலவர் வரலாறு**, 16ஆம் நூற். 3ஆம் பாகம், ப.11.

32. டி.எஸ். தியாகராஜ தேசிகன், 'அணிந்துரை', **திருக்களிற்றுப் படியாரின் விளக்கக் கட்டுரை**, ப. V

33. **சிவஞானபாடியம்**, மேற்கோள் நூலகராதி, கழகம், ப. 502.

34. **வாதவூரடிகள் புராணம்**. ஆதாரம் : வை. இரத்தினசபாபதி. **சிவஞான முனிவர் நோக்கில் சைவசித்தாந்தம்**, ப.52.

35. K. Vajravelu Mudaliar. **Sivajnana Mapadiyam**, p.p 14,19.

36. **சிவஞானபோதமும் சிவஞான பாடியமும்**, கழகப் பதிப்பு, ப.15.

37. ம.சா. அறிவுடைநம்பி, **போதமும் சுபக்கமும்**, ப.10.

38. சி. அருணை வடிவேலு முதலியார், (ப.ஆ.) **மெய்கண்ட சாத்திரம்**, ப.26.

39. **சிவஞானபோதம்** - பாகுபாடு அட்டவணை, பின்னிணைப்பு எண் 2இல், தரப்பட்டுள்ளது.

40. K. Loganathan Mutharayan, **Metaphysica Universalis of Meykandar**, p.1.

41. ஆ. ஆனந்தராசன், **சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை**, ப.1.

42. ர. ராமானுஜாசாரி, **சைவசித்தாந்தம்**, ப.5.

43. திரு.வி. கலியாணசுந்தரன், **'அணிந்துரை', சிவஞானபாடியம்**, ப.22.

44. மறைமலையடிகள், **சிவஞானபோத ஆராய்ச்சி**, ப.1.

45. ச. சாம்பசிவனார், **'சங்க இலக்கியங்களில் சைவசித்தாந்தம், தெய்வத்தமிழ் அலங்கல்**, பக். 1-22.

46. க. வச்சிரவேல் முதலியார், **திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே**, பக். 1-10.

47. வை. இரத்தினசபாபதி, **திருமுறைத் தெளிவே சைவசித்தாந்தம்**, ப.5.

48. கா. சுப்பிரமணியபிள்ளை, **'முன்னுரை', சிவஞானபாடியம்**, ஆதாரம் : ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ.) பக். 33,34.

49. (அ) ". . . . மனைகள் தோறு மறையின்னொலி தொடங்கும் **கடந்தை**"
- **சம்பந்தர் தேவாரம்**, பா. 634.

(ஆ) ". . . . துன்னார் கடந்தையுள் தூங்கானை மாடச் சுடர்க் கொழுந்தே" -
**அப்பர் தேவாரம்**, பா. 5186.

50. **பெரியபுராணம்**, கலிக்கம்ப நாயனார் புராணம், 1.

51. 'அச்சுதக் களப்பாளர்' என்னும் பெயர், 'அச்சுத களப்பாளர்' என்றும்; 'அச்சுதர் களப்பாளர்' என்றும் சில நூல்களில் காணப்படுகின்றன.

(அ) ந.சி. கந்தையாபிள்ளை, **தமிழ்ப்புலவர் அகராதி**, 'அச்சுதர் களப்பாளர்', ப.363.

(ஆ) வ.ஆ. தேவசேனாபதி, **மு.கா. நூல்**, 'அச்சுதக் களப்பாளர்', ப.28.

(இ) மறைமலையடிகள், **மு.கா. நூல்**. 'அச்சுத காப்பாளர்', ப.51.

52. **சம்பந்தர் தேவாரம்**. பா. 1983.

53. Epigraphic India, Vol. VIII p.268. ஆதாரம் : T.B.Siddalingaiah, **Origin and Development of Saiva Siddhanta upto 14th Century**. pp.87-88.

54. வை. இரத்தினசபாபதி, **மு.கா. நூல்**, ப.4.

55. கா. சுப்பிரமணியபிள்ளை, **மெய்கண்டாரும் சிவஞானபோதமும்**, பக்.9,10.

56. **கலைக்களஞ்சியம்**, தொகுதி 8, ப.450.

57. பொ. முத்தையபிள்ளை, **சிவஞானபோதச் சிற்றுரைவிளக்கம்**, பக்.28,29.

58. **தாயுமானவர் பாடல்**, எந்நாட்கண்ணி, குருமரபு வணக்கம்,2:4.

59. த.ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை (ப.ஆ.), **சிவஞானபோதமும் மாதவச் சிவஞான யோகிகள் சிற்றுரையும்**, ப. VII.

60. ம.சா. அறிவுடைநம்பி, **மு.கா. நூல்**, பக்.10,11.

61. ச. சாம்பசிவனாரிடம் நேரிற் கேட்டது.

62. **சிவஞான போதம்**, நூற்பா 4:3; நூற்பா 11-1.

63. **மேலது**, நூற்பா 2 : எடுத்துக்காட்டு வெண்பா, 3,4.

64. **மேலது**, நூற்பா 8 : ஏது; நூற்பா 9 : ஏது.

65. கு. சுந்தரமூர்த்தி, **மு.கா. நூல்**, பக்.26,27.

66. **சிவஞான சித்தியார்**, பாயிரம் 3-4.

67. **பாக்கள் விவரப் பட்டியல்**, பின்னிணைப்பு எண் 3இல், தரப்பட்டுள்ளது.

68. த.ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளை, **'முகவுரை', மெய்கண்டசாத்திரம்**, ப.11.

69. **சிவபோக சாரம்**, 23:3-4.

70. **தாயுமானவர் பாடல்**, எந்நாட்கண்ணி, குருமரபு வணக்கம், 2:5.

71. **சிவஞானசித்தியார்**, திருவாவடுதுறை யாதீனம், 'முகவுரை', பக்.2,11.

72. **சிவஞானசித்தியார் சுபக்கம் மூலமும் பொழிப்புரையும்**, கழகம், பக்.7,8.

73. தே.ஆ. ஸ்ரீநிவாஸாசாரியன், **இருபா இருபஃது**, பக்.5,6.

74. **திருவாசகம்**, 508:2.

75. ஆ. ஆனந்தராசன், **உண்மை விளக்கம்**, பக்.1.2.

76. **உண்மை விளக்கம் வினா - விடைப் பட்டியல்**, பின்னிணைப்பு எண். 4இல், தரப்பட்டுள்ளது.

77. **சிவப்பிரகாசம்**, 11.

78. சி.சு. மணி, **சிவப்பிரகாசம்**, பக்.1.2.

79. ஆ. ஆனந்தராசன், **'அணிந்துரை', சிவப்பிரகாசம்**, ப. V

80. **சித்தாந்தசாத்திரம், மு.கா. நூல்**, ப.711.

81. ஜே.எம். நல்லசாமிப்பிள்ளை, **'ஸ்ரீமத் உமாபதி சிவாச்சாரிய சுவாமிகள் வரலாற்றுச் சுருக்கம்', சங்கற்ப நிராகரணம்**, ஆ. ஈசுவரமூர்த்தி பிள்ளை (உ.ஆ.), ப. XI.

82. **கலைக்களஞ்சியம்**, தொகுதி2, ப. 273.

83. **சிவப்பிரகாசம்,** பாயிரம் : 7.

84. **திருவருட்பயன்**, 35,34.

85. **போற்றிப் பஃறொடை - விளக்க அட்டவணை,** பின்னிணைப்பு எண் 5இல், தரப்பட்டுள்ளது.

86. **கலைக்களஞ்சியம்,** தொகுதி 2, பக்.273.274.

87. **தருமையாதீனப் பதிப்பில்** 5 பாடல்கள் உள்ளன.

88. **கலைக்களஞ்சியம்,** தொகுதி 2, ப.274.

89. **நெஞ்சுவிடுதூது,** கண்ணி 25.

90. **சித்தாந்த சாத்திரம்**, மு.கா.நூல், ப.1161

# 3
# திருவருள் - ஒரு விளக்கம்

**முன்னுரை**

> *"இறைவன் நமக்கு எப்போதும் எவ்வழியாலும் அருளே புரிந்து வருகிறான் என்பதே உண்மை. இரவும் பகலும், நாம் உண்டாக்கிக் கொள்ளவில்லை. எனவே காலத்தையும் நமக்குத் துணையாக ஆக்கி, எக்காலமும் நமக்குத் திருவருளே புரிகின்றவனாவன்"*[1]

என்கின்றார் தே.ஆ. ஸ்ரீநிவாஸன்.

"இறைவனது திருவடியை வணங்குவதற்கும், அவனது திருவருள் இன்றியமையாது வேண்டப்படும்" என்பதை, மணிவாசகப் பெருமான்

> *"அவனரு ளாலே அவன்தாள் வணங்கி"*[2]

என்று கூறுவதால் அறியலாம். இத்தகைய 'திருவருள்' குறித்த ஒரு சிறு விளக்கம் இவ்வியலில் மேற்கொள்ளப்படுகின்றது.

**'திருவருள்' - சொற்பொருள் விளக்கம்**

'அருள்' என்பது 'கருணை'. இறைவனது கருணையாதலின் 'திருவருள்' எனப்பட்டது. திருக்குறள் துறவறவியலில் இடம்பெறும் 'அருளுடைமை' என்பதற்குப் பரிமேலழகர்,

> *"தொடர்பு பற்றாது இயல்பாக எல்லா உயிர்களின் மீதும் செல்வதாகிய கருணை"*[3]

என்பர். இங்குச் சொல்லப்படும் 'அருள்', துறவிகளுக்குரியது. ஆனால் சைவசித்தாந்தத்தில் சொல்லப்படும், இறைவனது திருவருளோ, 'பெருங்கருணைப் பேராறு' ஆகும். அதனால்தான், மணிவாசகர், 'மாப்பெருங் கருணையன்'[4] என்பாராயினர்.

இத்'திருவருள்', மிக உயர்ந்தது; மேலானது; பரந்தது; விரிந்தது; ஆழ்ந்து அகன்றது. இதற்கு ஈடு இணையில்லை; எனவே தாயுமானவரும், 'தன்னருள் வெளி'[5] என்றார்.

> *"அருள்நெறி என்பது உலகுயிர்களை நோக்கி, உயிர்கள் முன்னேறும் வகையில் அருள் செலுத்துவது; இதனை*

*'உயிர் இரக்கம்' (சீவகாருண்யம்) என்று பெரியோர் வணங்குவர்"*[6]

என்பர் இளவழகனார்.

உயிர்களிடத்து இறைவன் இரக்கம் கொள்ளவில்லை எனில், அவன் கருணையற்றவன் ஆவான். உலகத்திலுள்ள அனைத்துச் சமயத்தினரும் இறைவனைக் 'கருணை மாக்கடல்' என்று புகழ்கின்றனர். அத்தகையோன் துன்புறும் உயிர்களிடத்துக் கருணை காட்டாது இருக்கமாட்டான். அன்றியும், கேவலநிலையிலுள்ள உயிர்களுக்கு உதவி செய்ய அங்கு இறைவனைத்தவிர வேறு ஒருவரும் இல்லை. ஆதலின் அவனே மிகப்பெரிய கருணையாளன் ஆவான்.[7]

எனவே, இறைவனது படைப்புத் தொழிலும், அவனது கருணையின் திறத்தாலே அமைவது எனலாம்.

*"முதல்வன் உயிரையாவது, உலகையாவது தன்பொருட்டு வேண்டுபவன் அல்லன். உலகின் மூலமாகிய மாயையை முதல்வன் தொழிற்படுத்துவதற்குக் காரணம், உயிரின்மீது வைத்த பேரருளேயாம். ஆகவே உயிரையும் உலகையும் இறைவனோடு தொடர்புபடுத்துவது அவனது திருவருளேயாகும். அத்திருவருளைத் 'தாய்' என வழங்குவர் பெரியோர்."*[8]

என்பது கா.சு. பிள்ளையின் கூற்று.

**சிவமும் சத்தியும்**

இறைவனது சிற்சத்தியாகிய ஆற்றலே 'திருவருள்' எனப்படும். இது 'பதிஞானம், சிவஞானம்' எனவும் கூறப்படும். 'சத்தி' எனப்படுவதும் இதுவே.

*"அம்மை, உலகை நோக்காது, அப்பனோடு கலந்து இருக்கும்போது 'ஞானம்' எனவும், உலகை நோக்கியபோது 'அருள்' எனவும் பெயர் பெறுவார்."*[9]

என்பர் இளவழகனார்.

இவ்வுலகம், சத்தியின் வெளிப்பாடாக விளங்குகிறது. இறைவன் சத்தியும் சிவமுமாய் விளங்குவதாலேயே இவ்வுயிர்களும் உலக இன்பங்களை நுகர்கின்றன. இறைவன், தன் சத்தியுடன் இணைபிரியாது இருக்கும் தன்மையைத் திருஞானசம்பந்தர்,

*'தோடுடைய செவியன்'*[10]

என்பதால் குறிப்பிடுவர். நாவரசரும்,

*"கரும்பமரும் மொழி மடவாள் பங்கன்"*[11]

என்றும்; மணிவாசகர்,

*"பந்தணை விரலியும் நீயும்"*[12]

என்றும் கூறுவர்.

இறைவனுக்குரிய நிலைகள் இரண்டு : (1) சொரூப இயல்பு; (2) தடத்த இயல்பு. இவ் இருவகை நிலைகளில், 'சொரூப இயல்பு' எனப்படும் தன்னியல்பில், இறைவன் எல்லாவற்றையும் கடந்து, சிவம் தானேயாய், நிற்கும் நிலையில் சத்தியை உள்ளடக்கி நிற்பன். 'தடத்த இயல்பு' எனப்படும் பொதுவியல்பில், சிவம் தன்னுடைய ஆற்றலை வெளிப்படுத்தித் திருவருளால் 'அரு, அருவுரு, உரு' ஆகிய உருவங்களைக் கொண்டு 'படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்' ஆகிய ஐந்தொழில்களை இயற்றுவன்.

## 'தாதான்மிய சம்பந்தம்'

ஒருபொருள் இரு தன்மைப்பட்டு நிற்கும் நிலை, 'தாதான்மிய சம்பந்தம்' எனப்படும். இறைவன், தனது சத்தியும் தானும் ஆக இருதன்மைப்பட்டு நிற்கும் தன்மை இதுவாகும். 'சத்தி' என்பது குணம்; அதனையுடைய இறைவன் குணி; எனவே அவனது சத்தியோடு உள்ளதாகிய தொடர்பு இவ்வாறு கூறப்படும். சிவமும் சத்தியும் பொருளால் ஒன்றாய், தன்மையால் இரண்டாய் ஒன்றையின்றி மற்றொன்று இல்லாத நிலை ஆகும்.[13]

எனவே, அருளாகிய சத்தியின்றி இறைவன் தனித்திருப்பதில்லை; அவ்வாறே சத்தியும் அவனின்றித் தனித்திருப்பது இல்லை. இறைவன், தன் சத்தியின் மூலமாக, அளவிலாப் பொருள்களில் நிறைந்து, அளவற்ற செயல்களைச் செய்கின்றான்.

## பேரருள் உடைமை

இறைவனுக்குரிய எண்குணங்களில் 'பேரருள் உடைமை'யும் ஒன்று. இது வடமொழியில் 'அலுப்தசத்தி' எனப்படும். இறைவன் பேரருள் உடைமையால், எல்லா உயிர்களிடத்தும் எஞ்ஞான்றும் குறையாத கைம்மாறு அற்ற பெருங்கருணை கொண்டவனாகத் திகழ்கின்றான் எனலாம்.[14] மணிவாசகர்,

*'அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே'*[15]

என்பர்.

இதுகுறித்துச் சி. அருணைவடிவேலு முதலியார் தரும் விளக்கம் இவண் கருதத்தகும் :

"இறைவன் தன் அருளால் இயல்பிலே பாசத்திற்பட்டுத் துன்புறுகின்ற பசுக்களைப் பாசத்தினின்றும் விடுவித்து இன்புறச் செய்கின்றவனாய்ப், பல்வேறு உருவங்களையும் அவற்றிற்கேற்ற பெயர்களையும்கொண்டு, பற்பல தொழில்களைச் செய்பவன் ஆகின்றான். அது உயிர்கள்மாட்டு வைத்த அருள் காரணாக நிகழ்வது"[16]

இறைவனைத் "தாயிற் சிறந்த தயாவான தத்துவன்"[17] என்று அருளாளர்கள் குறிப்பிடுவதால் அவனது அருளின் மேன்மை புலப்படும்.

மூலமலமாகிய ஆணவமலம், தன் அறிவை மறைப்பதால் தம் இயல்பை இன்னதென்று அறிந்துகொள்ள முடியாமலும், அத்தன்மையால் தலைவனையும் அறிந்துகொள்ள முடியாமலும், துயர் உறுகின்ற உயிர்களுக்கு நம்பிக்கை ஒளியாக விளங்குவது 'திருவருள்' ஒன்றேயாம். இதுவே இறைவனிடத்திலிருந்து நீங்காத - வேற்றுமைப்படாத சத்தியாக விளங்குகிறது. உயிர்களைத் துன்பக் கடலினின்றும் உய்வித்து, இன்பக்கனமாகிய இறைவனிடத்துச் சேர்ப்பிப்பதும் இத்திருவருளேயாம்.

ஞானமே வடிவாகிய இறைவனைத் தூலசித்துக்களாகிய உயிர்கள் அறிந்து ஈடேற வழியில்லை. அதிசூக்கும சித்தாகிய இறைவன் அருளையே தனது வடிவாகக் கொண்டு உயிர்களுக்குத் தன்னை வெளிக்காட்டிக் கொண்டு, அவை தன்னையறிந்து உய்யும்படி அருளுகின்றான். ஆனால், மனிதர்களைப்போல, மாயையைத் தன் உடலாக இறைவன் கொள்ளமாட்டான்.

**'திரோதான சத்தி'**

'திரோதான சத்தி' என்பது 'மறைத்தற்சத்தி' எனப்படும். இது உயிரினுள் மறைந்திருந்து, அவ்வுயிரானது, தன் நல்வினை தீவினைக்கு உரிய பயனை நுகரச் செய்யும்; பல்வேறு பிறப்பு இறப்புக்களால் உயிர் சலிப்படையும். பின்னர் இன்ப துன்பங்களைச் சரி சமமாக எண்ணக்கூடிய 'இருவினை ஒப்பு' உண்டாகும். அப்பொழுது, உயிரறிவை மறைத்த ஆணவத்தின் வலிமை கெடும். அதனால் 'மலபரிபாகம்' ஏற்படும். அந்நிலையில், உயிரினுள் மறைந்து இருந்த திருவருள் அருட்சத்தியாக வெளிப்பட்டு நிற்கும். இறைவனது சத்தி உயிரில் மறைப்பாற்றலாயிருந்து உயிரறிவைப் படிப்படியாக வளர்ப்பதாலேயே, மணிவாசகரும் "பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை"[18] என்றார். இறைவனது சிற்சத்தியே செயல்படும் தன்மையால், 'திரோதானசத்தி' என்றும், 'அருட்சத்தி' என்றும் இருவகைப்படுகிறது.

### அருட்சத்தி

சகலநிலையில் உயிரில் மறைந்துநின்று அருளிய இறைவனது சிற்சத்தி, பின் அருட்சத்தியாக உயிரின் பக்குவத்திற்கேற்றவாறு, "மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம்" என்ற நால்வகை நிலைகளில் 'சத்திநிபாதம்' என்ற சத்தி பதிதலைச் செய்கிறது. இந்நிகழ்ச்சி உயிருக்குச் 'சீவன்முத்தி' நிலையைத் தருகிறது; இதுவே முடிநிலையன்று! இதன்பின் சத்தி, உயிருக்கு இறைவனைக் காட்டி, முத்திக்காலத்திலும் உயிர் இறைவனோடு கலந்து நின்று பேரின்பம் நுகரத் துணை செய்யும்.

### அத்துவிதம்

இறைவன், தன் திருவருளால் உயிரோடு 'ஒன்றாய், வேறாய், உடனாய்' இருந்து அருளுவன். இதனை 'அத்துவிதம்' என்று சைவசித்தாந்தம் கூறும்.

கடல்வெளி நீர்ப்பரப்பைத் தன்னுள் அடங்கக் கொண்டுள்ளதுபோல, இறைவன் தனது திருவருளாகிய பெருநிறைவில், உயிர்களை அடக்கியுள்ளான். தன்னுள் அடங்கிநிற்கும் உயிர்களோடு அவன் உடன் கலந்து பிரிப்பின்றி நிற்கின்றான். இந்நிலையே 'அத்துவிதம்' அல்லது 'அத்வைதம்' எனப்படும். இவ்வாறு இறைவனும், உயிர்களும் ஒன்றாய் இயைந்து நிற்கும் தன்மை 'ஒன்றன் இருமை' என்று சுட்டப்படும்.

இவண், சி. அருணைவடிவேலு முதலியார் கூறுவது குறிக்கத்தகும் :

> *" 'அத்துவிதம்' என்னும் சொல், 'இரண்டில்லை' என்றோ, 'இரண்டன் மறுதலை' என்றோ பொருள்படாமல், 'இரண்டல்ல' என்றே பொருள்படும். அதனால் 'பிரமமும், உலகமும் இரண்டாயினும், இரண்டல்லவாய் இருக்கும்' எனப் பொருள் தந்து, இரண்டும் வேறுவேறாய்த் தனித்துக் காணப்படாது ஒன்றி நிற்கும் நிலையையே உணர்த்துவதாகும்."*[19]

இறைவனுடைய திருவருள், உயிரின் அறிவில், உயிருக்குயிராய் நின்று, உள்நின்று உணர்த்தி உலகத்தைப் பற்றிய அறிவைத்தந்து நிற்கும், அந்நிலைக்கு 'உணர்த்தும் முறைமை' என்று பெயர்.

> *"நானேதும் அறியாமே என்னுள்வந்து*
> *நல்லனவும் தீயனவும் காட்டா நின்றாய்"*

*"காட்டுவித்தால் ஆரொருவர் காணார்தாரே*
*காண்பார்ஆர் கண்ணுதலாய்க் காட்டாக் காலே"*[20]

என்னும் திருநாவுக்கர்சரது வாக்கும் ஈண்டு நோக்கத்தகும்.

## திருவருளின் இன்றியமையாமை

திருவருளே, உயிருக்கு எந்நிலையிலும் ஆதாரமாய் உள்ளது. எனவே, உயிர்கள், திருவருளை அடைவதையே தம் வாழ்வின் பெரும் குறிக்கோளாகக் கொள்ளவேண்டும். அந்நிலையில், திருவருள், உயிருக்கு இறைவனைக் காட்டிவிடும். இறைவன் தன் திருவருளினாலேயே ஐந்தொழில்கள் செய்வதால், அத் திருவருளின்றி உயிர்களுக்கு இருள் நிலையிலிருந்து விடுபட வேறு வழியில்லை; திருவருள் இல்லையேல் மாயையோடு கூடிய சகலநிலையில் உலகநுகர்ச்சியும் இல்லை. சிவத்தோடு கூடிய சுத்தநிலையில் பேரின்ப நிலையாகிய முத்தியும் இல்லை. ஒருவனேயாகிய இறைவன் தானும் தன் சத்தியுமென நின்று எல்லையில்லாப் பெருமை வாய்ந்த செயல்களைச் செய்கின்றான். தன் கருணைப் பேறாகிய திருவருளினால் உயிர்களை ஆட்கொண்டு பக்குவப்படுத்துகின்றான். திருவருள் ஒளியானது, உயிருக்கு நிலையான பேரின்பப் பொருள் ஆகிய இறைவனைக் காட்டிப் பிறவிக் கடலினின்றும் விடுதலையளிக்கின்றது. எனவே அறியாமையால் விளையும் தன்முனைப்பை நீக்கித் திருவருளை முன்னிறுத்தி, அதன்பின் நீக்க வேண்டுவதே உயிர்களின் தலையாய கடமையாகும்.

நெருப்பில்போட்ட இரும்புத்துண்டு அந்நெருப்பின் வண்ணமேயாதல் போலப், பேரின்ப உருவமாகிய இறைவனையடைந்து அவன் வண்ணமாகவே ஆவதற்குத் 'திருவருள்' ஒளியைக் கைக்கொள்ள வேண்டும். இதுவே 'ஆன்மசுத்தி' பெறக்கூடிய உயர்ந்த வழியாகும். இதனால் உயிரானது, சிவபோகத்தில் அழுந்தி இன்புறும்.

## 'திருவருள்' பெற்ற அடியார்கள்

இத்தகைய திருவருளினால், எல்லாம்வல்ல சிவபெருமானின் திருவடிப் பேற்றுக்கு ஆட்பட்ட அடியார்கள் பலராவர். அவருள் அறுபத்து மூவரின் வரலாற்றை எடுத்துரைப்பது 'பெரியபுராணம்'.

ஞானசம்பந்தர், தம் மூன்றாம் வயதிலேயே இறைவனின் திருவருளைப் பெற்றவர். இதனை, மறை. திருநாவுக்கரசு, பின்வருமாறு விளக்குவர் :

*"சிவபெருமான், பிராட்டியுடன் தம் உண்மையான ஒளி உருங்கள் கொண்டு, குழந்தைமுன்னுற்றார். சிவபிரான் ஆணைப்படி அருள்வடிவினளாகிய அம்மையார், தம் கொங்கைகளிலிருந்து பொழியும்*

*தீம்பாலைப் பொற்கிண்ணம் ஒன்றில் நிறையச் செய்தார். யாராலும் ஆய்ந்து - அறிந்து உணரமுடியாத 'சிவஞானத்'தை - கடவுளின் முற்றறிவை அப் பாலிற் குழைத்துக், 'குழந்தாய் உண்க' என்று ஊட்ட முற்பட்டார் . . . ஞானப்பிள்ளையின் அழுகையைத் தீர்த்து ஞானப்பாலை உண்பித்து அருள்புரிந்தார்."*[21]

இதனைச் சேக்கிழார் கூறுவது வருமாறு :

*"எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத் தருளி*
*'உண்ணடிசில்' எனஊட்ட உமையம்மை எதிர்நோக்கும்*
*கண்மலர் துடைத்தருளிக் கையிற்பொற் கிண்ணம் அளித்(து)*
*அண்ணலைஅங் கழுகைதீர்த் தங்கணனார் அருள்புரிந்தார்."*[22]

*"திருஞான சம்பந்தரை இறைவன் ஆட்கொண்டதாகக் கூறப்படும் நிகழ்ச்சி; இறைவனே உயிர்களுக்கு இறங்கிவந்து அருள்புரியும் பண்பை உணர்த்தும்"*[23]

எனக் கோமதிசூரியமூர்த்தி குறிப்பிடுவர்.

நாவுக்கரசர், சைவசமயத்தில் தோன்றியபோதிலும் சிவபெருமான் **அருள்இலாமையால்**, புறச்சமயம் குறுகினார் என்பர் சேக்கிழார்.[24] திலகவதியார் வேண்டுதலுக்கு இரங்கிய இறைவன், நாவுக்கரசருக்குச் 'சூலை' நோய் வரச் செய்ய, வேறுவழியின்றித் தம் தமக்கையாரை வந்தடைந்தார். அப்போது திலகவதியார்,

*"ஆளுடைய தம்பெருமான் அருள் நினைந்து"*[25]

கைதொழுதார். திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்பப் 'பெருவாழ்வு வந்தது' என எண்ணி இறைவன் திருக்கோயிலுக்குச் சென்று, வலங்கொண்டு இறைஞ்சித் தரையின்மிசை வீழ்ந்தார். அதுகாலை,

*". . . . . தம்பிரான் திருவருளால்*
*உரைத்தமிழ்மா லைகள்சாத்தும் - உணர்வு"*[26]

பெற்றார் நாவரசர்.

இவ்வாறு, இறைவனின் திருவருள் இல்லாமையால் நாவரசர் புறச்சமயம் சார்ந்ததும்; அவனது திருவருள் கிட்டியதும், மீண்டும் சைவஞ் சார்ந்து திருத்தொண்டு மேற்கொண்டதுமாகிய வரலாற்றைச் சேக்கிழார் இனிதெடுத்துரைப்பர்.

திருமுனைப்பாடி நாட்டில், திருநாவலூரில் அவதரித்த சுந்தரரைச் சொல்லவந்த சேக்கிழார்,

*"அருமறைச் சைவம் ஓங்க அருளினால் அவதரித்த"*[27]

நம்பியாரூரர் என்பர்.

மணிவாசகருக்கு இறைவன் காட்டிய திருவருளை எழுத்தால் வடித்தல் இயலாது. இதுகுறித்து மறைமலையடிகள் கூறுவது உன்னத்தக்கது :

> *"திருப்பெருந்துறையில் குருந்தமர நீழலில், அடியவர் குழாத்தொடும் போந்தமர்ந்து, தம்மை ஆட்கொண்ட குருவடிவினையும், அதன்பின் குதிரைகள் கொணர்ந்த வாணிகச் சாத்திற்குத் தலைவனாய் ஓரழகிய பரிமீது இவர்ந்து, பாண்டியன்முன் போந்து, தம்பொருட்டு அக்குதிரையின் பல்வேறு நடைகளையும் அவ்வரசன்முன் நடாத்திக்காட்டிய சேவகன் வடிவினையும், அதன்பின் மதுரைப் பிட்டுவாணிச்சி பொருட்டு மண் சுமக்குங் கொற்றாளாய்ப் போந்து, பாண்டிவேந்தன் கையாற் பிரம்படியுங் கொண்டு, மறைந்த ஐயன் அருமைத் திருவுருவினையும், மாணிக்கவாசகர் நேரே கண்டவராதலின், பொல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட மக்களுக்காகத் தேவர்க்கும் அரியனான சிவபிரான், அத்துணை எளியனாய் வந்து செய்த பேரருட்டிறத்தை நினைந்து நினைந்து ஆற்றா நிலையினராகி, அவ் ஆண்டவன்பால் வைத்த பேரன்பால் ஆவியோடு ஆக்கை புரைபுரை கனியப் பெற்றார். பலகாற் பல்லாருங் காண வந்து இறைவன், மாணிக்கவாசகர்க்கு அருள் செய்தவாறு போல் வேறெவர்க்குஞ் செய்திலர்."*[28]

மணிவாசகரின் திருவாசகத்தை விரிவாக ஆராய்ந்து, ஆங்கிலத்தில் வெளிப்படுத்திய இராதா. தியாகராசன்,

> *"திருப்பெருந்துறையில் 'குரு'வாக எழுந்தருளிய இறைவன், மணிவாசகருக்குச் 'சூக்குமபஞ்சாக்கரத்'தை உபதேசித்து, அவரின் தலையில் தன் திருவடி சூட்டினன்"*[29]

என்பர்.

- இவ்வாறு இறைவனின் திருவருள் பெற்றோர் பலராவர்.

" 'அருளுரு நிலை' என்பது திருவருள் இயைந்தியக்கும் ?ரியநிலை. 'திருவருளுரு' என்பது, மண்ணவரையும் விண்ணவரையும், மற்றுள்ள சிற்றுயிர்களையும் பெருந்தண்ணளியுடன் பேணிவரும் தண்ணீராகும். சிவன் - தீயின் தன்மையாகும்; சிவபெருமானின் திருவருள் ஆற்றல் - நீரின் தன்மையாகும்"[30]

எனப் ப. இராமநாதபிள்ளை கூறுவது இவண் எண்ணத்தகும்.

## முடிவுரை

இவ் இயல் வாயிலாக அறியத்தகும் முடிபுகளாவன :

1. சைவ சித்தாந்தத்தில் சொல்லப்படும் இறைவனுடைய திருவருள், ஈடு இணையற்றது.
2. இறைவன் ஒருவனே மிகப்பெரிய கருணையாளன்; அவனது கருணைத் திறத்தாலே படைப்புத் தொழில் நிகழ்கின்றது.
3. இறைவனது 'சிற்சத்தி' ஆற்றலே 'திருவருள்' எனப்படும்.
4. இறைவனும் தன் சத்தியுடன் இணைபிரியாது இருப்பதால், இவ்வுலக உயிர்களும் இன்பத்தை நுகர்கின்றன.
5. இறைவன் தன் சத்தியும் தானுமாக இரு தன்மைப்பட்டு நிற்பது, 'தாதான்மிய சம்பந்தம்' எனப்படும்.
6. இறைவனுக்குரிய எண்குணங்களில் 'பேரருள் உடைமை'யும் ஒன்று.
7. ஆணவமலத்துள் சிக்குண்ட உயிர்களை உய்வித்துத் தன்பால் சேர்ப்பிப்பது திருவருளாகும்.
8. ஆணவத்தின் வலிமை கெட்டு மலபரிபாகம் உண்டாகும்போது, உயிருக்குள் மறைந்து நின்ற திருவருள் அருட்சத்தியாக வெளிப்பட்டு நிற்கும்.
9. இறைவனது சிற்சத்தி செயல்படுங்கால், 'திரோதான சத்தி, அருட்சத்தி' என இருவகைப்படும்.
10. இறைவன், தன் திருவருளால் உயிரோடு 'ஒன்றாய், வேறாய், உடனாய்' இருந்து அருள்புரிவதைச் சைவசித்தாந்தம் 'அத்துவிதம்' என்று சிறப்பாகப் பேசும்.
11. 'திருவருள்' ஒன்றே, உயிருக்கு எல்லா நிலையிலும் ஆதாரமாக உள்ளது; உயிரை வாழ்விக்க எழுந்த பேரொளியும் இதுவேயாம்.

12. ‘திருவருள்’ பெற்ற அடியார்கள் பலராவர்; அவருள், ‘சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர்’ எனும் நால்வரும் குறிப்பிடத்தக்க அருளாளர்கள். இந்நால்வரினும், மணிவாசகருக்கு இறைவன் அருள் செய்ததுபோல் வேறெவர்க்கும் செய்திலன்.

13. இறைவனின் திருவருள், நீரின் தன்மைபோல் தண்ணியது.

**சான்றெண் விளக்கம்**

1. தே.ஆ. ஸ்ரீநிவாஸன், **திருமந்திரக் கட்டுரை** (பாயிரப் பகுதி), ப.95.
2. **திருவாசகம்**, வ. எண். 1:18.
3. **திருக்குறள்**, அதிகாரம்-25, பரிமேலழகர் உரை.
4. **திருவாசகம்**, 2:107.
5. **தாயுமானவர் பாடல்**, பரசிவவணக்கம், 1:2
6. இளவழகனார், **சிவஞானபோத ஆராய்ச்சி**, ப.126.
7. கி. பழனியப்பன், **ஒன்றே குலம் - ஒருவனே தேவன்** (சித்தாந்த விளக்கம்), ப.17
8. கா. சுப்பிரமணியபிள்ளை, **சைவசித்தாந்த உண்மை வரலாறு**, பக்.13,14.
9. இளவழகனார், **மு.கா. நூல்**, ப.126.
10. **சம்பந்தர் தேவாரம்**, 1:1.
11. **அப்பர் தேவாரம்**, 249:1.
12. **திருவாசகம்**, 375:2.
13. ஆ. ஆனந்தராசன், **சிவஞானபோத வழித்துணை விளக்கவுரை**, பக்.63,64.
14. ச. சாம்பசிவனார், **திருவாசகத்தில் சைவசித்தாந்தக் கருத்துக்கள்**, ப.33.
15. **திருவாசகம்**, 369:4
16. சி. அருணைவடிவேலு முதலியார், **முப்பொருள் இயல்பு**, ப.77.
17. **திருவாசகம்**, 1:61.
18. **மேலது**, 168:4.
19. சி. அருணைவடிவேலு முதலியார், **சிவஞான மாபாடியம் பொருள்நிலை விளக்கம்**, ப.309.
20. **அப்பர் தேவாரம்**, 6864:2; 7175:4.
21. மறை. திருநாவுக்கரசு, **பெரியபுராண ஆராய்ச்சி-3ஆம் தொகுதி - சம்பந்தர்**, ப.8.
22. **பெரியபுராணம்**, திருஞானசம்பந்தர். 68.
23. கோமதி சூரியமூர்த்தி, **திருஞானசம்பந்தர் தேவாரமும் சைவசித்தாந்தக் கருத்துக்களும்**, ப.285.
24. **பெரியபுராணம்**, திருநாவுக்கரசர், 37.
25. **மேலது**, 64:2

26. **மேலது, 69:3.**

27. **மேலது,** தடுத்தாட்கொண்ட புராணம், 2:2.

28. மறைமலையடிகள், **மாணிக்கவாசகர் மாட்சி,** ப.13.

29. Radha Thiagarajan, **A Study of Mysticism in Tiruvacakam**, p.2.

30. ப. இராமநாதபிள்ளை, (உ.ஆ.) **தேவார அருள்முறைத் திரட்டு,** ப.15.

# 4
# சிவஞானபோதத்தில் திருவருள் விளக்கம்

## னுரை

இறைவனின் எண்குணங்களுள் ஒன்றாகிய 'பேரருள் உடைமை' தற்கு மறைமலையடிகள், பின்வருமாறு விளக்கம் தருவர் :

*"அறிவுப் பொருள்களான உயிர்த் தொகுதிகள் தம் இயற்கையறிவு சுருங்கிப் பேரின்ப நுகர்ச்சிப் பேறு எய்தற்கு, உரிமை இலராய் வருந்துதலைக் கண்டு, அவர்கட்குப் பாசக்கவிப்பினை விலக்கிப் பேரின்பந் துய்ப்பித்தல் வேண்டுமென்று எழும் இரக்கம் உடைமையாம்; இவ் இரக்கம் இல்வழி உயிர்கட்கு அறியாமை நீக்கமும், அறிவுப் பேறும் நிகழா . . . எல்லாப் பொருட்கும் முதல்வனாவான் தனக்கொரு குறைபாடும் இன்மையின் அவன் பிறர்பால் ஒன்று வேண்டுவானும் அல்லன்; அல்லது இவனுக்கு உரிமை இன்றாய்ப் பிறராற்றரப்படுவதாம் பெரும்பொருள் ஒன்றுண்டோவெனக் கூறி மறுக்க. இதனான் இறைவன் ஐந்தொழிலியற்றும் உபகாரத்திற்குப் பிறிதொருவாற்றாற் காரணம் கற்பித்தல் பொருந்தாமையின் அதற்கு இரக்கமே காரணமாம் என்பது துணியப்படும்."*[1]

இறைவனின் இத்தகைய திருவருள், மெய்கண்டாரருளிய ்னபோதத்தில் எவ்வாறெல்லாம் விளக்கம் பெற்றுள்ளது என்பதை ்வதே இவ் இயலின் நோக்கம்.

## னபோதத்தில் 'அருள்'

மெய்கண்டார், தம் நூலில் 'அருள்' என்ற சொல்லை எட்டு ்ளில் ஆண்டுள்ளார். இது தவிரச் 'சத்தி', 'ஆணை', 'கழல்', 'சீபாதம்', 'அடி', 'தாள்' முதலான சொற்களையும் ஆண்டுள்ளார். யல்லாம், முதல்வனின் 'திருவருளை'க் குறிக்கவந்தன

## அத்துவிதமும் இறைவன் திருவருளும்

'நத்துவிதம்' என்ற வடசொல்லில் உள்ள 'நகர' மெய் கெட்டு, அதன் மேல்நின்ற 'அகரம்' முதலாக நின்று, தமிழில் 'அத்துவிதம்' என வழங்குவதாயிற்று.

'அத்துவிதம்' என்ற சொல்லில் முன்நின்ற 'அகரம்', 'அன்மை, இன்மை, மறுதலை' என்னும் மூன்று பொருளை உணர்த்தும்.[3]

(எ.டு.) அப்பிராமணன், பிராமணனாயிருந்தும், பிராமணத் தன்மையில்லாமையைக் குறிக்கும். எனவே 'அகரம்', **அன்மைப்** பொருளில் வந்ததாம்.

(எ.டு.) அமலம். 'மலம் இன்மை'யைக் குறிக்கும். எனவே, ஈண்டு 'அகரம்', **இன்மைப்** பொருளில் வந்த்தாம்.

(எ.டு.) அநீதி. நீதியின் மறுதலையைக் குறிக்கும். ஆதலின் 'அகரம்' **மறுதலைப்** பொருளில் வந்தது.

இவற்றுள், ஏகான்மவாதிகள், 'இன்மை'ப் பொருள் கொண்டு, "இரண்டாவதாகிய பசு, பாசப் பொருள்கள் இல்லை; பிரமப்பொருள் ஒன்றே உள்ளது" என்றுரைப்பர். "ஒன்று என்று உணர்வது வேறு உண்டு." எனவே இக்கருத்துப் பொருந்தாது.

இனி, மத்துவர், 'மறுதலைப்' பொருள் கொண்டு, "நீதியும் அநீதியும் வேறுவேறு ஆதல்போல, ஒன்றாகிய கடவுளும், இரண்டாவதாகிய உயிரும் வேறுவேறாய் நிற்கும்" என்பர். வேறுவேறு ஆயின், கடவுள் வியாபகத்துக்கு இழுக்கு நேரும்; அன்றியும், உயிருக்குத் தனித்து நிற்கும் சுதந்திரமும் உண்டு என்றாகும். இது, நூலோடும் அனுபவத்தோடும் முரணுவது ஆதலின் இக்கருத்தும் பொருந்தாது.

இனிப் பாஞ்சராத்திரிகளும், 'இன்மை'ப் பொருளே கொள்வர். 'கடவுள் வியாபகப் பொருள்; உயிரும் பாசமும் கடவுளில் அடக்கம்; ஆனால் உயிரும் பாசமும் பல ஆயினாற்போலக் கடவுளும் பலவல்ல, ஒன்றே' என்பர். இவர்கள், 'அத்துவிதம் என்பதும், ஏகம் என்பதும் ஒரு பொருட் சொற்கள்' என்பர். 'ஏகமேவ அத்துவிதீயம் பிரமம்' எனுமிடத்து, "ஏகமாகிய பிரமம் பல உயிர்களோடு கலந்து நிற்கும்" எனப் பொருள் கொளவேண்டும். எனவே பாஞ்சராத்திரிகள் கூறும், "அத்துவிதம் என்ற சொல்லிற்குக் கடவுள் ஒன்று" என்ற கருத்தும் பொருந்தாது.

'அத்துவிதம்' என்ற சொல்லிற்குச் சிவஞான முனிவர் கூறும் உரைக்கருத்து வருமாறு :

'அகரம்' பொருட்பெயர்ச் சொல்லில் வரும்போதுதான், 'அன்மை, இன்மை, மறுதலை' என்னும் மூன்று பொருள்களைத் தரும். எண்ணுப் பெயர்ச் சொல்லில் (அஃதாவது துவிதம்) வரும்போது 'அன்மைப்' பொருள் ஒன்று மட்டுமே தரும். எனவே, 'அத்துவிதம்' என்பதன்கண் உள்ள 'அகரம்', இரண்டு அன்மையைக் குறிக்கும்.

'அப்பிராமணன்' என்பதில் உள்ள 'அகரம்', எவ்வாறு 'பிராமணனாக இருந்தும் பிராமணத்தன்மை 'இல்லாமை'யைக் குறிக்கிறதோ, அதுபோன்றே ஈண்டு 'அத்துவிதம்' என்பதில் உள்ள அகரமும், கடவுளும் உயிர்களும் பொருள் தன்மையால் இரண்டாயினும், இரண்டின் தன்மையாக வேறுபிரித்து அறியவராது, கண் ஒளியும் ஆன்மபோதமும் போலக் கலந்து நிற்கும்!

எனவே, 'அத்துவிதம்' என்ற சொல்லால், கடவுளும் உயிரும் பிரிப்பின்றி நிற்கும் என்பது பெறப்பட்டு, அதனால் 'ஒன்றாய் - வேறாய் - உடனாய் நிற்றல்' எனும் மூன்றும் பெறப்பட்டமை காணலாம்.[4]

இதனை மெய்கண்டார்,

*"அவையே தானே யாய்இரு வினையில்*
*போக்கு வரவு புரிய ஆணையின்*
*நீக்கம் இன்றி நிற்கும் அன்றே"*[5]

என்ற நூற்பாவால் உணர்த்துவர்.

சங்கார காரணனாகிய முதல்வன் உயிர்களின் பொருட்டு, உலகைத் தோற்றுவிப்பன். அவ்வாறு தோற்றுவிக்குங்கால், அவ் உயிர்களோடு ஒன்றாய் நிற்பானோ? வேறாய் நிற்பானோ? உடனாய் நிற்பானோ? எனும் ஐயம் எழும். அதற்கு விடைகூறுமுகமாக அமைவது "அவையே தானேயாய்" என்னும் தொடர்.

**ஒன்றாதல்**

"அவையே தானேயாய்" என்பதைப் பின்வருமாறு கொண்டு கூட்டவேண்டும்.

அவையேயாய் - ஒன்றாதல்
தானேயாய் - வேறாதல்
அவையே தானேயாய் - உடனாதல்

உடல் இருத்தற்கு, உடலினிடத்து உயிர் கலந்து நின்று அவ் வுடலேயாய் நிற்பதுபோல், உயிர்கள் நிலைத்தற்கு உயிர்களிடத்து இறைவன் கலந்து நிற்றலின் அவ்வுயிர்களேயாய் அஃதாவது ஒன்றாய் நிற்பன்.

இவ்வாறு முதல்வன் உயிர்களுடன் கலந்து **ஒன்றாய்** நிற்றற்கு, மெய்கண்டார் கூறும் உதாரணம் வருமாறு :

*"கட்டு முறுப்புங் கரணமுங் கொண்டுள்ளம்*
*இட்டதொரு பேரழைக்க என்னென்றாங் - கொட்டி*
*அவனுளமா கில்லான் உளமவனா மாட்டா*
*தவனுளமா யல்லனுமாம் அங்கு"*[6]

உயிரானது, நரம்பு முதலியவற்றால் கட்டப்பட்டிருக்கும் உடம்பையும், மெய் வாய் கண் மூக்குச் செவி முதலான கருவிகளையும் பற்றி நிற்கும். அப்போது அவ்வுடம்புக்கென ஒரு பெயர் இடப்படும். அவ்வாறு உடம்புக்கு இட்ட பெயரால் 'சாத்தா, கொற்றா' எனப் பிறர் அழைத்தால் அவ்வுடம்போடு கூடிய உயிர்தான் 'என்ன?' என்று கேட்கும்; அஃதாவது, உடம்போடு கூடிய உயிர், அவ்வுடம்பு வேறு, தான் வேறு என்ற வேற்றுமையின்றிக் கலந்து நிற்கின்றது என்பதாம். அதுபோன்றே, முதல்வனும் உயிர்களுடன் கலந்து நிற்பன். அப்படிக் கலந்து நிற்பினும், உடம்பு உயிராகாது; உயிரும் உடம்பாகமாட்டாது. அதுபோல், முதல்வன் உயிராக மாட்டான், உயிரும் முதல்வனாக மாட்டாது என்று உணர்தல் வேண்டும்.

- இவ்வாறு உயிர்களோடு இறைவன் **ஒன்றாய்** நிற்பன்.

**வேறாதல்**

கண்ணுக்குக் காணும் தொழில் நடப்பதற்குத் துணையாய் நிற்பது சூரிய ஒளி; எனினும் கண்ணினின்றும் சூரியஒளி வேறாதல்போல், உயிர்களுக்கு அறிதல் தொழில் நிகழ்தற்குத் துணையாய் நின்று அறிவிக்கும் இறைவனும், அவ் உயிர்களின் வேறானவன். இதற்கு, மெய்கண்டார் காட்டும் உதாரணம் வருமாறு :

*"ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்*
*ஒன்றென்ற நீபாசத் தோடுளைகாண் - ஒன்றின்றால்*
*அக்கரங்க ளின்றாம் அகரவுயி ரின்றேல்*
*இக்கிரமத் தென்னு மிருக்கு"*[7]

வேதத்தில் 'ஒன்று' என்று கூறியதற்குப் பொருள், 'பதிப்பொருள் ஒன்று' என்பதேயன்றிப் பசுவாகிய இரண்டாவது பொருள் இல்லை என்றல் பொருந்தாது.[8]

'அகர'மாகிய உயிரெழுத்து, பிற எழுத்துக்களோடு பிரிப்பின்றிக் கலந்துநின்று அவற்றை இயக்குகின்றது. அகர உயிர் இல்லையேல் பிற எழுத்துக்களுக்கு இயக்கம் இல்லை; அஃதாவது அகர உயிர் இல்லாமற்போனால் வேறு ஓர் எழுத்தும் இல்லையாம். இப்படிக் கூறுவதனால், அகரமே, எல்லா எழுத்துக்களாகவும் நிற்கிறது எனல் கூடாது; அகர உயிர் வேறு; பிற எழுத்துக்களும் வேறுதான். ஆயினும் அகர உயிரின் இன்றியமையாமை கருதி இவ்வாறு கூறப்படுகிறது. அதுபோலவே "பிரமம் இல்லையாயின் வேறொரு பொருள் இல்லை" என்று வேதம் கூறுவதாயிற்று.[9]

இதனால், 'முதல்வன் வேறு உயிர்கள் வேறு' என்பது பெறப்படுகின்றது. இதுவே '**வேறாதல்**' என்பதன் கருத்து.

**உடனாதல்**

கண்ணொளி, பொருளைக் காண்பதற்கு ஆன்மபோதம், உடன்நின்று, அக் கண்ணொளியோடுகூட, பொருளிற் செல்லவேண்டும். அவ்வாறே, உயிர்களும் இன்பதுன்பங்களை நுகர்வதற்கு, அவ் இன்பதுன்பங்கட்கு முன்னிலையாகிய விடயங்களில், உயிரோடு இறைவனும் செல்லுதல் வேண்டும். இவ்வகையில் இறைவன், உயிர்களோடு **உடனாய்** நிற்கின்றான் என்பது தெளிவு.

இதற்கு மெய்கண்டார் கூறும் உதாரண வெண்பா வருமாறு :

*"பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும்*
*எண்ணுஞ் சுவையும்போ லெங்குமாம் - அண்ணல்தாள்*
*அத்துவித மாதல் அருமறைக ளொன்றென்னா*
*தத்துவிதம் என்றறையம் ஆங்கு"*[10]

இதன் பொருளாவது :

பண்ணும், அதனோடு பிரிப்பின்றி நிற்கும் ஓசையும் போலவும்; பழமும் அதனோடு பிரிப்பின்றி நிற்கும் சுவையும் போலவும், எல்லா இடத்தும் பரந்து நிற்கும் **முதல்வன் திருவருள்** உயிர்களோடு பிரிப்பின்றி நிற்கும். முதல்வன் இவ்வாறு பொருள்களில் பிரிப்பின்றி நிற்றலை உணர்த்துவதற்காகவே வேதம், 'பிரமம் ஏகம்' என்று கூறியதோடு அமையாமல் 'பிரமம் அத்துவிதம்' என்றும் கூறிற்று.

"உயிர்களோடு முதல்வன் **திருவருள்** பிரிப்பின்றி நிற்பதை உணர்த்துதற்கு வேதங்களில் அத்துவிதம் என்று கூறப்பட்டுள்ளது" என்பது கருத்து.

பண் - ஓசை; பழம் - சுவை என்பதைப் பின்வருமாறு விளக்கலாம் :

| **உவமை** | - | **பொருள்** |
|---|---|---|
| பண் | - | உயிர் |
| ஓசை | - | இறைவன் |
| பழம் | - | உயிர் |
| சுவை | - | இறைவன் |

'ஓசை' என்பது 'குணம்'; பண் என்பது அக்குணத்தையுடைய குணி; இவ்வாறே 'சுவை' என்பது 'குணம்'; 'பழம்' என்பது அக்குணத்தையுடைய 'குணி'; இதுகுறித்து, ஆ. ஆனந்தராசன் கூறுவது இங்கு எண்ணத்தகும்.

*"இவற்றை அப்படியே பொருளோடு பொருத்தினால் இறைவனை 'உயிரின் குணம்' என்று கொள்ள நேரிடும். அவ்வாறு கொள்ளுதல் கூடாது. இறைவன் உயிரிடத்தில் நிறைந்திருக்கின்றான் என்னும் அளவுக்கே இவ்வுவமைகளைக் கொள்ளுதல் வேண்டும்.*[11]

இதுகாறும் 'ஒன்றாய் நிற்றல்; வேறாய் நிற்றல்; உடனாய் நிற்றல்' எனும் இம்மூன்றற்கும் வேறுவேறு உவமைதந்து விளக்கிய மெய்கண்டார், 'இத்தகு எடுத்துக்காட்டினால், ஒருகால், பல்வேறு முடிபுகளை உடையது என்னும் குற்றம் கூறுவரோ' என்னும் வினாவை உளத்துட்கொண்டு, "அது குற்றமாகாது; எனினும் ஒரே ஓர் உவமை மூலமாகவும் இம்மூன்றனையும் விளக்கலாம்" எனும் நோக்கத்தால் பின்வரும் வெண்பாவை அருளினர் :

*"அரக்கொடு சேர்த்தி அணைத்தஅக் கற்போல்*
*உருக்கி உடங்கியைந்து நின்று - பிரிப்பின்றித்*
*தானே உலகாந் தமியென் உளம்புகுதல்*
*யானே உலகென்பன் இன்று."*[12]

அரக்கை உருக்கி, உருக்கப்பட்ட அவ் அரக்கினோடு கற்பொடியைச் சேர்த்துக் கூட்டினால், அக்கற்பொடியானது அந்த அரக்கோடு ஒன்றாய்க்கூடி நீக்கமின்றி நிற்கும். அதேவேளை, தன்தன்மை திரியாது **வேறாயும்** நிற்கும்; அரக்கோடு நீங்காது உடனாயும் நிற்கும். அதுபோல முதல்வனும் உலகத்தோடு ஒன்றாய் இயைந்து அவையேயாகி நிற்பான்; பொருள் தன்மையால் வேறாகித் தானேயாய் நிற்பான்; யாண்டும் நீங்காது உலகமும் தானுமாய் உடனாகியும் நிற்பான்.

*"கலப்பாய் நிற்றலான் உலகேயாமென்பார், 'உடங்கியைந்து' எனவும்; பொருட்டன்மையால் வேறுநிற்றலால் தானேயாமென்பார், 'நின்று' எனவும்; உயிர்க்குயிராய் நிற்றலால் தானேயுலகாமென்பார் 'பிரிப்பின்றி' எனவுங் கூறினார்"*[13]

என்று சிவஞான முனிவர் நயங்காண்பர்.

## 'திருமுறை' முதலானவற்றில்

இவ் 'அத்துவிதம்' குறித்துத் திருமுறைவாணர்கள், முன்பே எடுத்து மொழிந்துள்ளனர். அவற்றுள் ஒருசில இவண் சுட்டுதல் பொருந்தும் :

*"ஈறாய்முதல் **ஒன்றாய்**இரு பெண்ஆண் குணம் மூன்றாய்*
*மாறாமறை நான்காய்வரு பூதம்அவை ஐந்தாய்*

*ஆறார்சுவை ஏழோசையொடு எட்டுத்திசை தானாய்*
*வேறாய் உடனானான்இடம் வீழிம் மிழலையே."*[14]

எனும் சம்பந்தர் தேவாரத்தில், 'ஒன்றாய் வேறாய் உடனாய்' நிற்கும் தன்மைகள் ஒருசேர இயம்பப்பட்டுள்ளன.

திருநாவுக்கரசர் தேவாரத்தில், பல்வேறிடங்களிலும் இவ் 'அத்துவிதக்' கருத்துக்கள் வந்துள்ளன.

*"ஒன்றா வுலகனைத்து மானார் தாமே"*

*"மண்ணல்லை விண்ணல்லை . . . "*

*"உடனிருந்து அறிதி"*[15]

என்பன சான்றுகள்.

சுந்தரரும்,

*"பண்ணிடைத் தமிழ்ஒப்பாய் பழத்தினிற்*
*சுவையொப்பாய்"*[16]

இவ்வாறே மணிவாசகரும், தம் திருவாசகத்தில் பல்வேறிடங்களிலும் அத்துவிதக் கருத்தை மொழிந்துள்ளார்.

*"நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே"*[17]

என்பதற்கு ஔவை சு. துரைசாமிபிள்ளை கூறும் விளக்கம் இவண் சுட்டத்தகும் :

*"மலரும் மணமும் வேறாயினும் தோன்றுங்கால் மலர் வேறு மணம் வேறாகப் பிரித்தறிய வொண்ணாதவாறு ஒன்றாய் நிற்பதுபோல, உயிர்களிடத்தே உயிர்க்குயிராய் வேறு பிரித்தறியாவாறு ஒன்றாய் இயைந்து நிற்குமாறு தோன்றவே 'நாற்றத்தின் நேரியாய்' என்றும்; உயிர்களின் வேறாய்ப் பிரிந்து நிற்குங்கால் சேயன் ஆதலும்; சேயனாகாது உயிரும்தானும் ஒருங்கே உடனிருக்குங்கால் அணியின் ஆதலும் தேர்ந்து, 'சேயாய் நணியானே' என்றும் விளம்பினார்.*[18]

திருமூலர்,

*"மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய்"*[19]

என்று கூறுவதும்; காரைக்காலம்மையார்,

*"அவனே இருசுடர்தீ ஆகாசம் ஆவான்*
*அவனே புவிபுனல் காற்றாவான்"*[20]

என்று கூறுவதும் நோக்கத்தகும்.

இவ்வாறு 'அத்துவிதம்' என்ற சொல்லுக்கு உண்மைப் பொருள்கண்டு உலகுக்கு உணர்த்திய வித்தகச்செல்வர் மெய்கண்டாரேயாவர். சுத்தாத்துவித மெய்யைக்கண்டு இனிது விளக்கியமையாலேயே, 'மெய்கண்டார்' எனும் மெய்ம்மைத் திருப்பெயர் பெற்றார் எனத் தாயுமானவர் விதந்து போற்றுவர்.

*"அத்துவிதம் பெறும் பேரென்று அறியாமல்*
*யான்எனும் பேய் அகந்தை யோடு*
*மத்தமதி யினர்போல மனங்கிடப்ப*
*இன்னம் இன்னம் வருந்து வேனோ?"*[21]

என்பது அவர் வாக்கு.

## உபகாரமும் திருவருளும்

முதல்வன், உயிர்களோடு அத்துவிதமாய் நின்று, அவை பொருள்களை அறிந்து நுகரும்படி செய்கின்றான். அவ்வாறு அவன் செய்யும் உதவியை (1) 'காணும் உபகாரம்' என்றும்; (2) 'காட்டும் உபகாரம்' என்றும் இரு வகையாக வைத்து விளக்கலாம்.

கண்ணொளி, தானாக ஒருபொருளைக் காணமாட்டாது; அவ்வாறு காணவல்லதாயின், இருளிலும் ஒரு பொருளைக் காண்டல் வேண்டும். அஃது இயலாது; ஆதலின், கண்ணொளி தானாக ஒன்றைக் காணமாட்டாது என்பது தெளிவு. அக் கண்ணொளி காண வேண்டுமானால், விளக்கொளி போன்ற ஏதேனும் ஓர் ஒளியின் துணை இன்றியமையாது வேண்டப்படும். எனவே கண்ணொளியானது, வேறோர் ஒளியோடு கூடியபோதே, பொருளைக் காணவல்லதாகும் என்பது புலனாகும்.

இவண், கண்ணுக்குக் கூறியது, உயிருக்கும் பொருந்தும். உயிரின் அறிவும் கண்ணொளியைப் போலவே, ஒரு துணையைக் கொண்டு, ஒன்றனை அறிய முடியும். அதனால்தான், இறைவன், உயிரோடு இயைந்து நின்று, அதன் அறிவை விளக்கி வருதல் இன்றியமையாததாகின்றது. முதல்வனது அறிவு, உயிரறிவில் கலந்துநின்று, அறியாமையை நீக்கி, அதனை விளக்கி யாதொன்றையும் அறியும் தகுதியை அடையச் செய்கின்றது. இது 'காட்டும் உபகாரம்' எனப்படும்.

விளக்கொளி, கண்ணொளியில் மட்டும் பொருந்தினாற் போதாது. கண்ணாற் காணப்படும் பொருளிலும் அவ்வொளி சென்று பொருந்துதலும் வேண்டும். அதாவது விளக்கொளியானது, பார்க்கப்படும் பொருளிலும் பொருந்தி நிற்றல் வேண்டும். அப்போதுதான்

கண்ணொளியானது, பொருளைக் காணவல்லதாகும். அதுபோல, இறைவன் உயிரின் அறிவை விளக்கி அறியும் நிலைமையை உண்டாக்குதலாகிய காட்டும் உபகாரத்தை மட்டும் செய்தால் போதாது; அவ்வறிவு சென்று பொருளை அறிதற்கு, இறைவன் தானும் உடன் நின்று அப்பொருளை அறிதல் வேண்டும். இவ்வாறு உயிரின் அறிவு, பொருள்களை அறியும்படி இறைவனும் அதனோடு உடன் நின்று, அவற்றை அறிதல் 'காணும் உபகாரம்' எனப்படும்.[22]

இதனை மெய்கண்டார் பின்வரும் நூற்பாவில் குறிப்பிடுகின்றார்

*"காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்*
*காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்*
*அயரா அன்பின் அரன்கழல் செலுமே"*[23]

இந் நூற்பாவில் மெய்கண்டார் கூறும் உவமை, மேலேகாட்டியதனின்று வேறுபட்டது.

"கண்ணொளியும் உயிரறிவும்" என்பது உவமை. இதனைப் பின்வருமாறு விளக்குவர் பொ. முத்தையபிள்ளை :

*"கண்ணானது உருவத்தைக் காண வேண்டுமாயின் உயிர் காட்டினாலன்றிக் காணமாட்டாது. உயிர், காட்டக் காணும் தன்மையுடைய அக்கண் உருவத்தைக் காண்பதற்கும் அக்கண்ணோடு உயிர்கலந்து நின்று காணவேண்டும். அவ்வாறு கண்ணுக்கு உருவத்தைக் காணும்படி காட்டியும், அக்கண்ணோடு கலந்து நின்று அவ்வுருவத்தைக் கண்டும் வருகின்ற உயிர்போல, அறிவிக்க அறியும் தன்மையுடைய உயிருக்குப் பொருளை அறியும்படி முதல்வன் அவ்வுயிரோடு கலந்துநின்று அறிவித்தும் அறிந்தும் வருவன்"*[24]

"காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்" என ஆசிரியர் கூறிய உவமையின் கருத்து இதுவாகும். இதில், 'காட்டும் உளம்போல்' என வந்துள்ளது; எனினும் காட்டும் உதவியை உடன் சேர்த்துக் காணும் உதவியைச் சிறப்பாகக் கூறுதலே ஆசிரியரது கருத்தாம்; ஆதலின், 'காட்டிக்காணும் உளம்போல்' என உவமையை அமைத்துக் கொள்ள வேண்டும். அதுபோலவே, 'உள்ளத்தைக் கண்டு காட்டலின்' என வந்துள்ளதை, 'உள்ளத்திற்குக் காட்டிக் காண்டலின்' என மாற்றி வைத்துப் பொருள் காண வேண்டும்.

இவ்விடத்துச் சிவஞான முனிவர் கூறும் உரையினை அறிதல் பொருத்தமாகும் :

*"காட்டக் காணுந் தன்மையுடைய கண், உருவத்தைக் காணும்படி அதனோடொருங்கியைந்து நின்றுகாட்டி அவ்வுருவத்தைக் காண்கின்ற ஆன்மாப் போல, அறிவிக்க அறியுமியல்பையுடைய அவ்வான்மா விடயத்தை யறியும்படி முதல்வன் அதனோடொருங்-கியைந்து நின்று அறிவித்து அறிந்து வருதலான் அவ் அத்துவித நிலையை மறவாது கடைப்பிடித்துச் செய்யும் அன்பானே அம் முதல்வன் திருவடியாகிய சிவானந்தாநுபூதியைத் தலைப்படும்.*

*"காணும் என்னும் உவமையடை பொருளினும்; கண்டு என்னும் பொருள்வினை உவமையினும் சென்றியைந்தன. 'காண' என்பதனை ஈரிடத்தும் கூட்டுக . . . 'கண்டு காட்டல்' என்பது மாறி வைத்துரைக்கப்பட்டது."*[25]

**இந்நுட்பம் உணர்ந்த சித்தியாரும்,**

*"உயிர் காட்டிக் கண்டிடு மாபோல ஈசன் காட்டிக் கண்டிடுவன்"*[26]

என்பாராயினர்.

இதனால், இறைவன் உயிர்களோடு **அத்துவிதமாய்** இயைந்து நின்று, அவ்வுயிர்கள்பொருட்டுக் 'காட்டியும் கண்டும் வருவன்' என்றும், அவ்வாறு அவன் காட்டாமற் போவானாயின், உயிர்கட்கு எந்த ஓர் அறிவோ செயலோ நிகழா என்றும்; அவனையின்றி உயிர்கள் எவ்வழியிலும், எப்போதும் சிறிதும் அமையா என்றும், அறிதல் வேண்டும்.[27]

முதல்வன், உயிருடன் அத்துவிதமாய் நின்று 'காணும் உபகாரத்தைச் செய்வன்' என்பதற்கு மெய்கண்டார் மொழியும் மேற்கோள் வருமாறு :

*"ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை உணருமென்றது"*[28]

''முதல்வனும் உயிர்களால் உணரப்பட்ட விடயத்தை அவ்வுயிர்களோடு உடனின்று உணருவன்" என்பது இதன் பொருள்.

முன்னர் 2ஆவது நூற்பாவில் மெய்கண்டார், 'அத்துவித நிலை' குறித்துப் பொதுவாகக் கூறினார்; ஈண்டு, 'காணும் உபகாரம்' மூலம் சிறப்பாக உணர்த்துகின்றார் எனலாம்.

இவ் 'உபகாரத்தை முதல்வன் செய்வன்' என்பதற்கான ஏது வருமாறு :

*"இவ்வான்மாக்கள் அவனையின்றி யமைந்து ஒன்றையும் விடயியா வாகலான்"*[29]

இதனை இரு தொடர்களாக வைத்துப் பொருள் காணவேண்டும் : (1) இவ் ஆன்மாக்கள் அவனையின்றி அமையா; (2) அவனையின்றி ஒன்றையும் விடயியா.

"உயிரினது அறிவு, தன்னிடத்தில் முதல்வனது அறிவு கலந்துநின்று விளக்கம் செய்தாலன்றிப் பொருளை அறியும் தகுதியைப் பெறமாட்டாது. உயிரறிவு முதல்வனது அறிவால் விளக்கம் பெற்றபின்னும் அம்முதல்வன் தன்னோடு உடன்நின்று பொருளை அறிந்தாலன்றித் தான் மட்டும் தனியே நின்று எப்பொருளையும் அறியமாட்டாது" என்பது இதன்பொருள்.

எனவே, முதல்வனின் துணையின்றி உயிருக்கு எவ்வறிவும் நிகழாது என்பது தெளிவு.

மேலேகூறியபடி, உயிரறிவு பொருளை அறியும் தகுதியைப் பெறுதல், முதல்வனது 'காட்டும் உபகாரத்'தால் ஆம். பின்னர்ப் பொருளை அறிய, இறைவனும் அதனோடு உடனின்று அறிதல் அவனது 'காணும் உபகாரத்'தால் ஆம். எனவே இவ்விருவகை உபகாரங்களும் இன்றியமையாது வேண்டப்படும்.முதல்வன், உயிரின் அறிவை விளக்குதலாகிய 'காட்டும் உபகாரம்' மட்டும் செய்தால் போதாது; அவ் அறிவோடு தானும் உடன் சென்று அறிதலாகிய 'காணும் உபகாரத்'தையும் செய்தல் வேண்டும். இதனை உட்கொண்டே, மேலேகாட்டிய 'அவனும் அவற்றது விடயங்களை உணரும்' என்னும் மேற்கோளை அருளிச் செய்தார் மெய்கண்டார் எனலாம்.

இவண் சுட்டப்படும் 'காட்டும் உபகாரம்' குறித்து மெய்கண்டார், "விளம்பிய உள்ளத்து"[30] எனும் நூற்பாவிலும் குறிப்பிட்டுள்ளார்.

இந் நூற்பாக் கருத்துரையில்,

*"என் நுதலிற்றோஎனின், இவ்வான்மாக்க ளிடத்துத் தமது 'முதல் உபகாரம்' உணர்த்துதல் நுதலிற்று"*[31]

என வந்துள்ளது நோக்கத்தக்கது. இதன்கண் 'முதல் உபகாரம்' என்பது 'காட்டும் உபகாரத்'தையே குறிக்கும். அஃதாவது சகல நிலையில், உயிர்களின் உணர்விற்கு முதலாய் நின்று, இறைவன் செய்யும் இவ்வுதவி 'காட்டும் உபகாரம்' எனப்படும் என்பது கருத்து.[32]

"காணும் கண்ணுக்கு" (நூற்பா : 11)எனும் இந் நூற்பாவில்தான், இறைவன் உயிர்க்குயிராய் உடனிருந்து உயிர் அறியும்பொருட்டுத் தானும் அறிதலாகிய 'காணும் உபகாரம்' சிறப்பாகக் குறிக்கப்பட்டுள்ளது.

உயிர்கள் அறிவனவனைத்தையும் முதல்வனும் உடன் நின்று அறிவான் எனில், அவனும் உயிர்களைப்போல விகாரம் அடைவானோ எனும் ஐயம் எழுதல் கூடும். இதனைப்போக்க எழுந்தது பின்வரும் வெண்பா :

*"ஐந்தையும் ஒக்க உணரா தவற்றுணர்வ*
*தைந்தும்போல் நின்றுணரும் ஆகலான் - ஐந்தினையும்*
*ஒன்றொன்றாப் பார்த்துணர்வ துள்ளமே எவ்வுலகம்*
*ஒன்றொன்றாப் பார்க்கும் உணர்ந்து"*[33]

உயிரானது, சுவை ஒளி முதலிய ஐம்புலன்களையும் ஒரு காலத்திலே ஒருங்கே உணரமாட்டாது ஒவ்வொன்றாகவே அறிந்து நுகரும்; அப்புலன்கள் ஒவ்வொன்றிலும் அதுவதுவாய் அழுந்திநின்று அவற்றை உணரும்.

அவ்வுயிர்போலச் சார்ந்ததன் வண்ணமாய்ப் பலதன்மைப் படுதலின்றி, என்றும் ஒரு தன்மையனாய் நிற்கும் முதல்வன், எல்லாப் புலன்களையும் ஒருங்கே பொதுவாக உணர்ந்து நிற்பான். அவ்வவ்வுயிர் உணரும் புலனைத் தானும் உடனாய் நின்று சிறப்பாக உணர்வான்.

ஒன்றொன்றாகவே அறிதல், அது அதுவாய் அழுந்தி அறிதல் முதலிய தன்மைகள் சிவத்திற்கு இல்லை; எனவே, உயிர்போல வேறுபாடு எய்துதல் இல்லை. உயிரும் சிவமும் உடனாய் நின்று ஒரு புலனை அறியுமிடத்து, உயிரானது அழுந்தி நின்று அறியும்; ஆனால் சிவமோ, அதனை அழுந்தாதே அறியும்.

*"வண்ணந்தா னதுகாட்டி வடிவுகாட்டி*
*மலர்க்கழல்க ளவைகாட்டி"*

*"தாள்தா மரைகாட்டித் தண்கருணைத் தேன்காட்டி"*[34]

எனவரும் திருமுறைப் பாடலடிகள், 'காட்டும் உபகாரத்'தைக் குறிப்பன.

திருவிசைப்பா முதற்பதிகத்தில், பாடல் தோறும் வந்துள்ள தொடர்கள் இறைவனின் 'காணும் உபகாரத்'தைக் குறிப்பன.

*"தொண்டனேன் விளம்புமா விளம்பே"*
*"பணியுமா பணியே"*
*கருதுமா கருதே"*[35]

என்பன சான்றுகள்.

உயிர்களின்மீது இறைவன் கொண்டுள்ள கருணையின் காரணமாகவே 'காணும் உபகாரம், காட்டும் உபகாரம்' எனும் இவ்விரு வகை உபகாரங்களைச் செய்து அருளுகின்றான்.

## திரோதான சத்தியும் திருவருளும்

இறைவனது அறிவாகிய ஆற்றல் 'சிற்சத்தி' எனப்படும். இறைவன் - நாயகன்; இறைவி- நங்கை. சிற்சத்தியானது இறைவனின் வேறாகாது, இறைவனைப் பிரியாது, நீக்கமின்றியிருத்தலின் 'தாதான்மிய சத்தி' எனப்படும்.

மாயையானது இறைவனுக்குப் 'பரிக்கிரக சத்தி'யாக அமையும்.

பரிக்கிரக சத்தி - வைப்பு ஆற்றல். மலங்கள் மூவகைப்படும். அவை, ஆணவம், கன்மம், மாயை. இம்மும்மலங்களும் தத்தம் காரியத்தைச் செய்யும்படி அவற்றைச் செயல்படுத்துவது இறைவனது சிற்சத்தியேயாம். இவ்வாறு செயற்படுத்துவதால், ஆணவமலம், உயிருணர்வைத் திரிபுபடுத்தி, உலகப் பொருள்களையே உயர்ந்தனவாக மதிக்கும்படி செய்கின்றது. கன்மமலம், இன்பதுன்பங்களைத் தந்து, உயிருணர்வை அவற்றில் அழுந்தி நிற்கச் செய்து மயக்குகிறது. மாயாமலம் உலகப் பொருள்களாய் அமைந்து, உயிருணர்வை மயக்கித் தம்மையே பற்றும்படி செய்கின்றது. இம் மும்மலங்களும் உயிருணர்வைக் கவர்ந்து, இறைவனை நோக்கவிடாமல் உலகையே நோக்கும்படி செய்கின்றன.

சிற்சத்தி, அறிவாய் நிற்பது; மாற்றம் அடையாதது. இச்சத்தியானது, மும்மலங்களைத் தொழிற்படுத்தி உயிருணர்வை மறைக்கும்படிச் செய்விப்பதால், 'திரோதானசத்தி' எனும் பெயர் பெறும். திரோதானம் - மறைப்பு.

இத் 'திரோதான சத்தி' குறித்து, ந. சுப்பு ரெட்டியார் தரும் விளக்கம் இவண் குறிக்கத்தகும் :

> *"ஒரு சக்தியே செயலால் பல வகையாகப் (சுடும் சக்தி, அடும் சக்தி, ஒளிரும் சக்தி முதலியவை) புலப்படுவதுபோலவே, இறைவனது சக்தியும் பல வகைகளில் புலப்பட்டுப் பல்வேறு பெயர்களைப் பெறுகின்றது. இறைவனது மேலான பராசக்தி, உலகத்தை நோக்கும்போது 'ஆதிசக்தி' என்ற பெயரைப் பெறுகின்றது. உலகத்தை இயக்கும் எல்லாச் சக்திகட்கும் இதுவே முதல் மூலமாக இருப்பதால் இப்பெயர் பெற்றது . . . . இச்சக்தி, உயிர்கட்கு இறைவனைக் காட்டாமல், உலகத்தையே காட்டி,*

*அவற்றைப் பிறப்பு இறப்புச் சூழலில் அகப்பட்டு உழலச் செய்வதால், அது 'திரோதானசத்தி' என்றும். 'திரோதாயி' என்றும் வழங்கப்பெறும். . . . ஆதிசக்தி, பராசக்தியின் ஆயிரத்தில் ஒரு கூறு என்று கூறுதல் சித்தாந்த மரபு."*[36]

இத் திரோதானசத்தி மும்மலங்களின் வழியில் நின்று மறைத்தலைச் செய்விப்பதால் இதுவும் ஒரு மலமாக வைத்துப் பேசப்படும்.

உயிரானது உலகை நோக்கி நிற்கும் நிலைமாறி இறைவனை நோக்கத் தலைப்படும் பக்குவநிலையை அடையும் காலத்தில், இத் 'திரோதான சத்தி'யே, தன் நிலைமாறி, அருட்சத்தியாக ஆகி, உயிருணர்வில் பதியும். எனவே, சிற்சத்தி ஒன்றே செயல்வகையில் 'திரோதானசத்தி' என்றும் 'அருட்சத்தி' என்றும் கூறப்படுகின்றது.[37]

"நெல்லிற் குமியும்" எனும் வெண்பாவில் வரும்,

*". . . . . . . . . . . . வல்லி*
*மலகன்மம் அன்றுளவாம் . . . ."*[38]

எனும் வெண்பாஅடியின் விளக்கமாக அமைவது இது.

இத் 'திரோதான சத்தி' செயலாற்றும்பொழுது, 'இச்சை, ஞானம், கிரியை' என மூன்றாய் நின்று செயலாற்றும். இவற்றுள் இச்சாசத்தியாவது, "உயிர்களை உய்விக்க வேண்டும்" என விரும்புவது. இது, 'விழைவாற்றல்' எனப்படும். அருள், கருணை, கிருபை முதலான பெயர்கள் இச்சாசத்தியைக் குறிப்பனவேயாம்.

ஞானசத்தியாவது, உயிர்களை உய்வித்தற்குரிய வழிகளையெல்லாம் அறிவது. இஃது 'அறிவாற்றல்' எனப்படும். கிரியாசத்தியாவது அங்ஙனம் அறிந்தவாறே செயலாற்றுவது. இது, 'செயலாற்றல்' எனப்படும்.

இவை குறித்துச் 'சித்தியார்' கூறுவன இங்குக் குறிக்கத்தகும்.

*"ஒன்றதாய் இச்சா ஞானக்*
*கிரியை யென்று ஒருமூன்று ஆகி*
*நின்றிடும் சத்தி; இச்சை*
*உயிர்க்கருள் நேசமாகும்;*
*நன்றெலாம் ஞானசத்தி*
*யால் நயந்து அறிவன் நாதன்;*
*அன்றருள் கிரியை தன்னால்*
*ஆக்குவன் அகிலம் எல்லாம்"*

*"சத்திதன் வடிவு ஏதென்னில்*
*தடையிலா ஞானம் ஆகும்"*[39]

'தடையிலா ஞானம்' எனவே, தடுத்தலை (அதாவது மறைத்தலை)ச் செய்யும் ஞானமும் உளது என்பது விளங்கும். அதுவே 'திரோதான சத்தி' ஆகும். 'இச்சை' முதலிய மூன்றும் இத்திரோதான சத்தியின் பிரிவுகளேயாகும்.[40]

இம்மூன்று சத்திகள் குறித்து, வ.ஆ. தேவசேனாபதி கூறுவது வருமாறு :

*"உயிர்களுக்கும் இம்மூன்று சக்திகளும் உளவாதலின் அவை இறைவனுக்குச் சமமா என்னும் கேள்வி எழலாம். உயிர்களின் சக்திகள் மலத்தால் தடைப்பட்டவை. இறைவன் திருவருள், உயிர்களின் கேவல நிலையில் முழுவதும் தடைப்பட்டிருந்த இச்சத்திகளை உணர்ந்து, இவற்றின் இருவினைக்கேற்பச் சகலநிலையில் ஒருபுடை விளங்கச் செய்து, முத்திநிலையில் முற்றும் விளங்கச் செய்யும்."*[41]

இவ்வாறு கூறும் இவர், உயிர்களின் இம்மூன்று சக்திகளும் எவ்வாறு இயங்கவேண்டும் என்பதற்கு மேல்வரிச் சட்டமாகக் கண்ணப்பரைப் பற்றி இறைவன் கூறியதாகப் பெரியபுராணத்தில் வரும் பாடலைக் காட்டுவர். அது வருமாறு :

*"அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்*
*அவனுடைய அறிவெல்லாம் நமைஅறியும் அறிவென்றும்*
*அவனுடைய செயலெல்லாம் நமக்கினிய வாமென்றும்*
*அவனுடைய நிலைஇவ்வா றறிநீஎன் றருள்செய்தார்"*[42]

இச்சத்திகளைக் கொண்டே இறைவன், தன்னுடைய தொழில்கள் அனைத்தையும் செய்கின்றான். இதனை,

*"நங்கையினான் நாமனைத்தும் செய்தாற்போல்*
*நாடனைத்தும்*
*நங்கையினாற் செய்தளிக்கும் நாயகனும்"*[43]

எனத் திருக்களிற்றுப்படியார் எடுத்துரைப்பது இங்கு ஒப்புநோக்கத்தகும்.

முதல்வனது சத்தி, மும்மலங்களையும் தத்தம் தொழிலினைச் செய்யுமாறு ஏவி, உயிர்களை உலக வாழ்வில் பிணித்து, முதல்வனை உணர வொட்டாது செய்யும் எனில் அதனை 'அருள்' எனல் யாங்ஙனம் பொருந்தும் எனும் ஐயம் எழுதல் கூடும். இதற்கு விடையாக ஆ. ஆனந்தராசன் பின்வருமாறு கூறுகின்றார் :

*"அங்ஙனம் பாசத்தை ஏவுதல், ஆணவமலம் தேய்ந்து நீங்கும் நிலையை எய்துதற்பொருட்டே யாதலின், அதுபற்றியே அத்தகு நன்மையைச் செய்யும் 'திரோதானசத்தி' ஈண்டு 'அருள்' எனப்பட்டது."*[44]

**முதல்வனது சத்தி, மறைப்பாற்றலாக நின்று, உயிர்களது அறிவை ஒருகாலைக் கொருகால் ஆக்கமாகிய முறையில் வேறுபடுத்தி வளர்த்துவரும் என்பதற்கு முன்னர்ச் சுட்டிய,**

*"பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை"*[45]

**எனும் திருவாசக அடி சான்று.**

## உயிரும் திருவருளும்

**சைவசித்தாந்தம் கூறும் முப்பொருள்களுள் 'பசு' என்பதும் ஒன்று. 'பசு' என்பது 'ஆன்மா' அல்லது 'உயிர்'. மெய்கண்டார் தம் நூலில் 3,4,7ஆம் நூற்பாக்களில், 'உயிர் உண்மையும் இயல்பும்' உணர்த்துகின்றார்.**

*"உளதில தென்றலின்"*[46]

**எனும் நூற்பா மூலம் உயிருக்குரிய இலக்கணத்தைக் கூறுகின்றார் :**

*"அந்தக் கரண மவற்றினொன் றன்றவை*
*சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா*
*தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே"*[47]

**என்னும் நூற்பா, உயிரியல்பு உணர்த்துவது.**

**இதற்குச் சிவஞானமுனிவர் தரும் பிண்டப்பொழிப்பு வருமாறு :**

*"ஆன்மா அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, அகங்கார சித்த- மென்னு நான்கனுள், ஒன்றன்றாயினும் (நுண்ணுணர்வின்மையிற் சூழ்ச்சித் துணைவராகிய) அமைச்சரோடு கூடிநின்று (தன்றொழில் நடாத்தும்) அரசன்போல, சகசமலத்தினான் உணர்வின்றி (கஞ்சுகம்போலுங் கலாதிகளாற் பொதுவகையான் உணர்வு நிகழினும் சிறப்பு வகையான் நிகழுமாறு அவற்றாற் பெறப்படாமையிற் சிறப்பு வகையானுணருமாறு தனக்குச் சூழ்ச்சித் துணையாகிய) அவ்அந்தக் கரணங்களோடு கூடிநின்று, சாக்கிர முதலிய ஐந்தவத்தையுடைத்தாம்."*[48]

**இதற்குப் பொ. முத்தையபிள்ளை தரும் விளக்கமாவது :**

*"ஆன்மாவானது, அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் நான்கனுள் ஒன்றன்று.*

*ஆயினும், அரசன் தனக்கு நுண்ணறிவு இல்லாமையினால் ஆலோசனைத் துணைவராகிய அமைச்சரோடு கூடிநின்று, தன் அரசச் செயல்களை நடாத்துமாறு போல,' அனாதியே இயல்பாகக் கூடியிருக்கும் ஆணவ மலத்தினால் அறிவின்றிக் கிடக்கும் உயிருக்குச் சட்டை போன்ற கலை முதலிய தத்துவங்களினால் பொதுவகையான் உணர்வு நிகழினும் சிறப்பு வகையான் உணர்வு நிகழாமையால் அது நிகழ்தற்கு ஆலோசனைத் துணையாகிய அந்தக் கரணங்களோடு கூடி நின்று, சாக்கிரம் முதலிய ஐந்தவத்தையைப் பொருந்தும்."*[49]

உயிரின் இயல்பு விளக்கவந்த சிவஞான முனிவர், 'பொது, சிறப்பு' என்னும் இருவகையால் குறிப்பிடுவர். அவை முறையே, 'தடத்த இலக்கணம்' என்றும், 'சொரூப இலக்கணம்' என்றும் கூறப்பெறும்.

'அந்தக் கரணம்' என்னும் இந்நான்காம் நூற்பாச் சிற்றுரையில் முனிவர்,

*"அஞ்சவத்தைப்படுதல் ஆன்மாவுக்கிலக்கணமென்ற வாறாயிற்று. இஃது உயிருக்குத் தடத்தலக்கண மெனப்படும் பொதுவியல்பு"*[50]

என்று கூறுவது இங்கு எண்ணத்தக்கது.

*"இறைவனைப் பற்றமாட்டாத பாசங்களால் 'பசு' பற்றப்பட்டதாகின்றது. அதனால், பாசம் காரணமாகப் பசுவினிடத்தில், காணப்படுவன யாவும் 'பொதுவியல்பு' எனப்படும் 'தடத்தலக்கணமே'யாகும்"*[51]

என்கிறார் சி. அருணை வடிவேலு முதலியார்.

உயிரின் தன்னியல்புகளில் முதன்மையாகச் சொல்லப்படுவது 'சார்ந்ததன் வண்ணம்' ஆதல் என்பது. ஒரு பொருள் தன்னால் சாரப்பட்ட பொருளின் தன்மையையே தன் தன்மையாகக் கொண்டு நிற்பதுவே 'சார்ந்ததன் வண்ணமாதல்' ஆகும் இத்தன்மையே, உயிர்களின் உண்மை எனப்படும் 'சொரூபலக்கணம்' ஆகும்.[52]

உயிர் ஆணவ மலத்தோடு மட்டும் இருப்பது; பின்பு மாயை கன்மங்களோடு கூடியிருப்பது; பின்பு மும்மலங்களும் நீங்கப்பெற்று இறைவனோடு கலப்பது என மூன்று நிலைகளையுடையது. இந்த நிலையே 'அவத்தை' எனப்படும். இவ் 'அவத்தை' இருவகைப்படும். (1) காரண அவத்தை; (2)காரிய அவத்தை. இவற்றுள் காரண அவத்தைகள் மூன்று. அவை : கேவலம், சகலம், சுத்தம் என்பன.

### கேவலாவத்தை

உயிரானது, மாயை கன்மங்களோடு சேராமல், ஆணவத்தோடு மட்டும் இருப்பது. கேவலம் - தனிமை. ஆணவம் - இருள்; மாயை, கன்மங்கள் - விளக்கு. எனவே உயிரானது, ஆணவத்தோடு மட்டும் இருக்கும்போது, ஒன்றை அறியவோ, செய்யவோ இயலாமல் இருளில் மூழ்கிக் கிடக்கும். இந்நிலையில் அதற்கு உடல், பொறி, கரணம் என்பவற்றில் யாதும் இல்லை. இதனை, 'இருள்நிலை' என்றும் கூறலாம்.

### சகலாவத்தை

கேவல நிலையிலுள்ள உயிர்களுக்கு அப்போதுள்ள அத்துன்பநிலையையறிந்து கருணை கொண்ட முதல்வன், ஆணவத்திற்கு மாற்றாக மாயையிலிருந்து உடல், பொறி, கரணங்களைக் கொடுத்துக் கன்மத்தில் ஈடுபடச் செய்கின்றான். சகலம் - கலை (மாயை)யோடு கூடுதல். இதனால், உயிர் பிறப்பு இறப்புக்களிற்பட்டு உழல்கின்றது. இச் சகலாவத்தையில் உயிருக்கு அறிவு, இச்சை, செயல் அனைத்தும் உண்டு. வினைகளை ஈட்டி அவற்றின் பயன்களை நுகர்தல் உண்டு. இந்நிலையை 'மருள்நிலை' என்பர்.

### சுத்தாவத்தை

ஆணவமலம் பரிபாகம் உற்றபொழுது, இறைவன் தீக்கையால் மும்மலங்களையும் அறுத்து, ஞானத்தைக் கொடுத்துத் தன்மயமாக ஆக்கும் நிலை இது. மலங்களினின்றும் முற்றிலும் நீங்கி, உயிர் தூய்மை பெறுவதால் இப்பெயர்பெற்றது. இதற்கு 'அருள்நிலை' என்றும் பெயர்.

இனிக் 'காரிய அவத்தை' எனப்படுவன ஐந்து. அவை : சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம். இவை முறையே நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் என்று கூறப்படும்.

உயிர்கள், ஐந்தவத்தைகளை அடையும்போது, உடம்புதோறும் அவை வேறுவேறாய் நிகழ்கின்றன. அந்நிகழ்ச்சிகளில் வரும் இன்ப, துன்ப நுகர்ச்சிகளும், உயிர்தோறும் வேறு வேறாகவும் உள்ளன. இதனால், உடம்புதோறும் உள்ள உயிர்கள் அனைத்தும் தனித்தனி உயிர்களேயன்றி ஒன்று அல்லது ஒன்றன் கூறாகாமை புலனாகும். எனவே உடம்புகள் எண்ணிறந்தன; அவற்றையுடைய உயிர்களும் எண்ணிறந்தன என்பது தெளிவு.[53]

### உயிர் - சதசத்து

இனி, மெய்கண்டார், தம் 7ஆம் நூற்பாவில், 'உயிரின் சிறப்பிலக்கணம்' உணர்த்துகின்றார்.

*"யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்*
*சத்தே யறியா தசத்தில தறியா*
*இருதிற னறிவுள திரண்டலா வான்மா"*[54]

இதற்குரிய விளக்கம் வருமாறு :

முன்னைய நூற்பாவாகிய 'உணருரு வசத்தெனின்' என்பதில், 'சிவசத்து, அசத்து' எனும் இரண்டின் இலக்கணம் உணர்த்தினார் ஆசிரியர். இவ்விரண்டில் வாக்குமனோதீதமாகிய சிவசத்தின் சந்நிதியில் பாசஞான, பசுஞானங்களால் உணரப்படும் பொருளாகிய அசத்தெல்லாம் பாழ் ஆதலால் சத்தாகிய சிவம், அசத்தாகிய பிரபஞ்சத்தை அறிதல் செய்யாது. அசத்தாகிய பிரபஞ்சம் அறிவில்லாத சடம் ஆதலால் சத்தாகிய சிவத்தை அறிதல் செய்யாது.

சிவமும் பிரபஞ்சமும் ஆகிய இரண்டும் ஒன்றையொன்று அறியாது என விலக்கவே, முன்னைய ஆறு நூற்பாக்களால் கூறி முடித்த முப்பொருள்களுள் எஞ்சிய 'உயிர்ப்பொருளே' அவ்விரண்டையும் அறியும் என்று கூறுதலே 'பாரிசேட அளவை' எனப்படும்.

'சத்து, அசத்து' என்ற இரண்டையும் அறிவதால் உயிர் 'சதசத்து' எனப்பட்டதே தவிரச், சத்தும் அசத்தும் ஆகிய மாறுபட்ட இரண்டு தன்மையை உடையது என்பதாலன்று.

சார்ந்த பொருளின் தன்மையாய் நிற்றலே, உயிரின் தனித்த இலக்கணம். அவ்வாறு சாரப்படும் பொருள் : சத்து, அசத்து என இரண்டு. எனவே சத்தொடு கூடிச் சத்தாயும், அசத்தொடு கூடி அசத்தாயும் நிற்றலால் 'சதசத்து' எனப்பட்டது.

இவ் 7ஆம் நூற்பா, 3 அதிகரணங்களைக் கொண்டது. அவற்றில் சொல்லப்படும் கருத்துக்களின் சுருக்கம் வருமாறு :

(1) ஒவ்வொன்றாகச் சுட்டியறிதலின்றி எவற்றுடனுங் கலந்து நின்று ஒருசேர அறியும் சிவத்தின் முன்னர்ச் சுட்டியறியப்படும் அசத்தாகிய பிரபஞ்சம் விளங்கித் தோன்றாது. முதல்வனுக்கு இயல்பாகவே உள்ள சிறப்புக் குணங்களுள் ஒன்றாகிய இயற்கை உணர்வின் முன்னர்க் கருவிகளோடு கூடுதலால் உண்டாகும் பொது இயல்பாகிய செயற்கைச் சுட்டுணர்வு பிரகாசித்து நில்லாமையால் ஈண்டும் சத்தினிடத்து அசத்துப் பிரகாசியாது என்பதாம். சூரியன்முன் இருள் விளங்கித் தோன்றாதவாறுபோல, முதல்வன்சந்நிதியில், பிரபஞ்சம் விளங்கித் தோன்றாது. ஆதலால் பிரபஞ்சத்தை முதல்வன் சுட்டியறியான்.

(2) அசத்தாகிய தத்துவப் பிரபஞ்சத்திற்கு அறிவு இல்லை. 'பதிஞானம், பசுஞானம்' எனும் மூன்றில், பாசஞானம் என்பது பிண்டமான மேற்பார்வையால் நோக்குமிடத்து, அசத்தாகிய

அக்கருவிகட்கு உள்ளதுபோலத் தோன்றினும், ஐயம் திரிபின்றிக் குற்றமற்ற காட்சியால் ஆராயுமிடத்து அக்கருவிகளின்கண் அறிவு இல்லை என்பது விளங்கும். எனவே அசத்தினுக்கு உணர்வில்லையாம். அறியாதவனுக்குக் கானலானது நீராய்த் தோன்றினும், நெருங்கிப் பார்த்தவிடத்து, நீர் என்பது இல்லாதவாறுபோல, ஆராய்ந்து அறியாதவிடத்துக் கருவி அறிவுடையதுபோலத் தோன்றினும் அறிந்தவிடத்து அக்கருவி அறிவில்லாததேயாம்.

(3) 'சத்து, அசத்து' என்னும் இரண்டின் இயல்பை அறியும் அறிவுடைய பொருள், சத்தும் அசத்தும் அல்லாத சதசத்தாகிய உயிராம். சத்தாகிய சிவத்தையும், அசத்தாகிய பிரபஞ்சத்தையும் அறியும் தன்மையுடையதாய், அவ்வாறு அறிவதும் தானே அறிதலின்றி அறிவிக்க அறியும் தன்மையுடையதாய், சத்து அசத்து ஆகிய அவ்விரண்டின்கண்ணும் அதுவதுவாய் நின்றழுந்தும் நிலைபெற்ற அனுபவ அறிவு உடையதாய் உள்ளது. சத்தும் அசத்தும் அல்லாத சதசத்தாகிய உயிராம்.

எனவே, "இருதிற னறிவுள திரண்டலா ஆன்மா" என்றார் மெய்கண்டார்.

இனி உயிரானது சத்து, அசத்து இரண்டனையும் அறிந்து, அவ்விரண்டையும் அறியும் வழியால் தன்னையும் அறியும்.

கருவிகளோடு கூடியவிடத்து மயங்காமலும் கூடாதவிடத்து மயங்கியும் அறிகின்ற உயிரானது, என்றும் ஒருபடித்தாய் அறியும் இறைவன்போலச் சத்துமின்றி, என்றும் அறியமாட்டாத பாசம்போல அசத்துமின்றி, 'அறிவு, அறியாமை' என்னும் இரண்டு தன்மையுமுடைய பொருளாதலின் 'சிதசித்து' எனப்படும்.

உப்பானது, நீர்க்கு இடங்கொடுத்திருக்கும் ஆகாசத்தைப்பற்றாது நீரைப்பற்றி நிற்பதுபோல, அஞ்ஞானமாகிய மயக்கம் மெய்ஞ்ஞானமே வடிவாகிய இறைவனைப் பற்றாது உயிரையே அனாதியே பற்றி நிற்கும்.[55]

இதனை விளக்குவது பின்வரும் உதாரண வெண்பா :

*"மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா தசத்தாதல்*
*அஞ்ஞான முள்ள மணைதல்காண் - மெய்ஞ்ஞானந்*
*தானே யுளவன்றே தண்கடல்நீ ருப்புப்போல்*
*தானே யுளமுளவாத் தான்"*[56]

இதனை மறைமலையடிகள் விளக்கும் திறன் இவண் குறிக்கத்தகும் :

"*கடற்பெருவெளியின் வியாபகத்திலே ஆன்மா வியாபித்திருக்கின்றது; நீரின் வியாபகத்திலே உவர் வியாபித்திருக்கின்றது; ஆன்ம வியாபகத்திலே மலம் வியாபித்திருக்கின்றது. சிவம் என்னும் முழுமுதற் பரம்பொருளே ஏனையிரண்டனுள்ளும் நிறைந்திருத்தலின் அதுவே வியாபகப் பொருள் என்றும், மலமானது ஆன்மாவோடு சம வியாபகமாய் நிற்றலின் இது வியாத்திப்பொருள் என்றும் அறிவு நூல்கள் நுவலா நிற்கும்*"[57]

இறைவன் உலகத்தோடு அத்துவிதமாய் இயைந்து நிற்றல் - இயைந்து நின்று உயிர்களுக்கு இருவினைகளைக் கூட்டுவித்தல் - இவ்வினைகளுக்கேற்ப உயிர்களைப் போக்குவரவு புரிவித்தல் ஆகிய அனைத்தும் அவனது சத்தியாலேயாம். அவ்வாறாயின், அவனும் சத்தியும் ஒன்றா, வேறா? அவனுக்கும் சத்திக்கும் உள்ள தொடர்பு யாது எனும் ஐயங்கள் எழும். இதனைப் போக்க எழுந்தது,

"*இனி, நீக்கம் இன்றி நிற்கும் அன்றே*"[58]

எனும் மேற்கோள்.

"இறைவன் தனது சத்தியினின்றும் பிரிப்பின்றி நிற்பான்" என்பது இதன்பொருள். இதுவே, 'தாதான்மிய சத்தி' ஆகும்.

முதல்வனாகிய சிவனும் அவனது சத்தியும் பொருளால் ஒன்றே; ஆனால், செயற்பாட்டில் இருவகைப்பட்டு நிற்கும்.

சூரியனுக்கு இருநிலைகள் உண்டு. ஒன்று, தானேயாய் நிற்கும் நிலை; மற்றொன்று, உலகத்தோடு இயைந்து உலகப் பொருள்களை விளக்கி நிற்கும் நிலை. தன்னிலையில் இருக்கும்போது 'சூரியன்' என்றும், உலகெங்கும் பரவிநின்று பொருள்களை விளக்கிக் காட்டும்போது 'ஒளி' என்றும் இருதிறப்பட்டு நிற்றலைக் காணலாம்.

அதுபோல இறைவனுக்கும் இருவித நிலைகள் உண்டு. ஒன்று, தானேயாய் நிற்கும் நிலை; அந்நிலையில் அவன் தன்னையே தான் விளக்கி நிற்பன்; அதுவே, 'சிவம்' எனப்படும் நிலை. மற்றொன்று, உயிர்களோடும் பாசப் பொருளோடும் இயைந்துநின்று, அவற்றைச் செயற்படுத்தும் நிலை. அதுவே சத்தியாய் நிற்கும் நிலை. எனவே, சிவமும் சத்தியும் பொருளால் ஒன்றாய், தன்மையால் இரண்டாய் ஒன்றையின்றி மற்றொன்று இல்லாத நிலையினவாகும்.[59]

உயிரின் இலக்கணத்தை உணர்த்த வந்த மெய்கண்டார்,

"*அமைச்சு அரசு ஏய்ப்பநின்று அஞ்சு
அவத்தைத்தே*"[60]

என்பர். "அமைச்சர் முதலிய அனைவரோடும் சேர்ந்து ஆட்சியினை நடத்தும் வேந்தன், அந்தந்த நேரத்தில் அந்தந்த அரசச் சுற்றத்தோடு கூடுதலும், பின்னர் நீங்குதலும் ஆகிய பல நிலைகளை உடையவனாதல்போல, உயிரும் அவ்வப்போது அவ்வக் கருவிகளோடு கூடியும் நீங்கியும் விழிப்பு, கனவு, உறக்கம் முதலிய நிலை வேறுபாடுகளை உடையதாம்" என்பது இதன் கருத்து.

உயிரானது தன் பக்குவக் குறைவினால் தன்னிடம் உள்ள திருவருள் ஒளியை உணர்வதில்லை. உயிர் பக்குவமுற்றபோது, அஞ்ஞானமாகிய இருள் கீழ்ப்பட்டொழிய, மெய்ஞ்ஞானமாகிய திருவருள் மேலோங்கும்.

உயிருக்குப் பொதுவியல்பும், உண்மையியல்புமாகிய இரு இயல்புகள் உண்டு. பொதுவியல்பு 'தடத்தலக்கணம்' எனப்படும். உண்மையியயல்பு 'சொரூபலக்கணம்' எனப்படும்.

ஒருபொருளுக்குப் பிறபொருளின் சேர்க்கையால் உண்டாகும் தன்மை 'பொதுவியல்பு' எனப்படும். தம் முறையில் உயிரானது, மாயை, கன்மங்களோடு கூடி, சகல நிலையில் அஞ்சவத்தைப்படுதள், இதற்குப் 'பொதுவியல்பா'கும்.

உயிரின் பொதுவியல்பு உணர்த்தும், "அந்தக் கரணம் அவற்றின் ஒன்று அன்று"[61] எனும் நூற்பாத் தவிர, உண்மையியல் புணர்த்தும் "யாவையும் சூனியம்"[62] எனும் நூற்பாவையும் அருளியுள்ளார் மெய்கண்டார் என்பது மேலே சொல்லப்பட்டது.

இதனை ஆ. ஆனந்தராசன் விளக்குவதனை இவண் காண்டல் பொருத்தமாகும் :

> *"சத்தாகிய சிவத்தின் முன் அசத்தாகிய பாசப் பொருள்கள் வேறாய் எதிர்ப்பட்டு நில்லா; ஆகையால் சத்தாகிய சிவம், தன்னெதிரே நில்லாத பாசப்பொருள்களை அறிந்து நுகராது. இனி, அசத்தாகிய பாசம், அறிவில்லாதது. ஆகையால் அதுவும் சத்தாகிய சிவத்தை அறிந்து நுகராது. அவ்வாறாயின், சத்தும் அசத்தும் ஆகிய அவ்விரு பொருள்களையும் அறிந்து நுகரும் தன்மையுடையதாக மூன்றாவது பொருள் ஒன்று இருக்கவேண்டும். அந்தப் பொருள் அந்த இரண்டும் அல்லாதது. சத்தும் அசத்தும் ஆகாதது. எனினும் அவ் இரண்டின் தன்மையும் கொண்டது. அதனால் அது 'சதசத்து' எனப்படும் அதுவே ஆன்மாவாம்."*[63]
>
> *"இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா"*[64]

என்பது சிவஞானபோத மேற்கோள்.

இருதிறன் - சத்து, அசத்து. சத்தாவது 'சிவம்'; அசத்தாவது 'உலகம்'. இவ்விரண்டையும் அறிந்து நுகர்வது 'உயிர்' ஆகும். அவ் உயிரானது சத்தும் அன்று; அசத்தும் அன்று. அவ்விரண்டும் ஆகாது, அவ்விரண்டின் தன்மையையும் உடையதாய் 'சதசத்தாய்' நிற்கும்.

இதனை, ஆ. ஆனந்தராசன், விளக்கும் முறை வருமாறு :

*"ஆன்மாவைச் 'சத்து' என்பதா? 'அசத்து' என்பதா? 'சத்து' என்று கொண்டால், அசத்தாகிய உலகத்தை அஃது அறியாது எனல் வேண்டும். மாறாக, ஆன்மா உலகத்தை அறிந்து அனுபவிப்பதாக உள்ளது. ஆகவே அதனைச் 'சத்து' என்றல் பொருந்தாது.*

*"இனி ஆன்மாவை 'அசத்து' என்று கொண்டால், சத்தை அஃது அறியாது எனல் வேண்டும். மாறாக, முத்தியில் ஆன்மா, சத்தாகிய சிவத்தை அறிந்து அனுபவிப்பதாக உள்ளது. ஆகவே, அதனை 'அசத்து' என்றலும் பொருந்தாது."*

*"இதனால் ஆன்மா, சத்தும் ஆகாது; அசத்தும் ஆகாது என்பது விளங்கும். ஆன்மா, 'சத்து' ஆகாதெனினும் சத்தினின்றும் முற்றிலும் வேறானதன்று; ஒருவகையில் சத்தாம் தன்மையையுடையது. அதனாலேயே அது, சத்தைச் சார்ந்த பொழுது அதனோடு ஒன்றுபட்டு நிற்பதாகிறது. இனி, ஆன்மா அசத்து ஆகாதெனினும் அசத்தினின்றும் முற்றிலும் வேறானதன்று; ஒருவகையில் அசத்தாம் தன்மையுடையது. அதனாலேயே அஃது அசத்தாகிய உலகத்தோடு ஒன்றுபட்டு நிற்பதாகிறது என்பது விளங்கும்.*

*"சுருங்கக் கூறினால், ஆன்மா, சத்து அசத்து என்னும் இரண்டு ஆகாமல் ஒருவகையில் அவ்விரண்டன் தன்மையையும் உடையதாகின்றது என்பது புலனாகும். அதுபற்றியே 'சதசத்து' எனத் தனிப் பொருளாய்க் கொள்ளப்படுகின்றது"*[65]

இவற்றால், உயிரானது, தான் சார்ந்த பொருளின் தன்மையையே தன் தன்மையாகக் கொண்டு நிற்கும் என்பது புலனாகும்; இத்தன்மை 'சார்ந்ததன் வண்ணம் ஆதல்' எனப்படும்.

சத்து, அசத்து என்னும் இரண்டினாலும் விளங்கி, அவ் இரண்டையும் அறிந்து, அவ் இரண்டிலும் அழுந்தி, 'அது அதுவாதல்' ஆகிய தன்மையே உயிரினது உண்மை இயல்பு எனப்படும் 'சொரூப

இலக்கணம்' ஆகும். அஃதாவது சார்ந்ததன் வண்ணமாதலே உயிரின் உண்மை இயல்பாம்.

இத்தகைய உயிர்களுக்கு இறைவன் செய்யும் உதவி குறித்து மெய்கண்டார் கூறுவது இது :

*"விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்*
*களந்தறிந் தறியா ஆங்கவை போலத்*
*தாந்தம் உணர்வின் தமியருள்*
*காந்தங் கண்ட பசாசத் தவையே"*[66]

இதற்குச் சி. அருணைவடிவேலு முதலியார் கூறும் உரை வருமாறு :

*". . . . பலவாறாகக் கூறப்பட்டுவந்த ஆன்மாவினாலே மெய்வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகளும் தம்தம் புலன்களை 'இஃது' இன்னது என நன்றாக அறுதியிட்டு அறிந்தும் அவை தம்மையும், தம்மைச் செலுத்தி நிற்கும் ஆன்மாவையும் அறியமாட்டா. அந்தப் பொறிகள்போலவேதான் ஆன்மாக்களும், தம் அறிவுக்கு இன்றியமையாத் துணையாகிய ஒப்பற்ற இறைவனது திருவருளாலே அஞ்சவத்தைப்பட்டு, வினைப் பயன்களை அறிந்து நுகர்ந்தும், அங்ஙனம் அறிவனவாகிய தம்மையும், தம்மைச் செலுத்தி நிற்கும் திருவருளையும் அறியமாட்டா"*[67]

உயிர்கள், தாமாகச் செயற்படுவனவல்ல. அவை, செயற்படுதற்கும் முதல்வனின் திருவருள் தேவை. அவ்வாறு செயற்படும்போது, அவை தம்மையும் அறியா; தமக்கு உற்ற துணையாய் உடனிருந்து உணர்த்திவரும் திருவருளையும் அறியா என்பது கருத்து.

வெந்நீரில் எங்கும் பரந்து நிற்கும் வெம்மைபோல, இறைவனது அறிவாற்றலாகிய **'திருவருள்'** எல்லா இடங்களிலும் நிறைந்துள்ளது. அங்ஙனமாயின் அத்திருவருள் உயிர்களிடத்திலும் உட்கலந்து விளங்கி நிற்கின்றது என்பது போதரும்.

இதனை ஓர் உவமை மூலம் ஆ. ஆனந்தராசன் விளக்குகின்றார். அஃது இவண் குறிப்பது சாலப் பொருந்தும் :

*"நிலத்தின்மேல் வாழ்வோராகிய மக்கள் தம்மைத் தாங்கி நிற்பது நிலம் என்பதனைச் சிறிதும் நினையாமல், தாமே தமக்கு ஆதாரம் எனக் கருதித் தருக்கி வாழ்வர். நிலத்தின் ஈர்ப்பு ஆற்றல் அல்லவா நம்மை நிற்க வைக்கிறது, நடக்க வைக்கிறது, இயங்க வைக்கிறது. ஆனால் நாம் அந்நிலையை எண்ணிப்*

*பார்க்கிறோமா? இல்லையே. 'நான் யாரையும் நம்பியிருக்கவில்லை; என் சொந்தக் காலில் நிற்கிறேன்' என்று தானே பலரும் சொல்லுகின்றனர்! என்ன அறியாமை இது! அக்காலுக்கு எக்காலும் ஆதாரமாய் நிற்பதும் நம்மை நிற்பிப்பதும் நிலத்தின் ஆற்றலே யன்றோ?*

*"அதுபோலத் திருவருளால் எல்லாவற்றையும் பெற்று நின்றாலும், அவற்றைத் தந்தது திருவருள் என்பதைத் தினையளவும் உணராமல் பெற்றவற்றைப் பேணுவதிலேயே பொழுதைப் போக்குகின்றோம்; திருவருள் உதவியை மறந்து வாழ்கின்றோம்; வல்வினைப்பட்டு ஆழ்கின்றோம்; அவலக்கடலில் வீழ்கின்றோம். இதுவே நம் நிலை!"*[68]

மெய்கண்டார்

*"இதுவும் தமது முதலாலே உணரும்"*[69]

என்பர்.

"ஐம்பொறிகள், தமக்கு ஒரு முதலை உடையவாதல்போலவே, உயிரும் தனக்கென ஒரு முதலை உடையது. இவ்வுயிரானது தம் முதலாகிய இறைவனின் திருவருளாலே அறியும்" என்பது கருத்து.

முதல்வன் திருவருளால் உணரும் உயிர்கள் அவனோடு இயைந்து நிற்கும் தன்மை குறித்து மெய்கண்டார்,

*"வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது"*[70]

என்னும் எடுத்துக்காட்டு வெண்பாவில் உணர்த்துகின்றார்.

கோள்மீன்கள், சூரியனிடமிருந்து ஒளியினைப் பெறும்; அவை பகல்நேரத்தில் வேறாக விளங்கித் தோன்றாமல், சூரியனது ஒளியில் ஒடுங்கி உடனாய் நிற்கின்றன. அதுபோல, உயிர்கள், மெய்ப் பொருளாகிய இறைவனது துணையால் அறிவு பெறுகின்றன. கண்டும் கேட்டும், உண்டும் உயிர்த்தும் உற்றும் அறிந்து பொருட்களை நுகர்கின்றன. அப்போது ஐம்புலன்களை நுகரும் உயிர்கள் அவனின் வேறாய் நீங்கி நில்லாமல், அவனது வியாபகத்துள் அடங்கி உடனாய் நிற்பனவாகும். இவ்வுவமையைப் பின்வருமாறு விளக்கலாம் :

| **உவமை** | - | **பொருள்** |
|---|---|---|
| வெய்யோன் | - | இறைவன் |
| வெய்யோன் ஒளி | - | திருவருள் வியாபகம் |
| கோள்மீன் | - | உயிர் |
| ஒளிபெறுதல் | - | அறிவுபெறுதல் |

| | |
|---|---|
| ஒடுங்கிநிற்றல் | அத்துவிதமாய் அடங்கி நிற்றல்[71] |

உயிர்களுக்கு அறிவு விளங்க வேண்டும் என்ற கருணையால், இறைவன், ஐம்பொறிகள், அந்தக்கரணங்கள் முதலானவற்றைக் கூட்டுவிக்கின்றான். உயிர், அக்கருவிகளோடு கூடி இருப்பதனால் மட்டுமே அறிவு நிகழ்ந்துவிடாது. இறைவனது திருவருள் உள்நின்று உணர்த்த வேண்டும். இத்திருவருளின் ஆற்றலால் உயிர்களுக்கு அறிவும் செயலும் நிகழும். இதனால் இறைவனுக்குச் சிறிதும் மாற்றம் நிகழாது.

இறைவனது 'திருவருட்சத்தி'யைக் குறித்து மெய்கண்டார் அருளும் வெண்பா வருமாறு :

*"அருளுண்டாம் ஈசற் கதுசத்தி யன்றே*
*அருளும் அவனன்றி யில்லை - அருளின்*
*றவனன்றே யில்லை அருட்கண்ணார் கண்ணுக்*
*கிரவிபோல் நிற்குமரன் ஏய்ந்து"*[72]

"உயிர்களைப் பிணித்துள்ள பாசக் கட்டினை நீக்கிப் பேரின்பத்தை வழங்கவேண்டும் என்னும் இரக்கம் இறைவனுக்கு என்றும் உண்டு. அவ்இரக்கமே அவனது சத்தியாகும். அருளாகிய சத்தியும் அவன் இல்லாமல் தனித்து இருத்தலில்லை. அவனும் அருளின்றித் தனித்திருத்தல் இல்லை. சூரியன், தன் ஒளியோடு வேற்றுமையின்றி இயைந்து நிற்றல்போல, இறைவன் தன் அருளோடு தாதான்மியமாய் இயைந்து நிற்பான். ஞானக்கண் பெற்றவர்களின் அறிவுக்கு இது விளங்கும்." என்பது பொருள்.

இங்குச் சுட்டப்படும் தாதான்மியம்' பற்றிய கருத்து முன்னரும் விளக்கப்பட்டுள்ளது.

ஞானத்தை மூன்று வகையாகச் சொல்வது உண்டு. (1) பதிஞானம், (2) பசுஞானம், (3) பாசஞானம்.

வியாபகமாய் உள்ள இறைவனை உணர்தற்கு வியாபகமாய் உள்ள கருவியே துணை செய்வதாகும். அக் கருவியே 'சிற்சத்தி' அல்லது 'அருள்'. மேலாய் நிற்கும் சூரியனை அவனது விரிந்த ஒளியின் துணைக் கொண்டே காண முடியும். அதைப்போலவே, மேலோனாகிய இறைவனை அவனது ஞானமாகிய திருவருள் கொண்டே அறிதல் இயலும். அந்த ஞானமே, 'பதிஞானம்' அல்லது 'சிவஞானம்' எனப்படும். அது 'அருட்கண்' என்றும் கூறப்படும்.

எனவே, ஒருவகையில் நோக்கினால், இறைவன், கருவிகளால் உணரப்படாதவன் என்றும், மற்றொரு வகையில் நோக்கினால்

'பதிஞான'மாகிய கருவியால் உணரப்படுவன் என்றும் அறியலாம். இதனை உணர்த்துவது,

*"உணருரு அசத்தெனின் உணரா தின்மையின்*
*இருதிற னல்லது சிவசத் தாமென*
*இரண்டு வகையின் இசைக்கும்மன் னுலகே"*[73]

எனும் சிவஞானபோத நூற்பா.

பாசமாகிய கருவிகளின் நீங்கித் தன்னை அறியும் அறிவு 'பசுஞானம்' எனப்படும். அஃதாவது, 'இக்கருவிகள் கண்ணுக்கு விளக்குப்போல, யான் அறிவதற்குத் துணை செய்வனவேயன்றி, இவை தாமே அறிவனவல்ல; அதனால் இவை யான் அல்ல; யான் இவற்றின் வேறாய் அறிவாய் உள்ளேன்" என உயிர் தன்னை அறிவது 'பசுஞானம்' ஆகும்.

இனிப் 'பாசஞானம்' குறித்துப் பின்னர் விளக்கப்படும்.

மேலேகூறிய பதிஞானமே 'அருள்' ஆகும். அவ் அருளாகிய பதிஞானத்தால் பதிப்பொருளை நன்கு உணரலாம்.

*"அவனரு ளாலே அவன்தாள் வணங்கி"*[74]

எனும் திருவாசகம் இவண் உன்னத்தகும்.

வேறு அறிவால் பதிப்பொருளை உணரமுடியாது என்பதை,

*". . . அவன் அருளே கண்ணாகக் காணினல்லால்*
*இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்*
*இவன்இறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே"*[75]

எனும் நாவுக்கரசர் கூற்றால் அறியலாம்.

மெய்கண்டார் 'உணர்ப அசத்தாதல்'[76] எனும் வெண்பாவில், 'தன்னால் உணர்தலால்' எனும் தொடரைக் கையாள்கின்றார். இதற்குப் 'பதிஞானத்தால் உணர்தல்' என்று பொருள்.

சூரிய ஒளி புறவிருளை நீக்கியும், கட்புலனோடு கலந்து அதன் காணும் தன்மையை விளக்கியும், பொருள்களைக் காணும்படி செய்வது போலத் திருவருள் ஒளியாகிய 'பதிஞானம்' அகவிருளாகிய ஆணவமல மறைப்பைச் சிறிது நீக்கியும், உயிரறிவில் கலந்து நின்று, அதன் அறியும் தன்மையை விளக்கியும், உலகப் பொருள்களை அறிந்து நுகரும்படி செய்கின்றது. உயிரானது, திருவருளாகிய பதிஞானத்தை உணராமல் உலகப் பொருள்களையே அறிந்து நுகர்கின்றது. எனவே திருவருளுக்கு வேறாக நிற்கின்றது எனலாம். இந்நிலை மாறி, உயிரானது, உலகப் பொருள் யாவும் அசத்து, என உணர்ந்து அவற்றை விடுத்துப் பதிஞானத்தை

உணர்ந்து பற்றி அதனோடு ஒன்றிநின்று, அப்பதிஞானத்தின் வழியே நோக்கினால், பதியாகிய சிவமுதற்பொருளை உணரலாம்.

எனவே பதியைக் காட்டுவதும் 'பதிஞானமே'; உயிரானது பதிஞானத்தை உணர்ந்து, அதுவாய் நின்று, அதுகாட்ட அகத்தே காணும் என்பதும் அறிதற்குரியன.

'முத்தியில் உயிரின் நிலை யாது' என்பதற்கு விடையாக அமைவது,

> *". . . . அறிவுள் நிற்றல்*
> *அறியும் அறிவே சிவமும் ஆம்"*[77]

எனும் பகுதி.

உயிரானது, சிவனை, உலகத்துப் பொருள்களை அறிவதுபோல அறிவதில்லை. உலகப் பொருள்கள், உயிருக்கு வேறாக, 'அது' என்று சுட்டியறியும்படி உள்ளன; ஆனால், சிவனோ, உயிருக்கு வேறாய், அதனால் சுட்டியறியப்படுவன் அல்லனாக விளங்குவன். அவன், தன்னை அறிகின்ற அவ்வுயிரின் அறிவினுள்ளே அத்துவிதமாய்க் கலந்து நிற்பவன். எனவே, அவனை அறிகின்ற உயிரும், அவனுக்கு வேறாய் நின்று அறியாமல், ஒன்றாய் நின்றே அறியும். அஃதாவது, உயிராய் நின்று அறியாமல் சிவமாய் நின்று அறியும் என்பதாம். எனவே, முத்தியில் உயிரானது சிவத்தோடு இரண்டறக் கலந்து நின்றே அதனை அறிந்து அனுபவிக்கிறது என்பது தெளிவு.

## பாசநீக்கமும் திருவருளும்

> *"பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்*
> *பதியினைப் போற் பசுபாசம் அனாதி"*[78]

என்பது திருமந்திரம். பதியாகிய கடவுள் என்று உண்டோ, அன்றே 'பசு'வாகிய உயிரும் அவ்வுயிர்களைப் பிணித்துள்ள பாசமும் உண்டு என்பது சைவசித்தாந்தம் கூறும் முடிந்த முடிபு. இவ்வாறு கூறுவதனால், இம் மூன்று பொருள்களும் சமமானவை எனல் தகாது. இறைவனே முதற்பொருள். எனவே இது, ஏனைய இரண்டின் மேலும் ஆதிக்கமும் ஆணையும் கொண்டுள்ளது.[79]

"இவை மூன்றும் என்றும் உள்ளவை" என்பது சித்தாந்தம். "இல்லது வாராது; உள்ளது போகாது" என்பது சித்தாந்தம் ஏற்கும் முற்கோள் (postulate). இதன் உட்கிடையாகக் காரண காரியத் தொடர்பை விளக்குவதற்குச் 'சற்காரியவாதம்' மேற்கொள்ளப் பெறுகிறது"[80] என்பர் வ.ஆ. தேவசேனாபதி.

> *"பதியும் பசுவும் பாசமுமாய் பன்னும் பலவே தாகமத்தின்*
> *விதியுந் தேரிற் பதியொன்றே வேறாம் பசுக்க ளனந்தமவை*

*பொதியும் பாச மைந்தாகப் புகலு மவையென்*
*போலெனின்விண்*
*கதிருந் தெரிகண் களுமிருளுங் காயமாதி களும்*
*போலும்!"*[81]

எனச் "சைவ சித்தாந்தசாரம்" நூலாசிரியர் சிவானந்த தேசிகர் கூறுவதும் இவண் ஒப்புநோக்கத்தகும்.

'பதி'யாகிய பரசிவன் குறித்து ந. சுப்பு ரெட்டியார் கூறுவது இவண் குறிப்பிடல் பொருந்தும் :

*"இந்த முப்பொருள்களுள் 'பதி' ஏனையவற்றைவிடப் பேராற்றல் வாய்ந்தது. சுதந்திரம் உடையது. பசுவும் பாசமும் சுதந்திரத் தன்மையின்றிப் பதியின் விருப்பப்படிச் செயற்படுவனவாகும். மேலும், பசுவும் பாசமும் மற்றொன்றின் சார்பினால் தன்மையில் மாறுபடும். பதியோ அங்ஙனம் எந்தப் பொருளின் சார்பினாலும் மாறுபடாமல் என்றும் ஒரே பெற்றிதாய் இருக்கும் . . . . பதி உலகத்தை நோக்கி நிற்கும் நிலையில் காணப்பெறும் இயல்புகள் 'தடத்த இலக்கணமா'கும். இனிப் பதியின் சொரூப இலக்கணத்தை விளக்குவேன். இது குணம் குறிகளைக் கடந்த நிலை; பதி ஒன்றே; அதாவது அஃது ஏகமாய் இருக்கும்; எல்லாவற்றிற்கும் மேலானது; அது காணப்படும் உருவமற்றது; காலம் இடம் இவற்றால் அளவுபடுத்தப்படாதது; குணங்களும் இல்லை; அடையாளங்களும் இல்லை; மலமற்றது; என்றும் அழியாதிருப்பது; ஆன்மாக்களுக்கு அறிவாய் நிற்பது; சலிப்பற்றது. அளவுபடாததால் போக்குவரவாகிய அசைவு இல்லாதது. காட்சிக்கும் கருத்துக்கும் அப்பாற்பட்டது."*[82]

இவ்வாறு கூறும் இவர், தாயுமானவரின் பாடல் ஒன்றைச் சான்றாகக் காட்டுவர். அது வருமாறு :

*"குணம்இ லான்குணம் குறிஇலான்*
*குறைவிலான் கொடி தாம்*
*புலம்இலான் தனக் கென்ன ஓர்*
*பற்றிலான் பொருந்தும்*
*இலம்இ லான் மைந்தர் மனைவிஇல்*
*லான் எவன்? அவன்சஞ்*
*சலம்இ லான் முத்திதரும் பர*
*சிவன்எனத் தகுமே!"*[83]

'பாசம்' என்பதற்குக் 'கட்டு','தளை' என்று பொருள். 'பச்' என்னும் பகுதியடியாகப் பிறந்து, சீவான்மாவைக் கட்டி நிற்பது என்னும் பொருட்டாம்[84] என்பர் மறைமலையடிகள்.

வ.ஆ. தேவசேனாபதி, இப் 'பாசம்' என்னும் சொல்லுக்குத் தரும் விளக்கமும் இங்குக் குறிக்கத்தகும் :

> *"பாசம் என்னும் சொல்லுக்கு நேரான தமிழ்ச் சொல் 'கயிறு' என்பதாம். கயிறு கொண்டு 'பசு'வைக் கட்டுவதுபோல, உயிர்கள், 'ஆணவம், கன்மம், மாயை' என்னும் கயிற்றால் கட்டப்பெற்றுள்ளன. இதே பொருளில், 'தளை, தடை' என்னும் சொற்கள் ஆளப்பெற்றுள்ளன. குற்றவாளிகளின் கைகால்களில் 'தளை' அதாவது விலங்கு இடப்பெறுவதைப்போல, உயிர்களின் அறிவு, ஆற்றல் விழைவு ஆயவை தளையிடப் பெற்றுள்ளன. இவ்வாறு தடுக்கப்படுவதைக் குறிப்பதற்காகத் 'தடை'யென்னும் சொல்லும் ஆளப்பெறுகிறது."*[85]

"பாசம், கயிறு, தளை, கட்டு, தடை, மாசு, மலம் அழுக்கு" என்பன ஒருபொருட் சொற்கள். வடமொழியில் இதனை 'நிகளம்' என்பர்.

> *"ஆசா நிகளம் துகளா யினபின்*
> *பேசா அனுபூதி பிறந்ததுவே"*[86]

என்பது அருணகிரிநாதர் வாக்கு.

இப் 'பாசம்' குறித்தும், 'பாசநீக்கம்' குறித்தும் திரு.வி.க. கூறுவது இவண் குறிப்பிடத்தகும்.

> *"முழு இருளில் மூழ்கி உள்ள உயிர், அவ்விருளினின்றும் வெளிவர இயலாததாய் இருக்கிறது. அதன் கட்டை (தளை) அவிழ்க்க இறைவன் திருவருள் (இடைவிடாது) சுரக்கிறான். இறைவன் முற்றறிவு உடையவன். ஆதலின் அவன்பால் இரக்கம் இயல்பாகவே அமைந்து இருக்கின்றது. அழுக்காறு எழும்போது இரக்கம் ஒடுங்குதலையும், அழுக்காறு ஒடுங்கும்போது இரக்கம் எழுதலையும் அநுபவத்தால் உணர்கிறோம். அழுக்காறு, வன்கண் முதலியன அறியாமைக் கூறுகள். இரக்கம், ஒப்புரவு முதலியன அறிவுக் கூறுகள்; இறைவன் முற்றறிவு உடையனாய் இருத்தலின், அவன்மாட்டு இரக்கம் இயல்பாகவே அமைந்து இருத்தலை விளக்க வேண்டுவது இல்லை. நீரில் தண்மை (குளிர்ச்சி) இருப்பதுபோலவும், நெருப்பில் வெம்மை (சூடு) இருப்பது போலவும் இறைவனிடத்தில்*

*இரக்கம் இயல்பாய் இருக்கிறது. இரக்கத்தின் தன்மை என்ன? துன்பம் கண்ட இடத்தில் அஃது எழுந்து துன்பத்தைப் போக்க முயல்வது அதன் தன்மை. உயிர், தன் நிலை அறியாது இருளில் மூழ்கிக் கிடக்கிறது. அதைக் காணும் இறைவனது இரக்கம் வாளா கிடக்குமோ? அவ் இரக்கம் உயிரைத் துன்பத்தினின்றும் விடுதலை செய்ய முனைகிறது. இறைவன் இரக்கத்தால் உயிரின் கட்டை அவிழ்த்து அதைத் தன்னைப்போல் ஆக்கத் திருவுளம் கொள்கிறான்!"*[87]

சிவம் - சத்து; பாசம் - அசத்து; உயிர் - சதசத்து. சத்தாகிய சிவத்தின் முன், அசத்தாகிய பாசப்பொருள்கள், வேறாய் எதிர்ப்பட்டு நில்லா. எனவே சத்தாகிய சிவம், தன்னெதிரே நிற்காத பாசப் பொருள்களை அறிந்து அனுபவியாது. அசத்தாகிய பாசம், அறிவில்லாதது ஆகையால் அதுவும் சத்தாகிய சிவத்தை அறிந்து அனுபவியாது. இதுகுறித்த, "யாவையுஞ் சூனியம்"[88] எனும் நூற்பா.

'பாசஞானம்' என்று ஒன்றுஉண்டு என முன்னர்ச் சுட்டப்பட்டது. 'பாசஞானம்' என்பதற்குப் 'பாசமாகிய கருவிகளால் உயிருக்கு உண்டாகும் அறிவு' என்று பொருள். உண்மையில் ஆராய்ந்து பார்த்தால், பாசஞானம் எனத் தனி ஒரு ஞானம் கிடையாது; அது 'பசுவினது ஞானமே' என்பது தெரியவரும்.

### மும்மலங்கள்

இப்பாசம், மூன்று வகைகளில் வைத்துப் பேசப்படும். அவை : (1) ஆணவம் (2) கன்மம், (3) மாயை.

இம் மூன்றும் உயிர்களைப் பந்தித்து நிற்கும் 'தளைகள்' ஆகும். இவற்றைச் 'சடசத்திகள்' என்று கூறுவதுமுண்டு. அஃதாவது, 'அறிவற்ற சத்திகள்' என்பதாம். இறைவனது சத்தியோ, 'சிற்சத்தி'; அறிவு வடிவமான சத்தி; அதனால்தான் தாயுமானவரும்,

*"சித்தமிசை குடிகொண்ட அறிவான*
*தெய்வமே"*[89]

என்று கூறலானார்.

இம் மூன்று மலங்களும், உயிர்களின் ஆற்றலைத் தடை செய்து துன்புறுத்தும். அன்றியும், உயிர்களின் பிறப்பு நிலைக்கும் காரணமாக அமையும்.

இம் மூன்று மலங்களில், ஆணவத்தால் மட்டும் கட்டுற்றுப், பிறவற்றால் தாக்குண்ணாதவரை 'விஞ்ஞானகலர்' என்றும்; ஆணவம்,

கன்மம் என்னும் இரண்டின் வயப்பட்டோரைப் 'பிரளயாகலர்' என்றும், மும்மலத்தாலும் கட்டுப்பட்டுள்ளோரைச் 'சகலர்' என்றும் கூறுவர்.[90]

ஆணவ மலத்தைப் 'பிரதிபந்தம்' என்றும், கன்மமலத்தை 'அநுபந்தம்' என்றும், மாயா மலத்தைச் 'சம்பந்தம்' என்றும் கூறுவதுண்டு.[91]

சைவசித்தாந்த சாத்திர நூல்கள் இம் மூன்று மலங்களைக் குறித்தும் விரிவாகப்பேசும். மெய்கண்டார்,

*'ஊனக்கண் பாசம் உணராப் பதியை'*[92]

என்று கூறியதனோடன்றி,

> *"நெல்லின்கண் உமியும் செம்பின்கண் களிம்பும், எக்காலத்துளவாயினவென்று ஆராய்ந்து சொல்லுங்கால், அந்நெல்லும் செம்பும் உளவாயினவன்றே உள்ளனவன்றி இடையே வந்தனவல்ல; அதுபோல, மாயை, மலம், கன்மம் என்னு மும்மலங்களும் அநாதியே யுள்ளனவாம்; முன்னேயுள்ளதாய தாமரைப்பூ, அலர்தலும் கூம்புதலும் ஞாயிற்றினாற் செய்யப்படுமாறு போல, அவை தத்தங் காரியங்களைச் செய்தல் முதல்வனாலேயாம்!"*[93]

என்ற பொருள்பட,

> *"நெல்லிற் குமியும் நிகழ்செம்பி னிற்களிம்பும்*
> *சொல்லிற் புதிதன்று தொன்மையே - வல்லி*
> *மலகன்மம் அன்றுளவாம் வள்ளலாற் பொன்வாள்*
> *அலர்சோகஞ் செய்கமலத் தாம்"*[94]

என்று திருவாய் மலர்ந்தருளினார்.

இதற்கு ஆ. ஆனந்தராசன் அளிக்கும் விளக்கம் வருமாறு :

> *"நெல்லில் உள்ள உமியாகிய குற்றமும், செம்பில் உள்ள களிம்பாகிய குற்றமும், புதியனவாய் வந்தனவல்ல. நெல்லும் செம்பும் உள்ளவன்றே அவையும் உள்ளன. அதுபோல, 'மாயை, ஆணவம், வினை' ஆகிய மும் மலங்களும் அநாதியே உள்ளன. ஆயினும் சூரியனது ஒளியால் மலர்தலும், குவிதலும் செய்கின்ற தாமரை மலரைப் போல, அவை, இறைவனது சத்தியாலே செயற்படுவனவாம்.*
>
> *'வல்லிமல கன்மம் அன்றுளவாம்' என்றதனால், மும் மலங்களை இறைவன் தோற்றுவிக்கவில்லை என்பதும்,*

அவை என்றும் உள்ளவை என்பதும் பெறப்படும். அவற்றிற்குத் தோற்றம் இல்லை எனவே அழிவும் இல்லையாம். ஆயினும், அவற்றின் காரியங்களுக்குத் தோற்ற அழிவுகள் உண்டு. ஆணவ மலத்தின் காரியம் அறியாமை. கட்டுநிலையில் அவ் அறியாமை உயிரைப் பற்றியிருத்தலும், முத்திநிலையில் நீங்குதலும் தெளிவு. கன்மமலத்தின் காரியம் இன்ப துன்பங்கள். அவை உயிருணர்வை வந்து பொருந்துதலும், அனுபவிக்கப்பட்டுப் பின் கழிதலும் காணலாம். மாயா மலத்தின் காரியம், உலகமும் உலகப் பொருள்களும். அவை தோன்றி நின்று அழிதல் வெளிப்படை.

"மும்மலங்களும் தத்தம் காரியத்தைச் செய்யும்படி அவற்றைச் செயற்படுத்துவது இறைவனது சிற்சத்தியே யாகும். அவ்வாறு செயற்படுத்துவதனால் அவை, பின்வரும் காரியத்தைச் செய்கின்றன. ஆணவமலம் உயிருணர்வைத் திரிவுபடுத்தி, இழிந்தனவாகிய உலகப் பொருள்களையே உயர்ந்தனவாக மதிக்கும்படிச் செய்கின்றது. கன்மமலம், இன்பதுன்பங்களைப் பயந்து, உயிருணர்வை மயக்கித் தம்மையே பற்றும்படிச் செய்கின்றது. சுருங்கக்கூறின், 'இம்மும்மலங்களும் உயிருணர்வைக் கவர்ந்து இறைவனை நோக்கவிடாது, உலகத்தையே நோக்கும்படிச் செய்கின்றன"[95]

இருபா இருபஃது நூலில்,

"கூறிய மூன்று மலத்தின் குணக்குறி"[96]

என்று தொடங்கும் பாடல், பாச இலக்கணம் பகர்வது. இதற்கு உரை கூறவந்த தே.ஆ. ஸ்ரீநிவாஸாசாரியன் பின்வரும் விளக்கத்தைத் தருகின்றார் :

"எல்லாப் பாசங்களும் மூன்று வகைகளுள் அடங்கும். குதிரைக்கு மூன்று கட்டுகள் இருப்பதுபோல் ஆன்மாவுக்கும் இம்மூன்று பந்தங்களும் உள. குதிரையின் கழுத்துக்கட்டு நிகர்ப்பது ஆணவம். பின்காற் கட்டுக்களைப் போல்வன மாயை, கன்மங்கள்... ஆணவம், அறியாமையைச் செய்ய, மாயா கன்மங்கள் அவ்வாணவ மலநீக்கம் பெற்று, ஆன்மா நலமடைதற்கு உபகாரப் படுகின்றன... படலக் கண்ணுக்கும் சூரியன் தெரியாது. மேகம் மறைத்திருப்பினும் கண்ணுக்குச் சூரியன் தெரியாது. சூரியனைத் தெரியவொட்டாமல் செய்யும் தன்மையில்

மேகமும் படலமும் ஒன்றுபோற் காணப்படினும் இவை வேறே என்பது வெளிப்படையாகத் தெரிந்ததே. நமது சுகதுக்கமாகிய காரியத்துக்குக் கன்மமலம் முதற்காரணமாகும். மாயாமலம் துணைக் காரணம். ஆணவமலம் நிமித்த காரணமாம். சுகதுக்கங்களைக் கன்மம் தோற்றுவிக்கிறது. மாயாமலம் அதனை நுகர்வதற்கானபடி உடம்பு முதலியவற்றை அளிக்கிறது. ஆணவம் சுகதுக்கங்களை அனுபவிக்கச் செய்கிறது. ஆணவம் உயிரோடு கலந்து நிற்றலின் 'பிரதிபந்தம்' எனப்படும். கன்மம், உயிரோடு செல்லுதலின் 'அனுபந்தமாம். மாயாமலம் உயிரோடு கூடித் தனு முதலியவாக நிற்றலால் 'சம்பந்தம்' எனப்படும்"[97]

இவ் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்கள் தவிர 'மாயேயம், திரோதானம்' எனும் இரண்டைச் சேர்த்து, மலங்கள் ஐந்து என்று கூறுவதும் உண்டு. இவை குறித்துச் சி.அருணைவடிவேலு முதலியார் கூறுவது இங்குக் குறிக்கத் தக்கது :

"ஆணவ மலத்தின் காரண நிலை, காரிய நிலைகளில் வேறுபாடு மிக இல்லை. அதனால் அஃது ஒன்றாகவே எண்ணப்படும். கன்மம் காரண நிலையில் 'மூலகன்மம்' எனப்படும் அஃது உயிர்களைத் தாக்குதல் இல்லை. காரிய கன்மமே 'நல்வினை, தீவினை' என இரண்டாக நிகழ்ந்து, உயிர்களைத் தாக்கும். அதனால், காரியகன்மமே, 'கன்மமலம்' எனப்படுகின்றது. மாயை காரண நிலையில் இருத்தலும், சிறப்பாக எண்ணப்படுகின்றது. அதனால், காரண மாயையே 'மாயை' என்றும், காரிய மாயை 'மாயேயம்' என்றும் சொல்லப்படுகின்றன. இறைவனது சத்தி, பாசத்தைச் செயற்படுத்துகின்ற நிலையில் 'திரோதானசத்தி' எனப்படும். இது பாசத்தை நடத்துதலால், ஒரு மலமாக உபசரித்துக் கூறப்படும். எனவே, ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம் என மலங்கள் ஐந்து என்பர். இவை, 'பஞ்ச மலங்கள்' எனப்படும். இவை விரித்துக் கூறப்படுவனவல்லது உண்மையில் 'ஆணவம், கன்மம், மாயை' என மலங்கள் மூன்றே ஆகும்"[98]

மேலே கூறியவற்றிற்கு அரணாக அமைவன பின்வரும் சித்தியார்ப் பாடல்கள் :

"மும்மல நெல்லினுக்கு முளையொடு தவிடு மிப்போல்
மம்மர்செய் தணுவினுண்மை வடிவினை மறைத்து நின்று
பொய்ம்மைசெய் போக பந்த போத்திருத் துவங்கள்

*பண்ணும்*
*இம்மல மூன்றினோடு மிருமல மிசைப்ப னின்னும்!"*

*"மாயையின் காரி யத்தை மாயேய மலம் தென்றும்*
*ஏயுமும் மலங்க டத்தந் தொழிலினை யியற்ற வேவுந்*
*தூயவன் றனதோர் சத்தி திரோதான கரிய தென்றும்*
*ஆய்வரிம் மலங்க ளைந்து மணுக்களை யணைந்து நிற்கும்"[99]*

பின்வரும் திருமந்திரப் பாடலும் இங்கு ஒப்பு நோக்கத்தகும்.

*"ஆணவமும் மாயையும் கன்மமும் மும்மலம்*
*காணும் முளைக்குந் தவிடுமி ஆன்மாவும்*
*தாணுவை ஒவ்வாமல் தண்டுலமாய் நிற்கும்*
*பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே"[100]*

## ஆணவம்

இம்மூன்று மலங்களுள், ஆணவ முனைப்புக் குறித்தும் திருவருள் நிலை குறித்தும் இவண் குறிப்பிடல் சாலும்.

*"ஆன்மாவை அணுத்தன்மைப்படுமாறு செய்தலினாலே 'ஆணவமலம்' என்னும் பெயர் உண்டாயிற்று. அணுத்தன்மைப்- படுத்தல் - சிற்றறிவும் சிறுதொழிலு முடையதாக்குதல். அணு - சிறுமை"[101]*

என ஆணவத்தின் பெயர்க்காரணம் கூறுவர் மு. திருவிளங்கம்.

அஃதாவது, உயிருக்கு இயல்பாக உள்ள வியாபகத்தன்மையை மறைத்து, அதனைச் சிறுமைப்படுத்தும் என்பதாம்.

இவ் ஆணவம் குறித்துக் க. வச்சிரவேல் முதலியார் கூறுவது இங்கு எண்ணத்தகும் :

*"இது, மூலமலம், சகசமலம் (சகஜம் - இயற்கை, உடன் உள்ளது) எனும் பெயர்களாலும் குறிக்கப்படும் ..... ஆணவம் உயிர்களை அறியாமை இருளில் உய்த்தலால், அஃது இருள், அறியாமை, அவித்தை, மலம் என்னும் பெயர்களாலும் குறிக்கப்படும்......... கனவு, உறக்கங்களில் நம் அறிவாற்றலை மறைப்பதும், நனவு நிலையில் தன்னை நோக்காது புறப்பொருள்களை நோக்கி ஓடுமாறு நம் அறிவைத் திருப்புவதும், மூலமலத்தின் செயல்கள் ....... நம் அறிவை மறைக்கும் செயல், ஆணவத்தின் ஆவாரக சக்தியால் (மறைக்கும் ஆற்றல்) ஆவது; நனவு நிலையில் புறப்பொருளில் சென்று விழச் செய்யும் செயல், அதன் அதோநியாமிகா சத்தியால்*

*(கீழ்வீழ்க்கும் சத்தி) ஆவது. இவற்றால் 'மருள், மாசு, செருக்கு' என்னும் பெயர்களாலும் வழங்குவர்"*[102]

**உயிர்கட்கும் இவ் ஆணவ மலத்திற்கும் உண்டான தொடர்பு குறித்து, முரு.பழ. இரத்தினம் செட்டியார் கூறுவது வருமாறு :**

*"ஆன்மா பலகீனமான ஒன்று. உடல் பலகீனமாக இருந்தால் அதனைக் கிருமிகள் தாக்குவதைக் காண்கிறோம். அதுபோல ஆன்மா, தன் இயல்பில் பலகீனமாக இருப்பதால், 'ஆணவமலம்' என்ற ஒன்று அதனைத் தாக்குகிறது. இறைவனின் அறிவு இச்சை செயல்கள் பலமாக இருப்பதால், அவனை அது தாக்குவதில்லை..... ஆணவமலம், தீமையின்பால்தான் நம்மை ஈர்க்கும். தீமை செய்துவிட்டு அதற்குப் பலவகைப் போலிச் சமாதானங்களை ஆணவமலம் நம்மைச் சொல்லச் சொல்லும். ஆணவமலம் இருப்பதால்தான் உலகத்தில் இத்தனை அக்கிரமங்களும் கொடுமைகளும் நிகழ்கின்றன. நியாயம் அன்று எனத் தெரிந்தும் அக்கிரமம் செய்வதற்குக் காரணம் ஆணவமலமேயாகும். அஃது அறிவை மறைத்து விடுவதால் நம் உணர்வுக்கு நியாயம் புலப்படாமல் போகிறது" ஆணவமலம் ஆன்மாவை மறைக்கும் பொழுது ஆன்மா அதனைப் பற்றி அதனுள் அழுந்துகிறது."*[103]

**உயிரானது, மாயை, கன்மங்களோடு கூடாத போது அவ்வுயிரின் அறிவை முழுவதுமாக ஆணவம் மறைத்துவிடும். அவ்வாறு மறைத்து நிற்றலே ஆணவத்தின், 'உண்மை இயல்பு' அல்லது 'சொரூப இலக்கணம்' எனப்படும். அதே உயிர், மாயை கன்மங்களோடு கூடிவிட்டால், ஆணவமானது, அவ்வுயிரின் அறிவைத் திரிபுபடுத்தும். இத்தகைய திரிபுணர்ச்சியை - விபரீத அறிவை உண்டாக்குவது ஆணவத்தின் 'பொது இயல்பு' அல்லது 'தடத்த இலக்கணம்' ஆகும். எனவே ஆணவம் 'இருள்' போன்றதாம். மாயை ஒளிபோன்றதாம்.**

**உயிர்களுக்குப் பகை, மாயையன்று; ஆணவமே! ஆணவமலம் ஒன்றே; ஆயினும் அதன் சக்திகள் எண்ணிறந்தன. உயிர்களுக்கு உதவியாக இருக்கும் மாயை, கன்மங்களைக்- கூடப் பகையாக்கும் ஆற்றல் கொண்டது. 'ஆணவம் ஏன் உயிர்களைச் சேர்கின்றது ?' என்ற வினாவிற்கு வ.ஆ. தேவசேனாபதி கூறுவது வருமாறு :**

*"ஆணவம் சடம் (அறிவற்றது). ஆதலின் தானே சென்று சேராது. தமக்குத் தீங்கான ஆணவத்தை உயிர்கள் தம்முடன் தாமே சேர்த்துக் கொள்ளா! தூய்மையும்*

*அருளும் உடைய இறைவன் அதனை உயிர்களுடன் சேர்க்கமாட்டான்! ஆணவம், வரம்பில் காலமெல்லாம் உயிருடன் உடனாய்ப் பின்னிப் பின்னர் வீட்டுநிலையில் நீங்குவது"*[104]

ஆணவத்திற்குக் காரணநிலை, காரியநிலை என இருவகை உண்டு என்பர். காரணநிலையில் உயிர்களின் அறிவு, இச்சை, செயல்களைச் சிறிதும் செயற்பட வொட்டாது, தடுத்துச் சடம் போலக் கிடக்கச் செய்யும்; அப்போது அதன் சக்திக்கு 'ஆவாரக சத்தி' என்று பெயர். ஆவாரகம் - மறைத்தலைச் செய்வது. ஆணவம் காரியநிலையில் சிறிது மெலிவுற்று, உயிர்களின் அறிவு, இச்சை செயல்களைச் சிறிதே செயற்படவிடும். எனினும், உயிர்கள் நல்லனவற்றைத் தீயனவாகவும், தீயனவற்றை நல்லனவாகவும் மாறியுணரும். இவற்றிற்குத் 'திரிபு உணர்வு' என்று பெயர். இந்நிலையில் ஆணவத்தின் சத்திக்கு 'அதோநியாமிகா சத்தி' என்று பெயர்.

ஆணவம் ஒன்றே தனது காரியத்தைச் செய்யும்போது, ஏழுவகை நிலைகளையுடையதாகிறது. அவை மோகம், மதம், அராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என்பனவாம். இவை ஆன்மா வீடுபெறும் வரை அதனை விட்டு நீங்காது சகசமாய்ப் பற்றி நிற்கும்.

இவை குறித்துச் சி. அருணை வடிவேலு முதலியார், தமது சிவஞான மாபாடியப் பொருள் நிலை விளக்கம் நூலில் விளக்கமாகக் குறிப்பிடுவர்.[105]

ஆணவம் ஒன்றாக இருந்தாலும், உயிர்கள் தோறும், அதன் சிறப்பியல்பு வேறுவேறாக உள்ளதால், அதன் வன்மை மென்மைகளும் மிகப் பலவாக உள்ளன; எனவே ஆணவம் நீங்கி, உயிர்கள் முத்தியைப் பெறும் காலமும் ஒன்றாகாது, பலவாகின்றன.

இவ் ஆணவ மலம் உயிர்கட்குச் செய்கின்ற கொடுமை அளவிடற்கரியதாகும். இதனாலேயே அருணந்தி சிவாசாரியர் இதனைப் 'பொல்லாத ஆணவம்' என்றார்.[106]

*"உயிர்களுக்கு அறிவு செயலாற்றல், விழைவு, இயல்பாக உண்டு; இவற்றைத்தடுத்து நிற்பதே ஆணவம். இவ் ஆணவம், உறுதி நல்கும் செயல்களைச் செய்யவொட்டாது; உயிரின் நல்லறிவை எக்காலத்தும் சிதைக்கும். நற்சிந்தனை, நன்மொழி, நற்றொழில் எதுவும் நிகழவொட்டாது தடுக்கும். உயிர்களுக்குப் பகை - மாயையன்று; இவ் ஆணவமே. இவ் ஆணவத்தின் வேறு பெயர்கள்; பசுத்வம்; பசு, நீஹாரம், மிருத்யு, மூர்ச்சை, மலம், அஞ்சனம், அவித்யை,*

*ஆவிருத்தி, ருக், கிலானி. பாவம், மூலம், க்ஷயம் என்பனவாம்"*

என்று வ.ஆ. தேவசேனாபதி கூறுகிறார்.[107]

*"பித்தமாயுள்ள பொழுது தித்திக்கின்ற பாலும் கைப்பாகவே தோன்றும்; அதுபோல இந்தஉயிர், ஆணவமல நோய்வாய்ப்பட்டு உள்ளபொழுது, இன்பத்தைத் தருவதாகிய மெய்ப்பொருள், அதற்குத் துன்பத்தைத் தருவதாகவே தோன்றும், இதனாலேயே உயிர்கள், இறைவனாகிய மெய்ப் பொருளை' நாடாதிருத்கின்றன என உமாபதிசிவம் கூறுகின்றார்"*[108]

என ஆ. ஆனந்தராசன் குறிப்பிடுகிறார்.

மெய்கண்டார், இவ் ஆணவத்தின் செயற்பாடு குறித்துப் பலவேறிடங்களிலும் சுட்டுகின்றார்.

*"சங்கார காரணனாயுள்ள முதலையே*
*முதலாக வுடைத்து இவ்வுலகம்"*

என்பதை உணர்த்தவரும் முதல் நூற்பா இது:

*"அவன்அவள் அதுஎனும் அவைமூ வினைமையில்*
*தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்*
*அந்தம் ஆதி என்மனார் புலவர்"*[109]

இம் முதல் நூற்பாவிலேயே மெய்கண்டார், 'மலத்து உளதாம்' எனச் சுட்டுவது நோக்கத்தக்கது. இதற்குச் சிவஞானமுனிவர் கூறும் உரை வருமாறு :

*"அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் இவ்வாறு பகுத்துப் பலவாய்ச் சுட்டியுணரப் படுஞ் சொல்லும் பொருளுமாய இருகூற்றுப் பிரபஞ்சத்தொகுதி, 'தோற்றம், நிலை, இறுதி' என்னும் முத்தொழிலுடைமையால், ஒருவனாற் றோற்றப்பட்டதாய உள்பொருளேயாம். அது தோன்றுங்கால் தாலொடுங்குதற்கு ஏதுவாய் நின்ற கடவுளினின்றும், சகசமல நீங்காமையால், அது நீங்குதற் பொருட்டு மீளத் தோன்றுவதாம். இவ்வாறாகலின், சங்காரத் தொழிலைச் செய்யும் கடவுளே உலகிற்கு முதற்கடவுள்; ஏனையோர் அன்னரல்லர் எனக் கூறுவர் அளவை நூலுணர்ந்தோர்."*[110]

எனவே, இறைவன் ஒடுக்கிய பிரபஞ்சத்தை, உயிர்களின் மலநீக்கம் பொருட்டு, மீளத் தோற்றுவிப்பன் என்பது கருத்து.

இதனை மேலும் வற்புறுத்துமாறு அமைகின்றது. பின்வரும் 2ஆம் அதிகரணத்தில் வரும் எடுத்துக் காட்டுப் பாடல் :

*"இலயித்த தன்னில்இல யித்ததாம லத்தால்*
*இலயித்த வாறுளதா வேண்டும்"*[111]

இதில் வரும் 'மலத்தால்' என்பதற்கு முனிவர்,

*"உள்ளதாகிய உலகம் கருமமலம் பரிபாக*
*மாதற் பொருட்டு ஒடுங்கி*
*ஆணவமலம் பரிபாக மாதற்பொருட்டு*
*மீளவுமுண்டாம்"*[112]

என உரை கூறுவர்.

உயிர்களின் மும்மலங்களும் பரிபாகமாதற்பொருட்டு உலகம் ஒடுங்கித் தோன்றி நிற்கும் என்பது கருத்து.

ஆணவ மலமானது, அறியாமையைச் செய்வதாம். அவ்வாறு செய்யும் சத்தி, கெடுதல் 'ஆணவமலபரிபாகம்' எனப்படும்.

அறியாமையாவது, அனாதிகேவலத்தில் அறிவு, இச்சை, செயல்கள் தொழிற்படாமல் தடுக்கப்படுதலாம். பிரபஞ்சத் தோற்றத்தால், அந்தத் தடை நீங்குதல் 'ஆணவ மலபரிபாகம்' ஆகும். எனவே, தோற்றம், **ஆணவமல பரிபாகத்தின் பொருட்டு** என்பதாம்; நிலைத்தல் **மாயாமலபரிபாகத்தின்** பொருட்டாம்; ஒடுங்குதல் **கன்மமலபரிபாகத்தின்** பொருட்டாம்.

மெய்கண்டார் தம் நான்காவது நூற்பாவில்,

*"..........ஆன்மாச் சகசமலத் துணராது"*[113]

என்பர். "இனி இவ்வான்மாச் சகச மலத்தினாலுணர்வின்றென்றது" என்பது இதன் இரண்டாம் அதிகரணம்.

இதன் பொருளாவது: "அந்தக் கரணங்களில் ஒன்றன்று என நிலைநிறுத்தப்பட்ட உயிரானது முதல்வனைப் போல் அந்தக் கரணம் முதலியவற்றின் வேறாய அறிவுடைப் பொருளாயினும், செம்பினிடத்துக் களிம்பு அனாதியே உடனாய் நிற்றல் போல வேறு காரணமின்றி ஆணவமலம் அநாதியே தன்னோடு உடனாய் நிற்றலின் தன்னியல்பால் உணருமாறின்றிக் கருவிகளைக் கூடிநின்று உணர்வதாயிற்று"[114]

இங்கே ஆணவமானது 'சகசமலம்' என்று கூறப்பட்டுள்ளது எண்ணத்தக்கது: மலங்கள் மூன்றனுள் கன்மமும் மாயையும் உயிரை இடையே வந்து கூடியவை. ஆனால், ஆணவமோ, அனாதியே கூடி

நின்றது. இடையே வந்து கூடிய மாயை கன்மங்களினால் உயிருக்கு உணர்வு உண்டாகுமேயன்றி அது தடைப்படுவது இல்லை. ஆனால், ஆணவமோ உயிரின் உணர்வைத் தடை செய்வது. இவ் வேறுபாடு காட்டவே, 'சகசமலம்' எனப்பட்டது.

உயிருக்கு அனாதியே 'மலம்' இருத்தலினால், கருவிகளோடு கூடியவிடத்து அறிவு நிகழும். அதுவும் சிற்றறிவே.

'ஆணவமலத்தினால் உயிருக்கு உணர்வில்லை' என்பதைப் பின்வரும் ஏதுவால் மெய்கண்டார் கூறுவர் :

> *"அதுதான் ஞானதிரோதகமாய்*
> *மறைத்துக் கொடு நிற்றலான்"*[115]

இதற்குச் சிவஞானமுனிவர் கூறும் நயவுரை இவண் குறிக்கத்தக்கது :

> *"அச் சகச மலமாவது, ஞானத்திற்குத் திரோதகமாய், அதனை யில்லையெனும்படி மறைத்துக் கொண்டு நிற்றலான், இனி இவ்வான்மாச் சகசமலத்தினால் உணர்வின்றெனை மேற்கொண்டது. மலத்திலக்கணம் வடமொழி வழக்குப் பற்றிக் கூறுவார் ஞானதிரோதகமா யெனவும், அதனைத் தமிழ்மொழியான் விளக்குவார் மறைத்துக் கொடு நிற்றலானெனவும் கூறினாராகலான், அது கூறியது கூறலன்மை யுணர்க"*[116]

ஆணவமலமானது, ஞானத்தின் தொழில் நிகழ வொட்டாது செய்வதாய், அந்த ஞானத்தை இல்லை யெனும்படி மறைத்துக் கொண்டு நிற்றலால், இனி இவ்வுயிரானது சகலமலத்தினால் உணர்வின்று என்பதாம். இங்கு அறிவு நிகழாமையேயன்றி, அறிவே இல்லையென்பதன்று. நிகழாதிருந்த அறிவானது, பின் கருவிகளோடு கூடி நிகழ்ந்தது என்பதாகக் கொள்ளவேண்டும்.

'திரோதகம்' என்பது வடமொழி. அது 'மறைத்தலைச் செய்வது' என்ற பொருளில் வினை- முதலைக் குறிக்கும். 'மறைப்பு' என்பது தமிழ். அது 'மறைத்தல்' என்ற பொருளில் தொழிற்பெயராகும்.

"ஆணவமலமே மறைத்தற் தொழிலைச் செய்யும்" என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு : மாயை - விளக்குப் போல்வது; ஆணவம் - இருள் போல்வது. சகச மலமாகிய ஆணவமலம், உயிரை அனாதியே பற்றி நிற்கும். எதுபோலவெனின், விறகு, கல், இரும்பு முதலியவற்றில் கடைவதற்குமுன் நெருப்பு அதுவதுவேயாய்க் கேடின்றி நின்றும்

கேடில்லாத அந்நெருப்பை விறகு முதலியன மறைத்து வைத்து அந்நெருப்போடு ஒன்றேயாய் நிற்பது போலும்.

நெருப்பு இருந்தும் அது இருப்பதாகத் தெரிய வொட்டாமல் விறகு மறைத்து வைத்தல் போல, உயிர் இருந்தும் அஃது இருப்பதாகத் தெரிய வொட்டாமல், ஆணவமலம் மறைத்து நிற்கும். நெருப்பு உண்டு என்பது, கடைந்தபின் வெளிப்படுதலால் தெரிவதுபோல, உயிர் உண்டு என்பது கருவிகளோடு கூடினவிடத்து அறிதலால் தெரியப்படும்.[117]

ஆணவமலத்தால் பறிக்கப்பட்ட உயிரானது, முதல்வனது சந்நிதியில் அனாதியே நிற்பினும், படி முறையாக அறிவிக்க அறியும்தன்மை யுடையதாய், அனாதியே அறிவித்தால் அறிவிக்கமாட்டாததாய், அவ்வாறு, அறியமாட்டாமையினால், முதல்வனால் உண்டாகும் அறிவை இழந்து ஆணவமலத்தினால் உண்டாகும் அறியாமையாய் அழுந்துதலின் அவ் ஆணவமலம், உயிருக்குப் பந்தமாயிற்று என்பதாம்.

மெய்கண்டார் கூறும் ஆறாம் நூற்பாவில் இடம் பெறும் ஐந்து வெண்பாக்களுக்குச் சிவஞான முனிவர் கூறும் உரை விளக்கச் சுருக்கமாகப் பின்வருவதைக் கொள்ளலாம்:

அறிவை மறைத்து மயக்கத்தைச் செய்வது ஆணவமலம்; இம்மலத்தோடு அனாதியே கூடி அறிவின்றிக் கிடக்கும் நிலையே 'அனாதிகேவலம்' எனப்படும்.

'விஞ்ஞான கேவல'மாவது, அனாதி கேவலத்தினின்று நீங்கி உடம்புபெற்றுச் சங்கரிக்கப்பட்ட பின்னர்ப் புதுச் சிருட்டிக்கு ஏதுவாய் ஒடுங்கியிருக்கும் பொழுது அவ்விடத்தில், மாயை கன்மங்களோடு பொருந்தாது, ஆணவமலத்தோடு கூடிப்படும் விஞ்ஞானகலருக்கு உரிய கேவலம் ஆம்.

இனி, 'அருட் கேவலம்' என்பது ஒன்று உண்டு. தத்துவங்கள் எல்லாம் நீங்கிய பின்னர் அருளோடு கூடிப்படும் கேவலம் இது. சூரியன் நீங்கிய ஆகாயம், இருளோடு கூடி இருளாயேயிருந்தவாறுபோல, உயிரும் ஆணவமலத்தோடு கூடி அதுவாயேயிருக்கும். அம்மலம் நீங்க, அருளோடு கூடி அருளாகவே இருக்கும் என்பதாம்.[118]

**கன்மம்**

முன்னர்ச் சுட்டியவாறு மும்மலங்களுள் ஒன்று 'கன்மம்'. இதன் பெயர்க்காரணம் குறித்து தே.ஆ. ஸ்ரீநிவாஸாசாரியன் பின்வருமாறு கூறுவர் :

"மனம், வாக்கு, காயங்களால் செய்யப்படுவதால் 'கன்மம்' என்பது பெயராயிற்று. பண்ணிய கன்மம் நசித்துப்பலம் உண்டா மளவும் புவனத்திலும், தைலவாசனை போலப் புத்தியிலும் தங்கிக் காணப் படாதிருப்பதால், 'அசிட்டம்' என்பர். உடலாதிகளைப் பலவகையாய் உண்டாக்குவதனால் 'சனகம்' என்பதும் இதன் பெயராம். எல்லாவற்றையும் தாங்குகையால் 'தாரகம்' எனவும்; புசிக்கப்படுவதால் 'போக்கியம்' எனவும் இது கூறப்படும்."[119]

சிவப்பிரகாசம் நூலில் வரும் 'அல்லல் மிக உயிர்க்கிவைதான் அணைத்த தீசன்' என்னும் 2ஆம் நூற்பா இறுதியில்,

"நெல்லின் முளை தவிடுமிபோல் அநாதியாக
நிறுத்திடுவர் இதுசைவம் நிகழ்த்து மாறே"[120]

என வந்துள்ளது. இதற்கு ந.சுப்புரெட்டியார் தரும் விளக்கம் வருமாறு :

"ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களும் ஆன்மாவுடன் சேர்ந்திருப்பதை நெல்லிலே 'முளை தவிடு உமி' சேர்ந்திருப்பதைக் காட்டி விளக்குவர் உமாபதிசிவம்.

முளையைப் போன்றது கன்மம்; தவிட்டைப் போன்றது மாயை; உமியைப் போன்றது ஆணவம். எனவே அரிசி ஆன்மாவிற்கு உவமையாகின்றது என்பது தெளிவு. நெல்லிலுள்ள முளைத்தல் ஆற்றல் முளையைத் தோற்றுவிப்பது போலக் 'கன்மமலம்' உயிரினிடத்துச் சுகதுக்கங்களை முதற்காரணமாய் நின்று தோற்றுவிக்கும். தவிடு, முளைத்தற்கு அநுகூலம் செய்து உடன் நிற்குமாறு போல, மாயா மலம் அச் சுகதுக்கங்கள் தோன்றுவதற்குத் துணைக் காரணமாய்த் தன் காரியமாகிய தனுகரணம் முதலியவற்றையும் உயிரையும் அசைவித்து நிற்கும். உமி, அம்முளை தோன்றுவதற்கு நிமித்த காரணமாயிருப்பது போல ஆணவமலம் அச் சுகதுக்கத் தோற்றத்திற்கு நிமித்த காரணமாய் நின்று, அவற்றை முறுகுவித்து உயிர் நுகருமாறு நிலை பெறுத்தும். இங்கு ஆன்மாவின் சுகதுக்கங்களுக்கு ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று மலங்களும் நிமித்தம், முதல், துணை ஆகிய மூன்று காரணங்களாக அமைவது குறிப்பிடத்தக்கது"[121]

'கன்மமும் அநாதி' என்பது முன்னர்ச் சுட்டப் பட்டது. இதற்கு, மறைமலையடிகள், "கருமத்தின் இருப்பு அநாதியேயன்றி, அஃது உயிரின்கட் பற்றியது அநாதியன்று"[122] என்பர்.

ஆணவத்தோடொப்ப அநாதி என்று சொல்லப்படும் கன்மத்தை 'மூலகன்மம்' என்பர். அது, 'நன்மைதீமை' எனும் பாகுபாடின்றிப் பொதுவாய் நிற்கும். அது, செயற்படும் போது, நல்வினை, தீவினை என்ற இரண்டு வகையில் சிறப்புற்றுச் செயல்பற்றிப் பலவாகத் திகழும்.

"கன்மத்திற்குப் பற்றுக்கோடு மாயை. இக்கன்மத்திற்கு இரண்டு நிலைகள் உண்டு. ஒன்று, காரணநிலை; மற்றது 'காரியநிலை'. செயல் நிகழாத போதும் அது நிகழும் தன்மை, பொருளிடத்தில் இருப்பதைக் காரணநிலை என்பர். வெளிப்பட்டு நிகழும் நிலையைக் 'காரியநிலை' என்பர். சமய நூல்களில் 'காரணநிலை' **மூலகன்மம்** என்றும் காரியநிலை பொதுவாகக் கன்மம் என்றும் சொல்லப்படும்."[123]

இம்'மூலகன்மம்' பற்றித் தொல்காப்பியரே தம் நூலில் குறிப்பிட்டுள்ளார் என்பர் சி.அருணைவடிவேலு முதலியார் :

*"ஆசிரியர் தொல்காப்பியனார், 'வினையே செய்வது' (தொல்.சொல்.வேற்.29) என்னும் சூத்திரத்தில் 'வனைந்தான்' என்பதில் செய்தலாகிய அதற்கு வனைதல் தொழில், செயப்படு பொருளாய்த் தொழில் முதல்நிலை எட்டனுள் தொழிலையும் ஒரு முதல்நிலையாகக் கொண்டார். அதனால் 'மூலகன்மம் உண்டு' என்பது அவரது கருத்தாதல் விளங்கும்."*[124]

வினைகள் மூவகையாக வைத்துப் பேசப்படும். அவை, சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் என்பன. முற்பிறவிகளில் செய்யப்பட்டுக் கிடக்கும் பழவினைகளின் தொகுதியைச் 'சஞ்சிதம்' என்றும்; அத்தொகுப்பிலிருந்து இப்பிறவியிற் சென்று எடுத்துக் கொள்ளப்பட்டு வந்து, பயன் கொடுக்கும் வினைகளைப் 'பிராரத்தம்' என்றும்; இப்பிறவியில் அவ்வினைகளின் பயன்களைத் துய்க்கும்போது மனம் மொழி மெய்களால் செய்யும் புதுவினைகளை 'ஆகாமியம்' என்றும் கூறுவர்.

இப்பிறப்பில், 'பிராரத்த வினை'யானது, நன்மை, தீமை ஆகிய பயன்களைத் தானே நேர்நின்று தருவதில்லை. சிலரை அல்லது சிலவற்றை வாயிலாகக் கொண்டு பயன்தரும். ஒருவர் செய்த தீவினை, அவர்தம் மனைவி அல்லது மக்கள் வாயிலாகச் செயல்படுவது உலகியலிற் காணும் உண்மை. சில நேரங்களில் உரியவரையே வாயிலாகக் கொண்டு பயனை நுகர்வித்தலும் உண்டு.

*"தினை விதைத்தவன் தினையறுப்பான்;*
*வினை விதைத்தவன் வினையறுப்பான்"*

என்பது பழமொழி. அவரவர் செய்த வினைப் பயனை அவரவரே நுகர்ந்து தீரவேண்டும். இவ்வுண்மை அறியாதோர் தமக்குவரும் கேட்டிற்குப் பிறரே காரணம் என எண்ணி வெறுத்து, அவர்க்குக் கேடு சூழ்வதால், மேலும் தீவினையைத் தேடிக் கொண்டவராகின்றார். இதனால்தான் 'பிராரத்த வினையை நுகர்கின்றபோது 'ஆகாமிய வினை'யும் தோன்றிவிடுகின்றது. இவ்வகையில் வினையின் தொடர்ச்சி நீளுகின்றது.

முற்பிறவிகளில் ஈட்டப்பட்டு உளதாகிய 'சஞ்சிதவினை'யே உயிர் நுகர்தற்குரிய இன்பதுன்பப் பயன்களையும் அவற்றை நுகர்தற்கு இடமாகிய உடம்பையும் தோற்றுவிக்க, உயிரானது அவ்வுடம்பைப் பொருந்தி அப்பயன்களை நுகரும். வினைப் பயன்களை நுகரும் முறையிலேயே புதிய வினைகள் தோன்றி அடுத்த பிறவிக்கு வித்தாய் அமையும்.

'வினைகள் அறிவற்றவை' ஆதலின் அவை, தாமாகவே தம்மைச் செய்தவரைச் சென்றடைந்து பயனை அளிக்கமாட்டா! வினையைச் செய்தற்கு இடமாகிய உடம்பில் பொருந்திநின்று வினைகளை செய்தோர், அவ் வினைகளின் பயனை இறைவனே கூட்டுவிக்க அவற்றை நுகர்வர். எவ்வுயிர்க்கு எப்பயனை எவ்விடத்தில் எப்போது சேர்ப்பிக்க வேண்டும் என்பது இறைவனுக்குத் தெரியும். எனவே, அவ்வுயிர்க்கு அப்பயனை அவ்விடத்தில் அப்போது தப்பாமல் சேர்ப்பிப்பன். இதுவும் உயிர்களின் மீது இறைவன் கொண்டுள்ள பெருங்கருணையாம்.

இது குறித்து ஆ.ஆனந்தராசன் கூறும் விளக்கம் வருமாறு :

> *"வினை, உயிர், இறைவன் என்ற மூன்றில், வினை சடம் ஆதலின், அதுதானே தன்னைச் செய்தவனைச் சென்றடையாது என்பது தெரிகிறது. உயிர் அறிவுடையதாயினும் அதன் அறிவு, அறிய[redacted]மையால் மூடப்பெற்று விளங்காது கிடத்தலின், அதுவும், தான் செய்த வினையின் பயனை அறிந்து எடுத்துக் கொள்ளமாட்டாது என்பதும் தெளிவாகிறது. எனவே எஞ்சியுள்ளவனாகிய இறைவனே வினைகளின் பயனைக் கூட்டுவிப்பான் என்பது பாரிசேடத்தால் துணியப்படும்"*[125]

இத்தகைய வினைக் கேட்டினின்று உய்தி பெறுதற்கும் வழியுண்டு. "நாம் செய்த வினையை நாம் தானே நுகர வேண்டும்" என்று எண்ணுதல் வேண்டும். எனவே எந்த ஒரு பொருளிலும் விருப்போ, வெறுப்போ காட்டாமல் 'இறைவனது திருவருள் ஒன்றே

கதி' என்று அதனையே நோக்கி நிற்றல் வேண்டும்.

திருவருளில் திளைத்து நிற்கும் அருளாளர்கட்குப் 'பிராரத்த வினை'யின் தாக்குதல் இல்லை. அஃதாவது, அவர்களுக்கு இன்பதுன்பம் இருந்தாலும் அவற்றில் அழுந்தி நிற்கமாட்டார் என்பதாம். 'பிராரத்த வினை' ஒழிந்தால் 'ஆகாமிய வினை'யும் தானாகவே இல்லாதொழியும். ஒருகால் 'பிராரத்த வினை'யின் தாக்குதல் இருந்தாலும், அது 'வாசனை அளவே'யாம். அதனாலும் 'ஆகாமிய வினை' தோன்றலாம். ஆனால் அருளாளர்கள் சிவத்தைவிடாது பற்றி நிற்பர் ஆதலின் அந்த மெய்யுணர்வு ஆகாமியத்தை ஓட்டிவிடும்.

> *"வண்டியின் சக்கரத்தை வேறுவழியிற் செல்லவிடாது தன்னிடத்திலேயே சுழலும்படி செய்கின்ற அச்சினைப்போலச் சிவன் தன்னைச் சார்ந்தவரைத் தன்னை விட்டு நீங்க விடாமல் அணைத்து நிற்பான். அவரும் சிவோகம் பாவனையால் சிவமேயாய் நின்று, சிவத்தையே விடாது உணர்ந்து நிற்பர். அதனால் ஒளி, இருளை ஓட்டுவது போல அச் சிவவுணர்வு ஆகாமிய வினையை நிலைபெறாது ஓடும்படி செய்து விடும்"*[126]

என்பர் ஆ.ஆனந்தராசன்

மெய்கண்டார், உலகத்தோற்றத்திற்கு முதற்காரணம் மாயை என்றும், துணைக் காரணம் 'சத்திவழியாய் வரும் கன்மம்' என்றும் கூறுவர். அது குறித்த :

> *"அவையே தானே யாய்இருவினையில்"*[127]

எனும் நூற்பா, இவ் இயலின் தொடக்கத்திலும் சுட்டப்பட்டது.

இதற்குச் சிவஞானமுனிவர் தரும் சிற்றுரையாவது :

> *"மேலைச் சூத்திரத்து எடுத்துக் கொண்ட சங்கார காரணனாகிய முதல்வன் கலப்பினால் (உடலின் உயிர்போல) அவ்வுயிர்களேயாய் (பொருட்டன்மையாற் கண்ணின் அருக்கன்போல் அவற்றின்) வேறுமாய், (உயிர்க்கு உயிராதற்றன்மையாற் கண்ணொளியின் ஆன்மபோதம் போல் உடனுமாய் நின்று) ஆணையென்னும் பரியாயப் பெயருடைய தனது சிற்சத்தியான் (வரும்) இருவினைகளான் (அவை) இறத்தல் பிறத்தல்களைப் புரியும் வண்ணம் (அவ்வாணையிற்) பிரிப்பின்றிச் சமவேதமாய் நிற்பன்"*[128]

இவ் இயலின் முற்பகுதியில் கூறியவாறு, இறைவன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நின்று ஆணை என்னும் தனது சிற்சத்தியினால் செலுத்தப்பட்டு வரும் இருவினைகளால் அவ்வுயிர்கள் இறத்தல் பிறத்தல்களை மேற்கொள்ளும் வண்ணம் அவ் ஆணையாகிய சிற்சத்தியில் பிரிப்பின்றிச் சமவேதமாகிய திரோதான சத்தி வடிவாய் நிற்பன் என்றறியலாம்.

கன்மமாகிய வினை சடமாதலின், சத்தியாலன்றித் தானே தொழிற்பட மாட்டாது. சத்தி துணைக் காரணம், அதனால் வரும் கன்மம் மற்றொரு துணைக் காரணம்.

உலகத்திற்கு மாயை முதற்காரணம்; திருவருட் சத்தியும் கன்மமும் துணைக் காரணங்கள். இறைவன் - நிமித்த காரணன் என்பன முன்னரும் சுட்டப்பட்டன.

*"இனி, இவ்வான்மாக்களுக்கு இருவினை*
*முதல்வனாணையின் வரும்"*[129]

என்கின்றார் மெய்கண்டார்.

உழவர் செய்யும் தொழிலுக்கு விளைநிலம் பயன் கொடுப்பதுபோல, உயிர்கட்கு வினைப்பயனை இறைவனே தருவன்.

இதற்கு மெய்கண்டார் கூறும் காரணமாவது :

*"ஒரு நகரியைக் காப்பான் பாடி காவலிட்டாங்கு*
*அவை அவன தாக்கினை யாகலான்"*[130]

இதற்குரிய விளக்கம் வருமாறு :

*"ஒரு பட்டணத்தைக் காக்கும் அரசன், பாசறையிற் காவல் வைக்கும் தண்டத் தொழிலை, உரியவனாகிய ஒரு அதிகாரிமாட்டு வைத்துச் செய்வதுபோல, முதல்வன் புதுச் சிருட்டியைச் செய்யும் தனது சத்தியை இருவினையின் இடமாக வைத்து நடாத்துவனாதலால் இனி இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வன் ஆணையின் வரும்."*[131]

"வினைப்பயனை உயிரே அறிந்தெடுத்துக் கொள்ளாது" என்பதனை,

*"அவ்வினையைச் செய்வதனில்"*[132]

எனும் வெண்பாவால் உணர்த்துவர் மெய்கண்டார். அதன் கருத்து வருமாறு :

*"இரும்பை இழுத்துக் கொள்ளும் சத்தி, காந்தத்தினிடத்தில் இருப்பினும், இரும்பு, நேராக இல்லையாயின், இரும்பு இருக்கும் இடம் சென்று காந்தம் இழுப்பதில்லை. ஒருவன், காந்தத்தின் நேராக இரும்பைக் காட்டியவிடத்தில் இழுத்துக் கொள்ளும். அதுபோல, வினைப்பயனை நுகரும் சத்தி, உயிரினிடத்தில் இருப்பினும், வினையை எடுத்துக் கொள்ளும் பேரறிவு, உயிருக்குக் கிடையாது. இறைவன் அவரவர் செய்த வினையை அவரவருக்குக் பிறழாமல் கூட்டும்பொழுது, அவ்வினைப் பயன்களை நுகர்தற்குரிய உடம்பினை உயிர்கள் பொருந்தி நுகரும். இறைவன் கூட்டவில்லையாயின், சிற்றறிவையுடைய உயிருக்கு வினைப்பயனை வேறுயார் கூட்டமுடியும்?"*[133]

**இருவினைப் பயன்களை உயிர்கள் நுகரும் முறைமை குறித்து அருணந்தி சிவாசாரியர் கூறுவது வருமாறு :**

*"இருவினை யின்பத் துன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து*
*வருவது போவ தாகு மன்னிய வினைப்பயன்கள்*
*தருமரன் றரணியோடு தராபதி போலத் தாமே*
*மருவிடா வடிவுங் கன்மப் பலன்களு மறுமைக் கண்ணே"*[134]

**கொற்றவன்குடி உமாபதிதேவ நாயனாரும்,**

*"படைத்த தொரு படியின்றிப் பறவை பசு நரராய்ப்*
*பண்ணியதென் முன்னைவினைப் பான்மையென்ப"*[135]

**என்று கூறுவதும் இங்கு ஒப்புநோக்கத் தக்கது.**

**மாயை**

**மும்மலங்களுள் 'மாயை' என்பதும் ஒன்று என்று முன்னர்க் குறிக்கப்பட்டது.**

*"சைவ சித்தாந்தத்தின்படி மாயை, மெய்யாகவே உள்ள ஒருபொருள்; அநாதி நித்தியம்; சடம்; இறைவனுக்குப் பரிக்கிரக சத்தியாய் இருப்பதும்; இறைவனில் வியாப்பியம். ஒருவனுக்கு அவனின் வேறாய் உள்ள சத்தி 'பரிக்கிரக சத்தி'யாகும்; அவனில் வேறாகாது ஒன்றாய் இருக்கும் சத்தி "தாதான்மிய சத்தி' எனப்படும்."*[136]

**என்று கூறுவர் சி.அருணைவடிவேலு முதலியார்.**

**இம் 'மாயை' பற்றி ர.ராமானுஜாசாரி தரும் விளக்கமும் இங்குக் குறிக்கத்தகும்!**

*"உலகின் அடிப்படை 'மாயை'; அதுவே அதன் பொருட்காரணம்; 'மாயை' என்னும் சொல், உலகம் தோன்றுதற்கும், அது மீண்டும் சென்று ஒடுங்குதற்கும் அடிப்படையான தத்துவத்தை விளக்கும். 'மா' என்றால் ஒடுங்குதல்; 'யா' என்றால் 'வருதல்'. உருவமற்று, அழிவற்று, நித்தியமான அது, ஒரு முடிவான பொருள். அது, தன் தோற்றத்திற்காக எதற்கும் கட்டப்பட்டதல்ல. வேதாந்தி, அதை நித்தியமென்றோ, அநித்தியமென்றோ சொல்ல முடியாமல் நிற்பது போலன்றிச் சித்தாந்தி அதை உண்மையானதென்றும், வெளித்தன்மையுடையதென்றும் கூறுகிறான். தனது அறிந்து உணரும் திறமையைச் செயல்படுத்த ஆன்மாவுக்குச் சத்தி தேவைப்படுகிறது. அந்தச் சத்தியைத்தான் 'மாயை' அளிக்கிறது. சத்தியை அளிப்பதுடன், அச்சத்தியைப் பயன்படுத்தும் கருவிகளையும் 'மாயை' அளிக்கிறது. அவை, 'உடல், உள்ளத்திறன் வாழ்வதற்கு ஓர் உலகம், அனுபவிப்பதற்குப் பொருள்கள்' போன்றவை. ஆகவே, மாயையின் கைவேலையானது, தனு (தேகம்), கரண (மனக்கருவிகள்), புவன (உலகங்கள்), போகம் (அநுபவிக்கும் பொருள்கள்) ஆகியவற்றை அளிக்கிறது. அதுவே அண்டம்; அதுவே பிண்டம்."*[137]

**ஞானியார் அடிகள்,**

*'மா' என்பது 'ஒடுங்குதல்'; 'யா' என்பது 'வருதல்'. எனவே அனைத்துக் காரியங்களும் தன்னிடம் வந்து ஒடுங்குதற்கும், தன்னினின்றும் தோன்றுதற்கும் காரணமாய் நிற்பது ஆதலின் இதற்கு 'மாயை' எனும் பெயர் உண்டாயிற்று"*

**என்று கூறுவர்.**[138]

உயிர்களைத் தன்வசமாக்கி மயக்கும் தன்மையது ஆதலின் இதற்கு 'மாயை' என்னும் காரணப்பெயர் ஏற்பட்டதாகத் தே.ஆ. ஸ்ரீநிவாஸாசாரியன் கூறுவர்.[139]

**வடமொழியில் 'மாயா' எனவரும்; அது தமிழ் முறைக்கேற்ப 'மாயை' என்றாகும் எனச் சிலரும்; 'மாய்' என்ற பகுதியிலிருந்து 'மாயை'**

என்ற சொல் தோன்றிற்று எனச் சிலரும்; 'மாய்தல் - மறைதல்' எனவே உலகமாய்த் தோன்றி மறைவது எதுவோ அதுவே 'மாயை' எனச் சிலரும் கூறுவர்.[140]

மேலும், ந. சுப்புரெட்டியார்,

> *"உலகில் பலவகையாகக் காணப்படும் பொருள்களாய்ப் பரிணமிக்கக்கூடிய பலவகைச் சத்திகளின் தொகுதியே 'மாயை' எனப்படுவது"*[141]

என்று விளக்குவர்.

உயிர்களுக்குப் பிறப்பு நிலையில், அறியாமையும் அறிவும் ஒன்றோடொன்று மாறுபட்டு நிகழ்ந்து வருகின்றன. அறியாமைக்குக் காரணம் 'ஆணவமலம்' என்பது முன்னர்க் குறிக்கப்பட்டுள்ளது. காணப்படும் உலகமே, உயிர்களின் அறிவை விளக்கி வளர்த்து வருகின்றது. அஃது இரண்டு பிரிவாக நின்று, உயிர் உணர்வை விளக்கியும், பெருக்கியும் வருகின்றது. ஒன்று, உடம்பு; மற்றொன்று உடம்பின் சூழ்நிலையாகிய நிலமும், அதன்கண் உள்ள பொருள்களும் ஆகும்.

இம்மாயைக்கும், முதல்வனுக்குமிடையே உள்ள தொடர்பு குறித்து, ர. ராமானுஜாசாரி கூறுவது இவண் சுட்டுதல் பொருந்தும்:

> *"ஒரே வார்த்தையில் சொல்லப்போனால், மாயையே மனித வரலாறாகிய நாடகம் நடிப்பதற்கேற்ற காட்சியை அளிக்கிறது. மாயையே நிலைக்களமாயின் ஒரு கர்த்தா எதற்கு எனக்கேட்டால், மாயை அறிவற்றது. ஆகவே தானே பொருள்களாகவும், உருவங்களாகவும் வளரமாட்டாது. அந்தக் கர்த்தாவும், மாயையின்றி ஒன்றையும் உண்டாக்க மாட்டான்! ஆகவே கடவுளாகிற தலைவன், தன்னிச்சைப்படி அந்த மாயையினின்றும் வேண்டிய உருவங்களை உண்டாக்குவான். ஆகவே கர்த்தாத் தன்மையைக் கொடுப்பது மாயை என்று சொல்ல முடியாது"*[142]

என மாயைக்கும் முதல்வனுக்குமுண்டாய தொடர்பினை விளக்குவர்.

மாயையின் பொருள்கள் வாயிலாகவே, உயிரானது அறிவு பெறுகிறது. ஆனால் அந்த அறிவு 'பாசஞானமே'. மாயை தரும் அறிவு, பெரும்பாலும் பிழையானது; அது உலகத் தோற்றத்தில் அழுத்தும். உயிரைக் கன்மத்தின்கீழ் வரும்படிச் செய்து, மறுபிறவிக்கும் கொண்டு சேர்க்கும்.

இம் மாயை (1) சுத்தமாயை (2) அசுத்தமாயை என இருவகைப்படும். இவற்றுள், சுத்தமாயையானது, 'ஆணவம் கன்மம்'

இவற்றோடு கலவாதது; தன்னோடு தொடர்புடைய உயிர்களுக்கு இன்பம் தருவது; பேரறிவும் பேராற்றலும் கொடுப்பது. முதல்வன் **திருவருள்** நேரேபற்றி நின்று தொழிற்படுத்துவதற்குரியது. தூய்மையான சிவத்துக்கும் உணர்வற்ற பொருளுக்கும் இடையே உள்ளது; நுண்பொருளாய் இருப்பது.

அசுத்தமாயையானது, ஆணவம் கன்மம் இவ்விரண்டோடு கலந்திருப்பது; கலப்புற்ற இவ் அசுத்தமாயை பருப்பொருளாயுள்ளது; அறிவற்றது; அது, தன்னிடமிருந்து பல்வேறுபட்ட தன்மைகள் தோன்ற, 'உடம்புகள், கருவிகள், உலகங்கள், பொருள்கள்' ஆகியவற்றை ஏற்படுத்துகின்றது. இன்ப, துன்ப, மயக்கம் எனும் மூன்றனையும் தருவது.

உடம்பும் உலகமுமாய் அமைந்த தத்துவங்களை 'அசத்து' என்று உணர்ந்து அவற்றினின்றும் நீங்க, முதல்வனது திருவருள் துணையை நாடவேண்டும்.[143]

மெய்கண்டார், உயிர் உண்மையை விளக்க வரும்போது,

*"சார்மாயை நீயல்லை"*

என்பர்.[144] இதற்கு ஆ.ஆனந்தராசன் தரும் விளக்கம் வருமாறு :

> *"மாயையின் காரியங்களாகிய உடம்பு, ஐம்பொறிகள் முதலிய யாவும் கண்ணுக்குக் கண்ணாடி போல, தனித்து நின்று அறியமாட்டாத உனக்குத் துணையாகி உன் அறிவை விளக்க வந்த கருவியேயன்றி அவை தாமே அறிவன அல்ல. கண், கண்ணாடியாகாது. அதுபோல நீ அம்மாயையின் காரியங்கள் ஆகமாட்டாய்.*
>
> *'மாயையின் துணையினால் அறிவு விளங்கப்பெற்று வரும் நீ, ஒரு துணையும் வேண்டாது தானே எல்லாவற்றையும் அறிபவனாய் அந்த மாயைக்கு அப்பாற்பட்டவனாய்உள்ள சிவமும் ஆகமாட்டாய்.*
>
> *" 'அவ்விரண்டும் இல்லையாயின் யான் யாது' எனின், பதியாகிய சிவத்திற்கும் பாசமாகிய மாயா காரியங்களுக்கும் வேறாய் உள்ள ஒரு தனிப்பொருள் ஆவாய்."*[145]

இம் மாயையின் விளக்கமாக அமைவது, பின்வரும் சிவஞானபோத எடுத்துக்காட்டு வெண்பா:

*"மாயா தனுவிளக்காம் மற்றுள்ளங் காணாதேல்*
*ஆயாதாம் ஒன்றை அதுஅதுவாய் - வீயாத*

*வன்னிதனைத் தன்னுள் மறைத்தொன்றாங் காட்டம்போல் தன்னை மலமன்றணைதல் தான்*"[146]

ஆணவமாகிய இருளில் இருக்கும் உயிரானது, மாயையின் காரியமாகிய உடம்பை விளக்காகக் கொண்டு பொருட்களையறியும். அவ்விளக்கு இல்லாவிடில், அஃது ஒரு பொருளையும் அறிய மாட்டாது; அறியாமையுடையதாகவே இருக்கும்.

இவ்வெண்பாவில், ஆணவமானது, உயிரறிவை எவ்வாறு மறைத்திருக்கின்றது என்பதை ஓர் உவமை மூலம் உணர்த்துகின்றார் மெய்கண்டார்.

நெருப்பு எப்பொருளில் இருந்தாலும் அப்பொருளில் மறைந்து அப்பொருளாகவே நிற்குமன்றி வெளிப்பட நில்லாது. அது அதுவாய் நிற்றல் அதன் இயல்பு. அத்தகைய நெருப்பை விறகு தன்னுள் மறைத்து வைத்துத் தான் ஒன்றே உள்ளது எனும்படி நிற்கும்.

நெருப்பினைப் போன்றது உயிர். தான் சார்ந்த பொருளோடு ஒன்றித் தான் என்பது தோன்றாது அப்பொருளாகவே நிற்பது உயிரின் இயல்பு. அத்தகைய உயிரை ஆணவமலம் தன்னுள் பொதிந்து கொண்டு, உயிர் என்பதொன்று இல்லை என்னும்படியாக மறைத்து நிற்கும்.

இதில் வந்துள்ள உவமையையும் பொருளையும் பின்வருமாறு விளக்கலாம் :

| **உவமை** | | **பொருள்** |
|---|---|---|
| 1. விறகு | ... | ஆணவமலம் |
| 2. விறகினுள் உள்ள நெருப்பு | ... | ஆணவமலத்துள் கிடக்கும் உயிர் |
| 3. நெருப்பு இருப்பது தோன்றாமை | ... | உயிர் புலப்படாமை |
| 4. விறகு நெருப்போடு அத்துவிதமாய்க் கலந்து நிற்றல் | ... | ஆணவமலம் உயிரோடு அத்துவிதமாய் இயைந்து நிற்றல் |

மேற்கூறியவாற்றால், ஆணவம் அறிவை மறைத்து இருள் போன்றதாய் நிற்கும் என்பதும், மாயை அவ்வறிவை விளக்கி ஒளி போன்றதாய் நிற்கும் என்பதும் விளங்கும்.[147]

மாயையின் காரியமாகிய கருவிகள் உயிரின் அறிவை விளக்க வந்தவை; விழிப்பு நிலையில் அக்கருவிகளாலேயே உலகத்தை அறிய முடிகின்றது. உறக்க நிலையில் அவை செயற்படாமல் மடங்கியிருப்பதால் அறிவு விளங்காமற் போகின்றது.

மாயையைப் போன்றே கன்மமும் அறிவை விளக்கும். இக்கன்மமே, உயிர் அறிவைத் தூண்டித் தன் பயனைத் தருதற்கு ஏற்றவாறு, செயற்படச் செய்கிறது. அச்செயற்பாட்டினால்- தான் அறிவு விளக்கமுறுகிறது. எனவே மாயையும் கன்மமும் அறிவை விளக்குவன என்பது தெளிவு.

"மாயா காரியங்கள் அறிவை மயக்குமன்றோ? அறிவை விளக்குவன அவை எனல் யாங்ஙனம் பொருந்தும்?" எனும் ஐயம் எழுதல் கூடும்.

இவற்றிற்கு ஆ.ஆனந்தராசன் தரும் விளக்கம் வருமாறு :

"*கேவல நிலையில் மாயையின் செயற்பாடு இன்மையால் ஆணவம் தனது மறைத்தல் தொழிலை முழுமையாகத் தடையின்றிச் செய்கிறது. அதனால் உயிர் தனது அறிவை முற்றிலும் இழந்து சடப்பொருள் போலவே கிடக்கிறது. இறைவன் ஆணவத்தின் ஆற்றலைக் குறைப்பதற்காக அதற்கு மறுதலைப் பொருளாகிய மாயையைக் கூட்டுவிக்கின்றான். அஃதாவது மாயையின் காரியங்களாகிய உலகையும், உடம்பையும், கருவிகளையும் உயிருக்குப் படைத்துக் கொடுக்கின்றான். அவற்றின் உதவியினால் அறிவு சிறிது விளங்கப்பெறுகிறது. இதுவே சகலநிலை. இருள் செறிந்த அறையில் உள்ள ஒருவனது கண் இருள் வயப்பட்டு இருளில் மூழ்கி ஒன்றையும் அறியமாட்டாது நிற்றலைப் போன்றது கேவலநிலை. அவ்இருட்டறையில் கைவிளக்கு ஒன்றை ஏற்றிவைத்தால் அதன் ஒளியில் அங்குள்ள பொருள்கள் ஓரளவு புலப்பட்டுத் தோன்றுதலைப் போன்றது சகலநிலை எனலாம்.*

"*விளக்கொளியில் அறையிலுள்ள பொருள்கள் உள்ளவாறு புலப்படுவதில்லை. பொருள்களின் வண்ணமும் வடிவும் மாறித் தோன்றுதல் உண்டு. ஒரு மூலையில் வளைந்து கிடக்கின்ற கயிறு, பாம்பாகத் தோன்றுதல் கூடும். இவ்வாறு பொருளியல்பு மாறுபட்டுத் தோன்றுவதற்கு எது காரணம்? விளக்கொளி காரணமா? இருள் காரணமா? விளக்கொளி எப்பொழுதும் பொருள்களை விளக்கிக் காட்டுமேயன்றி வேறுபடுத்திக் காட்டாது. பொருள்கள் வேறுபட்டுத் தோன்றுதல் இருளினால் விளைவதாகும். விளக்கொளி வாராதபோது பொருள்களை முழுதுமாக மறைத்து நின்ற இருளே, விளக்கொளி வந்த காலத்தில்*

*அவ்வாறு மறைக்க மாட்டாமல் அவ்வொளியின் சார்பினால் பொருள்களை மாறித்தோன்றும்படியாகச் செய்கிறது. அதுபோலவே, கேவல நிலையில் உயிரை முற்றிலுமாக மறைத்து நின்ற ஆணவ மலமாகிய இருள், சகல நிலையில் விளக்கொளி போன்றதாகிய மாயையின் சார்பினால் இழிந்த பொருளை உயர்ந்தபொருள் போலவும், துன்பப் பொருளை இன்பப் பொருள் போலவும் மாறித் தோன்றும்படியாகச் செய்கிறது"*[148]

இம்மாயைக்கும் ஆணவத்திற்குமுள்ள வேறுபாடுகளைப் பின்வருமாறு சுட்டலாம்:

| **ஆணவம்** | **மாயை** |
|---|---|
| 1. இருள் போன்றது | 1. விளக்கொளி போன்றது |
| 2. உயிரோடு இயற்கையில் உள்ளது | 2. உயிரோடு பின்பு சேர்ந்தது |
| 3. உயிரோடு கலந்து நிற்பது | 3. உயிருக்கு வேறாய் நிற்பது |
| 4. காரணமின்றிக் கலந்து நிற்பது | 4. காரணம் பற்றி வந்து சேர்ந்தது |

உண்மையில் மயக்குவது ஆணவமலமே. இதன் மயக்குதல் தன்மைக்கு மாயை சார்பாக இருப்பதால், 'மயக்குவது மாயை' என்று சொல்லப்படும்.

இம்மாயைக்கும், 'தடத்த, சொரூப லக்கணங்கள்' உண்டு. உடல்வனப்பும், செல்வமும் பிறவும் எல்லாம் மாயா காரியங்களே. மாயை அவ்வாறு நின்று, உயிரைத் தன்னையே நோக்கும்படி செய்து, அதன் அறிவை மயக்குதல் சார்பு பற்றிக் கூறப்படும் 'பொதுவியல்பு' ஆகிய 'தடத்தலக்கணம்' ஆகும். அறிவை விளக்குதலே மாயையின் 'உண்மையியல்பு' ஆகிய 'சொரூபலக்கணம்' ஆகும்.

## பாசங்களின் நீக்கமும் திருவருளும்

இறைவன், உயிரோடு அத்துவிதமாய்க் கலந்துள்ளமை முன்னர் விளக்கப்பட்டது. ஆணவமலமும் உயிர்களிடத்து அத்துவிதமாய்க் கலந்துள்ளது. இறைவனும், அவனுக்கு எதிரான ஆணவமலமும் உயிரிடத்தில் ஒரே நேரத்தில் இருத்தல் எவ்வாறு கூடும் எனும் ஐயம் நிகழும். இதற்கு ஆ.ஆனந்தராசன் பின்வருமாறு விளக்கம் தருவர் :

*"ஒளியும் அதற்கு எதிரான இருளும் வெவ்வேறு இடத்தில் இல்லை. இரண்டுமே ஓரிடத்தில்தான் உள்ளன. ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம். ஒன்று மேலிடும்போது மற்றொன்று மடங்கி நிற்கும். அதுபோலத் திருவருள் ஒளியும், ஆணவமாகிய*

*இருளும் உயிரிடத்திலேயே உள்ளன. உயிர், தன் பக்குவக் குறைவினால் தன்னிடத்தே உள்ள திருவருள் ஒளியை உணர்வதில்லை. ஆணவமலத்தையே அதுபற்றி நிற்கிறது. அதனாலேயே எல்லாவகைத் துன்பங்களையும் எய்துவதாயிற்று. உயிர் பக்குவம் பெற்ற காலத்தில் அஞ்ஞானமாகிய இருள் கீழ்ப்பட்டொழிய, மெஞ்ஞானமாகிய திருவருள் மேற்படும்."*[149]

**பாசத்தோடு கூடியிருத்தலே உயிருக்கு மாசு ஆகும். எனவே உயிருக்குத் தூய்மையாவது அப்பாசத்தினின்று நீங்குதலாம். பாசத்தின் நீங்குதல் என்பது, பாசப் பொருள்களைத் தன்னின் வேறாகக் காணுதல் ஆம்.**

**உயிரானது தூய்மையடைந்து பாசத்தினின்று நீங்குதற்குச் செய்ய வேண்டுவனவற்றைப் பின்வரும் நூற்பாவால் உணர்த்துவர் மெய்கண்டார்:**

*"ஊனக்கண் பாசம் உணராப் பதியை*
*ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி*
*உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்*
*தண்ணிழ லாம்பதிவிதி எண்ணுமஞ் செழுத்தே"*[150]

**இதற்குச் சி.சு.மணி, பின்வருமாறு பொருள் உரைப்பர் :**

*"பசுஞானத்தாலும் பாசஞானத்தாலும் அறியப்படாத இறைவனை, அம்முதல்வனது ஞானக் கண்ணாலே தன் அறிவினிடத்தே ஆராய்ந்து அறிக. அத்தகைய பதி ஞானத்தைப் பெறுவதற்குரிய வழி, நிலம் முதல் நாதம் வரையுள்ள முப்பத்தாறு தத்துவங்களும் அவற்றின் விளைவுகளும் பாசக் கூட்டங்களே என்று அறிவதாகும். அவையாவும் எப்போதும் நிலைத்து நிற்பனவல்ல என்றும் கானல் நீர்போல மறைவன என்றும் அறிந்து அவற்றை விட்டு நீங்குதல் வேண்டும். நீங்கவே பிறவித் துயராகிய வெப்பத்தைத் தணிக்கின்ற குளிர் நிழலாய்ப் பதிஞானம் வெளிப்பட்டுத் தோன்றும். இவ்வாறு விளங்கிய ஞானத்தினால் காணப்பட்ட காட்சி நிலைபெறுவதன் பொருட்டுப் பலகாலும் பழகிவந்த பழக்கத்தால் மீளவும் பாசக்கூட்டத்தை நோக்கி அறிவு திரியாது இருக்கும் பொருட்டும் திருவைந்தெழுத்தை விதிப்படி அறிந்து கணித்தல் வேண்டும்."*[151]

முதல்வனை அறிதற்குப் 'பதிஞானம்' ஒன்றே துணை. இப் பதிஞானத்தாலே பதியைக் காண இயலும். சூரியனது புறவொளி எங்கும் பரவி நிற்றல் போல இறைவனது திருவருளும் எங்கும் நிறைந்துள்ளது. பகலவனது ஒளியில் இருப்பினும், அதனை அறியமாட்டாத கூகையினது கண்போலப் பதிஞானமாகிய பேரறிவோடு கூடியிருந்தும் உயிரறிவு அதனை அறியாதுள்ளது.

உயிரானது, திருவருளை அறிய முடியாமல் தடுமாறும் நிலையைப் பின்வரும் ஓர் எடுத்துக்காட்டால் விளக்குவர் ஆ.ஆனந்தராசன் :

> *"ஒரு வழிப்போக்கன் தனிவழியே நடந்து போகிறான். அடர்ந்த காட்டுப் பகுதி அது. எங்கும் அச்சம் தரும் சூழ்நிலை. அவன் நடுங்கிக் கொண்டே செல்கிறான். ஆனால் அவனுக்குப் பின்னேயே ஒருவன் அவனுக்குக் காவலாகத் தொடர்ந்து வருகிறான். தன் பின்னே வருகின்ற அத்துணைவனை அவ்வழிப்போக்கன் அறியவில்லை. திரும்பிப் பார்த்தால் அல்லவா உண்மை தெரியும்; 'தனக்குத் துணை உண்டு; அஞ்ச வேண்டுவதில்லை' என்ற தெளிவு உண்டாகும். அவனோ திரும்பியே பாராமல் துன்புற்று நடக்கின்றான்.*
>
> *"உயிர்களாகிய நம் நிலையும் அவ்வழிப் போக்கனது நிலை போன்றதேயாகும். நாம் பிறவியாகிய கடத்தற்கரிய காட்டு வழியிலே நடந்து கொண்டிருக்கின்றோம். திருவருளாகிய வழித்துணை நம்மோடு தொடர்ந்து வருவதை அறியாதவராக இருக்கின்றோம். அடுத்து என்ன வருமோ, என்ன நிகழுமோ என்ற கவலையோடு வாழ்வுப் பாதையில் இயங்குகிறோம். நம் அறிவு, புறத்தே செல்கிறதே தவிர உள்முகமாகத் திரும்பி நோக்குவதில்லை. அகத்தே நோக்கினால் அன்றோ அன்றுதொட்டு நம்மோடு உடனாக வரும் அருந்துணையாகிய அருள் ஞானத்தை - பதிஞானத்தை அறிந்து கொள்ள இயலும்."*[152]

உயிரினால் செலுத்தப்பட்டு ஐம்பொறிகள் தத்தம் புலன்களை அறிகின்றன. அவ்வாறு புலன்களை அறிந்தாலும். கண், 'உருவத்தைப் பார்க்கிறேன்' என்றோ, செவி, 'ஓசையை அறிகிறேன்' என்றோ அறியாது. இவ்வாறே பிறபொறிகளும் தம் செயல்களை உணர்வதில்லை. மேலும், இவ்வைம்பொறிகள் தம்மை அறியாததோடு, தம்மைச் செலுத்தி நிற்கும் உயிரையும் அறியமாட்டா. இந்த ஐம்பொறிகளைப் போலவே, உயிர்களும் தம் அறிவுக்கு அறிவாய் நின்று உணர்த்தும் திருவருளை உணர்வதில்லை. தமக்கு ஒப்பற்ற துணையாய் விளங்கி, தம்மைச்

செலுத்தி நிற்கும் திருவருளையும் அறிவதில்லை. திருவருளால் செலுத்தப்படும் தம்மையும் அறிவதில்லை.

உயிர்கள் முதல்வன் திருவருளால் உணர்தல், காந்தத்தின் முன்னிலையில் இரும்பு செயற்படுதல் போன்றதாகும். இதனை உணர்த்தும் நூற்பா,

*"விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்கு"*[153]

என்று தொடங்கும்.

ஆணவமலம் உயிரறிவை மறைத்திருப்பதால், உயிர், அகவுணர்வை இழந்து நிற்கிறது. இதனால், உள்முகமாக நோக்கித் தன்னையும், தன்னுள் கலந்திருக்கும் திருவருளையும் உணராது நிற்கும். இதனால், ஆணவமலத்தை நீக்க வந்த மாயையால், உயிருக்குப் புறவுணர்வே விளங்கும். அகவுணர்வு உண்டாகாது. இதனால், சகலநிலையில் ஆன்மா, உலகப் பொருள்களையறிந்து அவற்றில் அழுந்துகிறது. ஆதலின் தனக்குத் தோன்றாத் துணையாய் நிற்கும் திருவருளை உயிர்கள் அறிவதில்லை.

அசத்தை 'அசத்து' என்று கண்டு நீக்கிச், சத்தாகிய சிவத்தை அடைதற்கு, மெய்கண்டார் காட்டும் வெண்பா வருமாறு :

*"கண்டதை யன்றறன் றெனவிட்டுக் கண்டசத்தாய்*
*அண்டனை ஆன்மாவில் ஆய்ந்துணரப் - பண்டணைந்த*
*ஊனத்தைத் தான்விடுமா றுத்தமனின் ஒண்கருட*
*சானத்தில் தீர்விடம்போற் றான்"*[154]

"சுட்டுணர்விற்குப் புலப்பட்டு வருகின்ற உலகத்தை ஒவ்வொன்றாக ஆராய்ந்து, அது அதனைச் 'சத்து அன்று, அசத்தே' என்று விட்டு நீங்க வேண்டும். அவ்வாறு நீங்கி, தன் அறிவினிடத்தே சுட்டுணர்வைக் கடந்துநின்ற இறைவனை ஆராய்ந்து 'சிவோகம்' எனப் பாவித்தல் வேண்டும். அப்போது, உயிரறிவில் விளங்கும் இறைவனால், அவ்வுயிரோடு தோற்றமில் காலந்தொட்டே தொடர்ந்து வந்த பொது இயல்பும், அதற்குக் காரணமான ஆணவமலம், மாயாமலம், கன்மமலம் என்பனவும், விட்டு நீங்கும். இது, கருடதியானத்தினால், கருடபாவனை செய்தவன், பாம்பின் விடத்தைத் தீர்த்தல் போன்றது" என்பது இதன் பொருள்.

எனவே, ஞானாசிரியரின் அருளுரை கேட்டு அதன்படி சிவோகம்பாவனையில் பழகுவதே, மலவாசனை நீங்குதற்குரிய வழி என்பது போதரும்.

## திருவருளே ஞானாசிரியனாய்த் தோன்றுதல்

உயிரிடத்துள்ள ஆணவமலம், உயிருக்கு அறியாமையைச் செய்து, ஞானத்தில் விருப்பம் செல்லாதபடி தடுத்து; நிலையில்லாத

உலகப் பொருள்களையே விரும்பும்படி செய்யும். உயிர், தான் செய்யும் தவறுகளையே சரியான செயல்கள் என்று தற்போதத்துடன் எண்ணச் செய்யும்.

இத்தகைய கொடிய ஆணவமலத்தின் ஆற்றலை மெலிவித்து உயிருக்கு அருளும் பொருட்டே, இறைவன் மாயை, கன்மம் இவற்றை உயிரிடம் சேர்த்து, பிறப்பு இறப்புக்களில் செலுத்தி, இன்பதுன்பங்களைத் தந்து அனுபவிக்கச் செய்கிறான். எண்ணற்ற பிறவிகளில் உயிரறிவைத் தடை செய்த ஆணவத்தின் சடஆற்றல், படிப்படியாகத் தன்சத்தி மெலிவடைகிறது. இதனால் அதன் பிணிப்பு நெகிழ்ந்து 'மலபரிபாகம்' உண்டாகும் நிலை ஏற்படுகிறது. மலசத்தி நீங்கக்கூடிய பக்குவத்தை உயிர் பெறுகிறது.

மலபரிபாகம் சிறிதுசிறிதாக நிகழ நிகழ, இதுவரை உயிரில் மறைந்திருந்து, உயிரைப் பக்குவப்படுத்தி வந்த, திரோதான சத்தியும் தன் தன்மைமாறி அருட்சத்தியாக உயிரின்கண் விளங்கித் தோன்றும். எந்த அளவுக்கு ஆணவமலசத்தி குறைந்து வருகிறதோ அதே அளவுக்கு உயிரில் அருட்சத்தி விளங்கி மேம்படும்.

அந்நிலையில், ஆன்மாவின் முற்செய் தவத்தால் உயிருள் இருக்கும் இறைவனே, உயிருக்கு ஞானாசிரியனாகி அருள்வான். இக்கருத்தைக் கூறும் நூற்பா வருமாறு :

*"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்*
*தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்*
*டன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே"*[155]

"ஆன்மா முற்பிறப்புக்களில் செய்த சிவ வழிபாடாகிய தவத்தின் பயனாக, இதுகாறும் உயிர்க்குயிராய் மறைந்து நின்று அறிவைத் தந்த முதல்வன் இப்பொழுது, குருவடிவம் கொண்டு நேரே எழுந்தருளிவந்து, 'எமது மைந்தனாகிய நீ ஐம்பொறிகளாகிய வேடரிடத்து அகப்பட்டு அவர் வழியிலே வளர்ந்தமையால் உனது உண்மையியல்பை மறந்து மயங்கித் துன்புறுகின்றாய்' என்று அறிவிக்க அதனையறிந்த ஆன்மா அப்பொழுதே அவ்வைம்புல வேடரை விடுத்து, உணர்த்திய அம்முதல்வன் தனக்கு வேறாய் நில்லாது தன்னோடு என்றுமே உடனாய் இருத்தலால், அதனை உணர்ந்து அவனது திருவடியை அடைந்துவிடும்" என்பது இதன்பொருள்.

வேடர்களின் கூட்டத்தில் வளர்ந்த அரசகுமாரன் அரசன் வந்து உணர்த்திய அப்பொழுதே அவ்வேடர் கூட்டத்தை விட்டு நீங்கி விடுவதைப் போல, ஞானாசிரியரின் உபதேசத்தைக் கேட்ட மாணவன், அக்கணமே, தான் சார்ந்திருந்த கருவிக்கூட்டத்தை விட்டு விலகுவான்; இங்குக் கருவிக்கூட்டத்தை விட்டு நீங்குவது என்பது, இடம் பெயர்தல் அல்ல, உடம்பும் ஐம்பொறிகளும் மனமும் ஆகிய அவையே தானாக

நின்ற மயக்கம் தீர்ந்து, அக்கருவிகள் தனக்கு வேறானவை என்பதை உணர்ந்து, அவற்றின் வழிப்பட்டு நில்லாமல், நீங்கியிருத்தலாகும். எனவே நீங்குதல் என்பது இடத்தால் நீங்குதல் அன்று, அறிவால்
நஅஜய35 பலப லைஉஜ ஜஙள கஅஜய1 ஒலப ஙிடிஊஅஜய1
ஒலப ஙிடிஊஅஜய1 ஒலப ஙிடிஊஅஜய1 ஒலப ஙிடிஊஅஜய1
ஒலப ஙிடிஊஅஜய1 ஒலப ஙிடிஊஅஜய1 ஒலப ஙிடிஊஅஜய1
ஒலப ஙிடிஊஅஜய1 ஒலப ஙிடிஊஅஜய1 ஒலப ஙிடிஊஅஜய1
ஒலப ஙிடிஊஅஜய1 ஒலப ஙிடிஊஅஜய1 ஒலப ஙிடிஊஅஜய1
ஒலப ஙிடிஊாத் தன்னை இந்திரியத்தின் வேறாவான்
காணவே தமது முதல் சீபாதத்தை யணையுமென்றது”
“ஊசல் கயிறற்றாற் றாய் தரையே யாந்துணையான்”[157]

ஊசலில் இருந்து விழுந்தவன், தரையை அடைய ஒரு முயற்சியும் செய்யாதது போலக் கருவிகளினின்று நீங்கியவனும், திருவருளையடைய ஒரு முயற்சியும் செய்ய வேண்டுவதில்லை. ஊசலில் ஏறி ஆடுபவன், தனக்கும் ஊசலுக்கும் நிலம் ஆதாரமாய் இருந்ததை அறியவில்லை; அதுபோல, கருவிக்கூட்டங்களில் அழுந்தியிருக்கும் ஆன்மாவும், தன் செயல்களுக்குத் தானே தலைவன் என்று கருதித், தனக்கும் தன் செயல்களுக்கும் ஆதாரமாய் உள்ள திருவருளை உணர்வதில்லை.

அளவுக்குமிஞ்சிய ஆற்றுநீரை அணைக்கட்டு தடுத்து நிறுத்தியிருப்பது போல, உயிரின் வியாபக அறிவைக் கருவிக்கூட்டம் தடைப்படுத்துகின்றது. இதனால் உயிரினது வியாபக அறிவு விளங்காமல், அக்கருவிகளின் அளவாகத் தடைப்பட்டுச் சிற்றறிவாய் - பாசஞானமாய் விளங்குகிறது.

நீர் தேங்கி இருக்கும் அணை உடைந்தால், அணையினுள்ளே தேங்கி நின்ற அவ் ஆற்றுநீர், அத்தடை நீங்கி விரைந்து சென்று, கடலில் கலந்து, கடல் நீராகவே ஆகிவிடும். அதுபோலக் கருவிக் கூட்டமாகிய தடை நீங்கியவுடன், உயிர் தனது சிற்றறிவு நீங்கி, தனது இயல்பான வியாபக அறிவைப் பெற்றுச் சிவனுடைய திருவருள் வியாபகத்துள் அடங்கிச் சிவமேயாய் நிற்கும்.

இக்கருத்தை உணர்த்தும் உதாரண வெண்பா:

*“சிறை செய்யநின்ற செழும்புனலின் உள்ளம்*
*சிறைசெய் புலனுணர்வில் தீர்ந்து - சிறைவிட்*
*டலைகடலிற் சென்றடங்கு மாறுபோல் மீளா*
*துலைவிலரன் பாதத்தை யுற்று”*[158]

திருவருள், என்றும் ஒரு தன்மைத்தாய் இருப்பதால், அதன் வயப்பட்ட ஆன்மாவுக்கு, அதனின்றும் மீட்சியில்லை.

ஆன்மா, தன்னை உணராதபொழுது, கருவிகளின் நீங்கினால், கேவலநிலையை அடையும்; தன்னை உணர்ந்த பின், கருவிகளின் நீங்கினால் சிவத்தையடையும்.

வளர்பிறைக் காலத்தில் நாள்தோறும், இரவில் மதியின் ஒளி படிப்படியாக வளர்ந்துவர, அதற்கேற்ப, இருள் படிப்படியாகக் குறைந்து கொண்டே வரும். இவ்விரு நிகழ்ச்சிகளும் ஒருங்கே நடப்பதைப் போல, மலபரிபாகமும், அருட்சத்தி விளங்கும் சத்திநிபாதமும் ஒரே காலத்தில் நடக்கின்றன.

இறைவனது திருவருள், வளர்பிறை மதிபோல, உயிரறிவைச் சிறிது சிறிதாக மேன்மேலும் விளக்கி வரும். உயிரின் அறிவை மறைத்த ஆணவமல சத்தி வளர்பிறைக் காலத்தின் இருள்போலத் தேய்ந்து வரும். உயிரிடத்து அருட்சத்தி விளங்கும் நிலை, 'சத்திநிபாதம்' எனப்படும். சத்திநிபாதமாவது, மலத்தின் பக்கமாய் நின்று, மறைத்தல் தொழிலைச் செய்துவந்த திரோதான சத்தி, அந்நிலை நீங்கி அருட்சத்தியாக மாறி உயிரில் சிறிது சிறிதாகப் பதிதல் ஆகும்.

சத்திநிபாதம் - **திருவருள்** வீழ்ச்சி. சத்தி - திருவருள்; நிபாதம் - வீழ்ச்சி. ஒரு கூட்டத்தில் ஒரு கல் வீழ்ந்தால் அங்குள்ளோர் அதிர்ச்சியடைந்து அவ்விடத்தை விட்டு அஞ்சி நீங்குவர். அதுபோலச் 'சத்திநிபாதம்' ஒருவர்க்கு நிகழுமானால் உலகச் சூழலில் நின்ற அவர்க்கு ஓர் அதிர்ச்சி உண்டாகும். அவர், பிறவித் துன்பத்துக்கு அஞ்சி, உலகச் சூழலிலிருந்து நீங்குதற்கு முயல்வர் என்பது கருத்து.

சத்தி நிபாதம் நிகழப் பெற்றால் உண்டாகும் மாற்றம் குறித்துத் தாயுமானவர் கூறுவது வருமாறு :

*"ஐந்துவகை யாகின்ற பூதபேதத்தினால்*
*ஆகின்ற ஆக்கை நீர்மேல்*
*அமர்கின்ற குமிழியென நிற்கின்றதென்ன நான்*
*அறியாத கால் மெல்லாம்*
*புந்தி மகிழுற உண்டு உடுத்து இன்பமாவதே*
*போந்த நெறி என்றிருந்தேன்;*
*பூராயமாக நினது அருள்வந்து உணர்த்த இவை*
*போன வழி தெரியவில்லை"*[159]

'சத்திநிபாதம்' எண்ணிறந்த வகையில் நிகழ்ந்து வளர்ந்து வருமாயினும் அதனைப் பொதுவாக நால்வகைப் படுத்துக் கூறுவர். அவை 'மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம்' என்பன.

சத்திநிபாதம் தொடக்கத்தில் மிக மந்தமாய் நிகழும். அந்நிலையே 'மந்ததரம்' என்பது. பின்பு ஓரளவு மந்தமாய் நிகழும், பின்பு தீவிரமாய் நிகழும். கடைசியில் முற்ற முதிர்ந்து, தீவிரதரமாய் முடியும். 'தீவிரதரம்' என்பது 'அதிதீவிரம்' என்றும் சொல்லப்படும்.

சத்திநிபாதத்தின் தன்மைக்கேற்ப உலகியலில் பற்று நீங்குதலும், சிவநெறியில் மனம் பற்றுதலும் படிமுறையில் உண்டாகும். சத்தி நிபாதம் மந்ததரமாய் நிகழும்போது உலகியல் நாட்டம் சிறிதே நீங்கச் சிவநெறியில் நாட்டம் சிறிதே உண்டாகிப் பின் படிப்படியே பெருகி வரும்.

சிவபெருமானது முதன்மையை உணர்ந்து அப்பெருமானுக்குப் பணி செய்தல் வேண்டும் என்னும் விருப்பம் சிறிதளவேனும் நிகழுமானால் அதுவே சத்தி நிபாதத்தின் அறிகுறியாகும்.

சத்திநிபாதத்தின் தன்மைக்கேற்பச் சிவவழிபாட்டில் விருப்பம் நிகழும்போது; அதற்கேற்ப, அவ்வழிபாடு "சரியை, கிரியை, யோகம்" என மூன்றாய் நிகழும். இவற்றுள் 'சரியை' என்பது, சிவபெருமானின் உருவத்திருமேனியை மட்டும் உணர்ந்து, அதனைப் புறத்தொழிலால் மட்டும் வழிபடுவதாகும். 'கிரியை' என்பது, சிவபெருமானின் அருவுருவத் திருமேனியாகிய சிவலிங்கத்தின் சிறப்புணர்ந்து, மனம் மொழி மெய்களால் அகத்திலும் புறத்திலும் வழிபடுவதாம். 'யோகம்' என்பது இறைவனது அருவத் திருமேனியை அகத்தொழிலால் மட்டும் வழிபடுதலாகும்.

இச் 'சரியை கிரியை யோகம்' எனும் தவத்தினைப் பொருள், புகழ் முதலான உலகப் பயன் கருதாமல், சிவபெருமானிடம் கொண்ட பத்தி ஒன்றே காரணமாகச் செய்து வந்தால் அத்தவ முதிர்ச்சியால் 'இருவினைஒப்பு' உண்டாகும்.

நல்வினையின் பயனாக வரும் இன்பத்தில் விருப்பும், தீவினையின் பயனாக வரும் துன்பத்தில் வெறுப்பும் கொள்ளாது, வேறுபாடின்றி, இரண்டையும் சமமாகக் கருதும் உணர்வே 'இருவினைஒப்பு' ஆகும். 'இருவினைஒப்பு' வரப் பெற்றோர் உலகியலில் இச்சையின்றி, ஓடும் செம்பொன்னும் ஒன்றன எண்ணுவர்.

இவ் இருவினைஒப்பு வரும் காலமே உயிருக்கு ஞானம் வரும் காலம்.

'ஆணவம், கன்மம், மாயை' எனும் இம் மூன்று மலங்களின் வாசனை அறுதல்பற்றி மெய்கண்டார் அருளும் நூற்பா வருமாறு :

*"அவனே தானே ஆகிய அந்நெறி*
*ஏக னாகி இறைபணி நிற்க*
*மலமாயை தன்னொடு வல்வினை யின்றே"*[160]

இதற்குப் பொ.முத்தையபிள்ளை தரும் பொழிப்புரையாவது :

*"ஞானக்கண்ணால் காணப்படும் அம்முதல்வன், பெத்த நிலையில் உயிரோடு உடனாய் நின்று, உயிர் அறியும் வண்ணம் தான் அறிந்தும், அவ்வுயிருக்கு*

*முதல்வன் இருக்கின்றானென வேறு காணப்படாமல் உயிர்தானே அறிந்ததாக எண்ணும்படி அவ்வுயிரோடு ஒற்றுமைப்பட்டு நின்றவாறு போல, முத்திநிலையில் உயிர் அம்முதல்வனோடு உடனாய் நின்று இன்பத்தை அனுபவித்தாலும், அனுபவிக்கின்ற தான் உண்டென வேறு காணப்படாமல், அம்முதல்வனோடு ஒற்றுமைப்பட்டு, அம்முதல்வனேயாய் அவன் அருள்வழியாகிய இறைபணியில் வழுவாது நிற்பின், ஆணவமலம், மாயாமலம் என்னும் இரண்டனோடு வலிய கன்மமலமும் இல்லையாயொழியும்."*[161]

உயிரானது, சிவானந்தத்தைத் துய்க்க வேண்டின், தன்னையும் தன் அறிவையும் மறந்து, தான் என்ற நினைப்பின்றிச் சிவமுதற்பொருளில் அழுந்திச் சிவம் ஒன்றையே அறிந்து நிற்றல் வேண்டும். ஆனால், அவ்வாறு செய்யவிடாமல் தடுப்பது ஆணவமலம். இவ் ஆணவமலத்தின் சத்தி, பெத்தகாலத்தில், வலுவாய் நின்று, உயிரையும் அதன் அறிவையும் சிவத்தினின்றும் வேறாகப் பிரித்து அதனைத் தனித்து நிற்கும் பொருளாக உணரும்படி செய்கிறது. முத்திக்காலத்தில் அதன் சத்தி மடங்கி நின்றாலும் வாசனை அளவில் நின்று, திரிபுடி ஞானத்தை நீங்காது நிற்கச் செய்கிறது.

எனவே, 'யான்' என்று தன்னையும், 'எனது' என்று தன் அறிவையும், அறியப்படும் பொருளாகிய முதல்வனையும் பகுத்துக் காணும் மயக்க உணர்வுக்குக் காரணமாகவுள்ள ஆணவ மலவாசனை நீங்க, உயிரானது, முதல்வனோடு ஏகனாகி நிற்றல் இன்றியமையாததாம்.

'யான்' என ஒன்றில்லை; எல்லாம் அவனே எனத் தற்போதம் இழந்து நிற்பவரை, அவ்வுயிர் வேறாய் இல்லை என்று சொல்லும்படி தனது திருவருள் வியாபகத்துள் அடக்கித் தானேயாய் மேம்பட்டு நிற்பான் என்ற பொருள்பட வருவது, பின்வரும் வெண்பா :

*"நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுளம் உண்டாதல்*
*தானென வொன்றின்றியே தானதுவாய் - நானெனவொன்*
*றில்லென்று தானே யெனுமவரைத் தன்னடிவைத்*
*தில்லென்று தானாம் இறை"*[162]

இது குறித்து ஆ.ஆனந்தராசன் தரும் விளக்கம் இங்குக் குறிக்கத்தகும் :

*"ஒருவன் இருளில் நிற்கின்றான். பொருள்களைக் காணமாட்டாது வருந்துகின்றான். அந்நிலையில் ஒளிதோன்றி எப்பொருளையும் அவன் காணுமாறு, அவற்றை அவனுக்குக் காட்டுகிறது. ஆயின்,*

அவ்வொளியினாலே தான் கண்டதாக எண்ணுவதில்லை. தானே கண்டு விட்டதாகக் கருதுகிறான். அவ்வாறு அவன் உணர்வது மயக்கவுணர்வு அல்லது திரிபுணர்வு ஆகும்.

"அதுபோல உயிர் மலத்துள் மறைந்து தனது அறிவு செயல்களை இழந்து நிற்கிறது. அவ்வுயிருக்குத் திருவருளே உடனிருந்து என்றும் அறிவித்தும் செய்வித்தும் வருகிறது. ஆயினும் அதனை உணராமல் அவ்வுயிர் தானே அறிந்தும் செய்தும் வருவதாகக் கருதுகிறது. பெத்தநிலையில் 'யானே உலகத்தை அறிகிறேன்' என்று எண்ணுகிறது. முத்தி நிலையில் 'யான் சிவத்தை உணர்கிறேன்' என்று எண்ணுகிறது. பெத்த நிலையில் அவ்வாறு எண்ணுவது ஆணவ மலத்தினால் ஆகும். முத்தி நிலையில் அவ்வாறு எண்ணுவது ஆணவமல வாசனையினால் ஆகும்"[163]

இந்நூற்பாவில், 'இறைபணி நிற்க' என மெய்கண்டார் கூறுவது எண்ணத்தக்கது.

'அனைத்தும் திருவருளின் செயல்' என்று உணர்பவர், இறைவனிடத்தில் எதனையும் வேண்டார். அளப்பரிய அருளுடைய முதல்வன், உயிர்களோடு என்றும் எக்காலத்தும் நீங்காது உடனாய் நிற்றலின் அவன்பால் வேண்டுவது ஒன்றும் வேண்டா.

"வேண்டத்தக்கது அறிவோய் நீ
வேண்ட முழுதும் தருவோய் நீ
வேண்டும் அயன்மாற்கு அரியோய் நீ
வேண்டி என்னைப் பணி கொண்டாய்
யானும் அதுவே வேண்டினல்லால்
வேண்டும் பரிசொன்று உண்டென்னில்
அதுவும் உன்றன் விருப்பன்றே"[164]

என்பது, அவ்வாறு நின்று அருளிய திருமொழியாகும்.

முதல்வனது திருவருளில் சிறிதும் நீங்காது நிற்கும் பெரியோர் வீடுபேற்றினையும் வேண்டார் என்பதனை,

"கண்ணார் நுதலோய் கழலிணைகள்
கண்டேன் கண்கள் களிகூர
எண்ணாது இரவும் பகலும் நான்
அவையே எண்ணும் அதுவல்லால்
மண்மேல் யாக்கை விடுமாறும்
வந்துன் கழற்கே புகுமாறும்

*அண்ணா எண்ணக் கடவேனா*
*அடிமை சால அழகுடைத்தே*"[165]

என்பதால் அறியலாம்.

இவ்வாறு, முதல்வனை முன் நிறுத்தி, நாம் அவன்பின் நிற்றலையே அதாவது, அருள்வழியில் நிற்றலையே 'இறைபணி நிற்றல்' என்றார் மெய்கண்டார்.

திருவருளில் அழுந்தி இருக்கும் சான்றோர், தமக்கென விருப்பு வெறுப்பின்றி அருள்வழியில் நடப்பர்; எனவே 'பிராரத்த வினை' அவரைத் தாக்காது. பிராரத்தவினை தாக்குவது என்பது, இன்ப துன்பங்களில் உயிருணர்வை அழுந்தச் செய்தல். 'நான்' எனும் தன்முனைப்போடு விருப்பும் வெறுப்பும் கொண்டு நுகரும்போதே அவற்றில் அழுந்தும் நிலை உண்டாகும். அவ்வாறின்றித் திருவருள் வழி நிற்போர், தம்மையிழந்து எப்பொழுதும் திருவருளில் அழுந்தி நிற்பர். ஆதலின் அவர் இன்பதுன்பங்களை நுகர்ந்தாலும் அவற்றில் அழுந்தி நிற்கமாட்டார்.

உயிரானது இவ்வாறு அருள்வழி நிற்பதால், இப்பிறப்பிற்கென்று, முகந்து வந்த பிராரத்தவினை தாக்காமல் நீங்கும். பிராரத்தத்தை அவற்றில் அழுந்தாமல், விருப்பு வெறுப்பின்றி நுகர்வதால், புதிய ஆகாமிய வினையும் ஏறமாட்டாது. எனவே, **அருள்வழியில்** நிற்பவர்க்குக் 'கன்மமலம்' நீங்கும் என்பது புலனாகும்.

இப் பிராரத்த வினைக்குச் சார்பாக உள்ளது மாயா காரியமாகிய உலகியல் ஆகும். **திருவருளில்** அழுந்தி நிற்போர், எந்த ஒரு நிலையிலும் அத்திருவருள் உணர்வினின்றும் நீங்காதிருப்பதால், 'பிராரத்தவினை' தாக்காது ஒழியும் என்பது மேலே கூறப்பட்டது; அவ்வாறு ஒழியவே அவரது உணர்வில் உலகியல் தோன்றாது. இதனால் அருள்வழி நிற்பவர்க்கு, **'மாயாமலம்'** நீங்கும் என்பது தெளிவு.

இவற்றை உட்கொண்டே,

*"அவனருளா லல்லது ஒன்றையுஞ் செய்யானாகவே*
*அஞ்ஞான கன்மம் பிரவேசியாவாகலான்"*[166]

என்று அருள்வாராயினர் மெய்கண்டார்.

இவண், திருநாவுக்கரசர் தம் அருள்வாழ்வில் நிகழ்ந்த அற்புத நிகழ்ச்சி ஒன்றைச் சுட்டுதல் பொருந்தும்.

நாவரசர், திருப்புகலூரில் உழவாரப்பணி செய்து வந்த நாளில், அவரது பற்றற்ற தன்மையை உலகுக்கு உணர்த்த விரும்பிய இறைவன், கற்களோடு, பொன்னும் நவமணியும் கலந்து இருக்கச் செய்தான். நாவரசரது மனத்தில், அவற்றைக் கண்டதனால் எவ்வித வேறுபாடும்

தோன்றவில்லை; பொன்னும் நவமணிகளும், கற்களும் அவருக்கு ஒரே மாதிரியாகவே தோன்றின. உழவாரப்படையால் அவற்றையள்ளி அருகிலுள்ள குளத்தினுள் எறிந்தார்.

ஓடும் செம்பொன்னும் ஒக்க நோக்கிய நாவரசர் முன், அரம்பையர் தோன்றி ஆடல் பாடல் பாடி மயக்கினர். அவரோ, தம் நிலையில் திரியாது நின்று, அந்த அரமகளிரைப் பார்த்து, "திருவாரூர் அம்மானுக்கு ஆளானேன்; நீங்கள் வீணே அலைத்தல் வேண்டா" என்று கூறிப் "பொய்ம்மாயப் பெருங்கடலில்"[167] என்ற திருத்தாண்டகத்தை அருளிச் செய்தார்.

சிவனடியார்களுக்கு மலவாசனை தாக்குமிடத்து, அதனினின்றும் நீங்கும் பொருட்டுத் தோன்றிய அற்புதத் திருப்பதிகமாகும் இது.

தன்னிடத்தில் பொருந்திய சக்கரங்களை வேறுவழியில் செல்லவிடாது காக்கும் அச்சுப்போல, தன்னைச் சார்ந்தவரைப் பிறழவிடாது காக்கும் சிவபெருமானது உண்மைத் தொண்டரான நாவரசரின் நிலையைப் பின்வரும் பெரியபுராணப் பாடல் விளக்கும் :

> *"இத்தன்மை அரம்பையர்கள் எவ்விதமும் செயல்புரிய*
> *அத்தனார் திருவடிக்கீழ் நினைவகலா அன்புருகும்*
> *மெய்த்தன்மை உணர்வுடைய விழுத்தவத்து மேலோர்தம்*
> *சித்தநிலை திரியாது செய்பணியின் தலைநின்றார்"*[168]

> *"அத்தனார் திருவடிக்கீழ் நினைவகலா - இறைவ னிடத்து ஏகனாகி நின்ற*
>
> *நிலை*
>
> *சித்தநிலை திரியாது செய்பணியின் தலைநின்றார் - இறைபணியில் நின்ற*
>
> *திறம்*
>
> *விழுத்தவத்து மேலோர் - விருப்புவெறுப்பின்றிக் காண்பவற்றையெல்லாம் சிவமாகக் காணுதல்"*[169]

## சிவப்பேறும் திருவருளும்

சிவப்பேறு, அல்லது முத்திநிலை குறித்து ந. சுப்புரெட்டியார் கூறும் விளக்கம் இங்குக் குறிப்பிடத்தக்கது :

> *"சாதனங்களால் அடையும் பயன்கள் இரண்டு: ஒன்று 'பாசநீக்கம்'; மற்றொன்று 'சிவப்பேறு'. அதாவது, சித்தாந்த சைவ முத்தியை அடைதல். உயிர்கள் அடையவேண்டிய முடிந்த பயன் 'வீடுபேறு'; இதுவே சிவப்பேறு; முத்தி என்று வழங்கப் பெறுவதும்*

இதுவேயாகும். வீடுபேற்றிற்கு நேரே சாதனமாயிருப்பது 'ஞானம்' - இந்த ஞானத்திற்குச் சாதனங்களாக உள்ளவை 'சரியை, கிரியை, யோகம்' என்புவை . . .

"உயிர் வகைகள் வாழ்வு என்னும் பெரும்பயணம் போய்க் கொண்டிருக்கின்றன. அப்பயன், இறைவனை அடையும்பொழுது பூர்த்தியாகின்றது. இறைவனை அடைதலும் முத்தியடைதலும் உயிர்கட்கும் இயற்கைக்கும் முதற் காரணமாய் இருப்பவன் இறைவன் . . .

"வாழ்வின் மேலான நோக்கம் 'வீடுபேறு' பெறுவது. அலையும் மனம் அங்குமிங்கும் உழன்று உலகின் சுகதுக்கங்களையெல்லாம் துய்த்து, மயக்கம் நீங்கித் தான் செய்த தவறுகளுக்கும் குற்றங்களுக்கும் மனம் நொந்து வருந்தித் தான் செய்தவற்றை நிவர்த்திக்க முயன்று இறுதியில் சாந்தம் அல்லது அமைதிபெற 'உண்மையான வீடு' நோக்கி வருகின்றது.... ஆன்மா இவ்வுடலை ஊர்தியாகக் கொண்டு, வாழ்க்கைப் பயணத்தை முடித்துக் கொண்டு, 'சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகிய அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டை' அடைய முயல்கின்றது. இந்த 'வீடு' அமைதியானது. எல்லையில்லாத பேரின்பம் அளிப்பது. ஆகவே எதிர்மறையான 'மலம்' நீங்குதலை நோக்கமாகக் கருதாது பேரின்பமடைந்து எப்பொழுதும் அந்நிலையில் நீடிப்பதையே நோக்கமாக்க் கொள்ளுகின்றது சித்தாந்தம். அதன் பின்னர் அந்நிலையினின்றும் மாறுவதே இல்லை. சிவலோகத்தை அடைதலையே குறிக்கோளாகக் கருதுகின்றான் சித்தாந்தி.'[170]

வ.ஆ.தேவசேனாபதி,

"சித்தாந்திகள் மும்மலங்களும் நீங்கப் பெற்றுச் சிவனடியைச் சேர்வதையே 'முத்தி' என்பர்"[171]

என்கின்றார்.

சைவசித்தாந்தம் கூறும் அடிப்படையான - முதன்மையான கொள்கை 'அத்துவிதம்' என்பது முன்னரே கூறப்பட்டது. 'முத்திநிலை'யில் இதுகுறித்து ஒரு விளக்கத்தை அளிக்கின்றார் முரு.பழ.இரத்தினம் செட்டியார். அது வருமாறு :

"நாம் ஒன்றில் அதிக ஈடுபாடு கொண்டு உறைத்து நின்றால் நம்மை நாம் மறந்து விடுவோம். 'முத்தி' நிலையிலும் இப்படித் தான் நிகழ்கின்றது.

அந்நிலையிலும் இறைவன், 'ஒன்றாகவும், வேறாகவும், உடனாகவும்' இருக்கின்றான். அவனுடன் நாம் முழுமையாகக் கலப்பதால்தான் பேரின்பம் குறைவுபடாது கிடைக்கின்றது. அவன் வேறாக நிற்பதால் பேரின்பத்தை அவன் நமக்கு ஊட்ட முடிகின்றது; அவன் உடனாக நிற்பதால் அந்தப் பேரின்பத்தை நாம் அனுபவிக்கின்றோம். இஃது சைவசித்தாந்தம் சொல்லும் முத்தி நிலையாகும்."[172]

ஞானம் பெற்ற உயிர், சிவத்தோடு அத்துவிதமாய்க் கலந்து சிவனது பேரின்பத்தில் திளைத்து, இன்புற்றிருத்தலே சித்தாந்த சைவம் கூறும் 'முத்தி' ஆகும்.

முத்தியில் சிவமும் உயிரும் ஆகிய இருபொருள்களும் கலப்பினால் ஒன்றாக இருக்கின்றன. ஒரு தன்மைப்பட்டு ஒற்றுமைப்பட்டு இருக்கின்றன. உயிர், தான் ஒரு பொருள் உண்டு என்பதையே உணராமல், சிவத்தையே உணர்ந்து சிவத்தினுள் அடங்கியிருக்கிறது. உயிரின் சார்ந்ததன் வண்ணமாகும் தன்மைக்கேற்பப் பெத்தநிலையில் (சகலநிலை) மாயையில் அழுந்தி நின்றதுபோலவே, முத்திநிலையில் சிவத்தில் அழுந்திநிற்கும்; சிவமும் உயிரும் ஒன்றாக இயைந்திருந்தாலும், உயிரின் தன்மை வெளித்தோன்றாமல், சிவத்தினுள் அடங்கி விடுகிறது.[173]

முத்தியில் உயிரும் சிவமும் ஆகிய இருமுதல்களும் உண்மையில் உள்ளன. ஆயின், பிரிந்து வேறுநில்லாது ஒருபொருள் போல நிற்கும்; கலப்பினால் ஒன்றாய் நிற்கும். அக்கலப்பே 'அத்துவிதம்' எனப்படும். அந்நிலையில் உயிரானது 'தான்' என வேறுதோன்றாது நிற்கச் சிவமாகிய ஒரு பொருளே உள்ளது போலத் தோன்றும்.

உயிரானது சிவத்தோடு ஒன்றாய் நிற்றற்கு உவமையாக உப்பானது நீரில் கலந்து அந்நீரோடு ஒன்றாய் இருத்தலைக் காட்டுவது உண்டு. இக்கருத்துப்பட வரும் உதாரண வெண்பா வருமாறு :

"நசித்தொன்றின் உள்ளம், நசித்தலால் ஒன்றா
நசித்தலதேல் ஒன்றாவ தில்லை - நசித்துமலம்
அப்பணைந்த உப்பின் உளமணைந்து சேடமாங்
கப்பின்றாம் ஈசன் கழல்"[174]

(1) உப்பும் நீரும் தம்முள் இயைந்து ஒன்றாதற்குரிய இருபொருள்கள். அவைபோல் உயிரும் சிவமும் உள்ளன.

(2)நீரைச் சேர்ந்த உப்புத் தான் கெடாது தனது கடினத் தன்மை மட்டும் நீங்கி அந்நீரோடு ஒன்றாகிறது. அதுபோல, உயிர் தான் கெடாது,

தன்னைப் பற்றியுள்ள ஆணவ மலம் மட்டுமே கெட, அதனால் வியாபக அறிவைப் பெற்றுச் சிவத்தோடு ஒன்றாய் நிற்கும்.

(3) நீரில் கலந்த உப்புக் கண்ணுக்குப் புலனாகாது நீராகிய ஒரு பொருளே உள்ளது போலத் தோன்றும். அதுபோல் உயிர் சிவத்தில் அழுந்தி வேறு காணப்படாது நிற்கச் சிவம் ஒன்றே உள்ளது போலத் தோன்றும்.

(4) உப்பும் நீரும் இயைந்துள்ள நிலையில் அதனை ஒன்று என்பதா? இரண்டு என்பதா? ஒன்று என்றும் கூறமுடியாது; இரண்டு என்றும் கூறமுடியாது. அதுபோல உயிரும், சிவமும் இயைந்த அத்துவித முத்திநிலை ஒன்றென்றோ, இரண்டென்றோ கூற இயலாத நிலையாகும்.[175]

எனவே, உயிரானது, முத்திநிலையில், ஆணவமலத்தால் சிவத்திற்கு வேறாய் நின்ற நிலை நீங்கிச் சிவத்தோடு ஒன்றாய் அணைந்து அதன்கண் அடங்கி நிற்கும். அங்ஙனம் அடங்கியபின் அதற்குப் பிரிதல் இல்லை.

முத்தியில் இருபொருட்கள் இரண்டு எனாதபடி, ஒரு தன்மைப்பட்டு இயைந்து இருக்கின்றன. ஆணவம், தன் தன்மைகெட்டு வறுத்த வித்துப்போல் இருக்கிறது. இதனால் உயிருக்கு முத்திநிலையில் பேரின்பம் நுகரத் தடை இல்லை.

உடம்போடு கூடியுள்ளபோதே இவ்வாறு சிவத்தோடு ஒன்றி, அதில் அழுந்தி நிற்கலாம். அதற்கு 'நிட்டைநிலை' என்று பெயர். அந்நிலை பெற்றுப் பேரின்பவெள்ளத்தில் திளைக்கலாம். எனவே, 'முத்தி' என்பது இங்கேயே, இப்பொழுதே பெறுதற்குரியது என்பது விளங்கும்.

முத்திநிலையை, இவ்வுலகில், இவ்வுடம்போடு கூடியுள்ளபோதே பெற்றிருப்பவரைச் 'சீவன்முத்தர்' எனலாம். தமிழில் 'அணைந்தோர்' எனப்படுவர். அவர் உலகநினைவு இன்றிச் சிவத்தில் அழுந்திச் சிவானந்தத்தில் திளைத்திருப்பர். அவர்களது அறிவும் இச்சையும் செயலும் இறைவனிடத்திலேயே அழுந்தியிருக்கும். அவை, உலகமுகப்பட்டுப் புறத்தே செல்லநேரின், அன்னார், திருக்கோயிலுக்குச் சென்று இறைவனை வணங்குவர். மெய்யடியார்களோடு சேர்ந்து இறைவன் புகழ்பாடி இன்புறுவர். இதனை உணர்த்துவது சிவஞானபோத இறுதி நூற்பா:

*"செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா*
*அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ*
*மாலற நேயமும் மலிந்தவர் வேடமும்*
*ஆலயந் தானும் அரனெனத் தொழுமே"*[176]

இதற்குரிய பொழிப்புரை வருமாறு :

*"அயரா அன்பின் அரன்கழல் அணைந்தமுத்தன். வினைப்பயனை அனுபவிக்கப் புறத்துச் செல்லுங்கால், சீவன் முத்தனெனப்படுவன். அச் சீவன்முத்தன், புறத்துச் செல்லுங்கால் செங்கமல மலர்போல விரிந்து விளங்கிய முதல்வனுடைய பொறுக்குந் திருவடியை அணையவொட்டாது அத்திருவடியை மறக்கும்படி மும்மலங்களும் செய்விக்கும். ஆதலால், அவ்வாறு மறக்கும்படி செய்விப்பதை இயல்பாகவுடைய அம் மும்மலங்கள் என்னும் அழுக்கை 'ஞானம்' என்னும் நீரினுள் கழுவி, அவ்வாறு கழுவுதலால்... அயரா அன்பு செய்யும் மெய்ஞ்ஞானிகளோடு கலந்து கூடி மலத்தினாலுண்டாகும் மயக்கம் நீங்குதலால், இடைவிடாத அன்பினையுடைய அம்மெய்ஞ்ஞானிகளுடைய திருவேடமாகிய விபூதி, உருத்திராக்கங்களையும் சிவாலயத்தையும் முதல்வன் எனவே கண்டு வழிபட்டு வாழ்வன்."*[177]

மெய்கண்டார்,

*"ஈண்டு ஆணவ மாயை கான்மியமென்னும் மலங்களைக் களைக என்றது"*

*"அவைதாம் ஞானத்தையுணர்த்தாது அஞ்ஞானத்தை யுணர்த்துமாகலான்"*[178]

என மேலும் கூறுவர்.

நிட்டை கூடிய நிலையிலும் 'ஆணவம் மாயை கன்மம்' என்பன வலியடங்கி மடங்கி நிற்குமே தவிர, முற்றிலும் கெட்டு ஒழிவதில்லை. எனவே அவை, ஒரோ ஒருகால் எவ்வாற்றானும் நிட்டைகூடிய சீவன் முத்தரிடத்தில் வந்து நுழையவும் கூடும்; எனவே, சீவன்முத்தர் அவை நுழையாதபடி களைதல் வேண்டும் என்பது கருத்து.

ஆமையானது, நீரிலிருந்து நிலத்தில் நடக்கும் பொழுது, தனக்குத் தீங்கு வருவதாக உணர்ந்தால், உடனே அக்கணமே நான்கு கால்களும் தலையுமாகிய ஐந்து உறுப்புக்களையும் விரைந்து ஓட்டினுள் சுருக்கிக் கொள்ளும். அதுபோலச் சீவன்முத்தர், உலகில் வாழும் காலத்து, மும்மலவாசனை தாக்குவதாக உணர்ந்தால், சிவஞானத்துள்ளே ஒடுங்கி நிற்றல் வேண்டும். அங்ஙனம் நிற்றலே, மும்மலங்களை விட்டொழிக்கும் முறையாகும்.

இவ்வாறு, மும்மலவாசனை மீண்டும் தாக்காதவாறு பாதுகாக்கச் சீவன் முத்தர்கள், தம்மை ஒத்த சிவபத்தர்களோடு என்றும் இணைந்திருத்தல் வேண்டும் என ஒரு வழியையும் கூறுகின்றார் மெய்கண்டார்.

*"இனிச் சிவபத்தர்களோடிணங்குக"*[179]

என்பது அவர் திருவாக்கு.

சிவபத்தர்கள், ஞானக்கண்ணை என்றும் நன்கு விளங்கச் செய்வர்; பிறவிக் குழியினின்றும் விலக்கித் திருவருள் வழியில் செலுத்துவர். சிவன் எனவே காணப்படும் சிவபத்தரது திருவேடத்தையும் திருக்கோயிலையும் சிவனது திருவுரு என்றே கண்டு வழிபடுவர்.

*"பத்தரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும்*
*பரமேசுரனெனக்கண்டு வழிபடுக"*[180]

என்பது மெய்கண்டார் வாக்கு.

பத்தர் திருவேடம் எவ்வாறிருக்கும் என்பதைச் சேக்கிழார் கூறும் திருநாவுக்கரசரது திருவேடப் பொலிவு பற்றிய பாடலால் அறியலாம் :

*"தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமும்*
*நாயகன் சேவடி தைவருந் சிந்தையும் நைந்துருகிப்*
*பாய்வது போல்அன்பு நீர்பொழி கண்ணும் பதிகச்*
*செஞ்சொல்*
*மேயசெவ் வாயும் உடையார் புகுந்தனர் வீதி யுள்ளே"*[181]

மெய்கண்டார், தம் சிவஞானபோதத்தில் ஆங்காங்குக் குறிப்பிடும் இத் 'திருவருள்' குறித்த செய்திகள், முன்பே திருமுறைகளிலும், பின்னர்ச் சாத்திர நூல்களிலும் நிறைய இடம் பெற்றுள்ளன. இவ் இயலிலும் ஆங்காங்கு ஒருசில சுட்டப்பட்டுள்ளன. எனினும் மேலும் சில தருதல் பொருந்தும் என்பதால் இவண் தரப்படுகின்றன.

இவ்விடத்தில், 'திருமுறைகள்' குறித்து வை.இரத்தின சபாபதி கூறுவது எண்ணத்தகும் :

*"அருளாளர்களைத் தோற்றுவித்து, அவர்களை உள்நின்று இயக்கி, திருநெறியதமிழ் வெளிப்படக் காரணமாயிருந்த இறைவனே, தன்னையும் ஒரு அருளாளனாகத் தோற்றுவித்துக் கொண்டு, அவன் அருளிய பாடலும் திருநெறிய தமிழ்த் தொகுப்பினுள் ஒன்றாக விளங்குகிறது. திருநெறிய தமிழை அருளிய அருளாளர்கள் இருப்பத்தெழுவர். அவர்களுள் ஒருவர், பதினோராந் திருமுறையின் முதற்பாட்டுக்கு உரியவராகிய திருவாலவாயுடையார். 'சங்கமிருந்து தமிழாய்ந்தான்' என்று கூறுவது போலவே இருபத்தாறு அருளாளர்களுக்குரிய பேரின்ப அனுபவப் பொருளாக இருந்து, திருநெறியதமிழை*

*வெளிப்படுத்திய அப்பரம்பொருளே தாமே முற்பட்டுத் தோன்றி, அருளாளர்களுள் ஒருவராகித் தம்மைத் தோற்றுவித்துக் கொண்டு, திருவருளமுதத்தை வழங்கியருள, அதனையும் ஏனைய அருளாளர்களின் அமுதமொழிகளோடு ஒப்புவைத்து ஏற்றுநிற்கும் பெருமையுடையது திருநெறியதமிழ்."*[182]

**எனவே, திருமுறை வாணர்கள் பாடிய அனைத்துமே இறைவனின் திருவருளால் தாம் என்பது விளங்கும். அவற்றுள், ஒருசில, திருவருளோடு நேரடித் தொடர்புடையன எனில் மிகையன்று :**

**சம்பந்தர், தம் முதற்பாடலிலேயே, சிவபெருமானின் திருவருளைக் குறிப்பிடுகின்றார் :**

*"தோடுடைய செவியன்"*

**பாடலில்,**

*"அருள்செய்த*
*பீடுடைய பிரமா புரமேவிய பெம்மா னிவனன்றே"*[183]

**என்பர்.**

**அவ்வாறே, நாவரசரும், தம் முதற்பதிகத்தில்,**

*"பணிந்தாரன பாவங்கள் பாற்றவல்லீர்"*

**என இறைவனின் திருவருட் செயலைக் குறிப்பிடுகின்றார்.**

*"சிந்திப் பரியன சிந்திப் பவர்க்குச் சிறந்து செந்தேன்*
*முந்திப் பொழிவன முத்தி கொடுப்பன மொய்த்திருண்டு*
*பந்தித்துநின்ற பழவினை தீர்ப்பன பாம்பு சுற்றி*
*அந்திப் பிறையணிந்தாடும் ஐயாறன் அடித்தலமே"*[184]

**என இறைவனின் திருவருட் சிறப்பை ஏத்துகின்றார் நாவரசர்.**

*சுந்தரமூர்த்தி சுவாமிகளும் தம் முதற் பாட்டிலேயே,*
*"பித்தா பிறைசூடீ பெருமானே அருளாளா"*[185]

**என்று பாடுவதும் இங்கு நோக்கத்தகும்.**

**திருவாசகத்தில் தொட்ட இடமெல்லாம் சிவபெருமானின் திருவருட்டிறமே காணப்படுவது. இந்நூலில், 'அருட்பத்து' எனும் ஒருபகுதியே உண்டு.**

*"முத்தனே முதல்வா முக்கணா முனிவா*
*மொட்டறா மலர்பறித் திறைஞ்சிப்*
*பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்*
*பரகதி கொடுத்தருள் செய்யும்*

*சித்தனே செல்வத் திருப்பெருந் துறையில்*
*செழுமலர்க் குருந்தமே வியசீர்*
*அத்தனே அடியேன் ஆதரித் தழைத்தால்*
*அதெந்துவே என்றரு ளாயே*"[186]

என்பது அவற்றுள் ஒன்று.

"..........*திருவருளாலே இருக்கப் பெறின் இறைவா*
*உள்ளேன் பிறதெய்வம் உன்னையல்லா தெங்கள்*
*உத்தமனே*"[187]

என்பதும் மணிவாசகர் திருவாக்கே.

திருக்கோவையாரில், '**அருட்குணம் உரைத்தல்**' எனும் துறை ஒன்று உண்டு.

"*கூட்டிய தெய்வத் தின்அருட் குணம்*
*வாட்டம் இன்மை வள்ளல் உரைத்தது*"[188]

என்பது அதன்கண் வரும் 'கொளு'.

திருமாளிகைத்தேவர் அருளிய திருவிசைப்பாவில்,

"*இடர்கெடுத்து என்னை ஆண்டுகொண்டு என்னுள்*
*இருட்பிழம்பு அறஎறிந்து எழுந்த*
*சுடர்மணி விளக்கின் உள்ளொளி விளங்கும்*
*தூயநற் சோதியுள் சோதீ!*"[189]

என்றும்;

கருவூர்த்தேவர் அருளிய திருவிசைப்பாவில்,

"*இவ்வரும் பிறவிப் பௌவநீர் நீந்தும்*
*ஏழையேற்கு என்னுடன் பிறந்த*
*ஐவரும் பகையே, 'யாந்துணை?' என்றால்*
*'அஞ்சல்'என்று அருள்செய்வான் கோயில்?*"[190]

என்றும் வருவன, இறைவனின் திருவருளைக் குறிப்பன.

"*அடியார்கள் வணங்கும் தேவதேவனை, என்னுடைய தலையால் வணங்கி, அப்பெருமானை நினைந்து, பூமியில் உள்ளவர்கட்கு அருளும் மேலானவனாகிய எந்தையை 'அணையாத விளக்கு' என்று எண்ணிப் பொருந்தியிருந்தேன்*"

என்னும் பொருள்படத் திருமூலர் அருளும் திருமந்திரம் இது :

*“அடியார் பரவும் அமரர் பிரானை*
*முடியால் வணங்கி முதல்வனை முன்னிப்*
*படியார் அருளும் பரம்பரன் எந்தை*
*விடியா விளக்கென்று மேவிநின் றேனே”*[191]

‘திருஆலவாயுடையார்’ முதல் ‘நம்பியாண்டார்நம்பி’ ஈறாகப் பன்னிருவர் அருளியது ‘பதினோராம் திருமுறை’. அவற்றுள் திருவருளைப் பற்றிய பாக்கள் பலவாக உள்ளன. இங்கே சில சான்றுகள் காட்டலாம்.

‘எல்லாம் திருவருளே’ எனும் பொருள்பட அமைவது காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதிப் பாடல்:

*“அருளே உலகெலாம் ஆள்விப்பது ஈசன்*
*அருளே பிறப்பறுப்ப தானால் - அருளாலே*
*மெய்ப்பொருள் நோக்கும் விதியுடையேன்; எஞ்ஞான்றும்*
*எப்பொருளும் ஆவது எனக்கு”*[192]

சேரமான் பெருமாள் நாயனார்,

*“.........திருந்திய போதவன் தானே*
*களையும் நம் தீவினையே”*[193]

என்றுரைப்பது இறைவனின் அருள் உள்ளத்தைச் சுட்டுவதாகும்.

பட்டினத்தடிகள், தம் ‘திருக்கழுமல மும்மணிக்கோவை’யில்,

*“அருள்நனி சுரக்கும் பிரளய விடங்க!நின்*
*செல்வச் சிலம்பு மெல்லென மிழற்ற*
*அமையாக் காட்சி இமையக்*
*கொழுந்தையும் உடனே கொண்டிங்கு*
*எழுந்தரு ளத்தகும் எம்பெரு மானே!”*[194]

என ஏத்துவது எண்ணத்தக்கது.

தெய்வச் சேக்கிழாருக்குத் தில்லை நடராசப் பெருமானே ‘உலகெலாம்’ என அடியெடுத்துக் கொடுத்த அருட்டன்மையை அனைவரும் அறிவர். திருத்தொண்டர் புராணத்தைத் ‘திருவருள் இலக்கியம்’ என்றே க.வெள்ளைவாரணனார் போற்றுவர் :

*“திருவருள் இலக்கியமாகிய இக்காப்பியம் (திருத்தொண்டர் புராணம்) பிற்காலத்தில் மெய்கண்டார் முதலிய அருளாசிரியர்களால் இயற்றப் பெற்ற சிவஞானபோதம் முதலிய சைவசித்தாந்த சாத்திர நூல்களுக்கு ஆதாரமாகிய மெய்யுணர்வுக் கருத்துக்கள் பலவற்றைத் தன்பால் கொண்டுள்ளமை இங்குச் சிறப்பாகக் குறிப்பிடத்தகுவதாகும்”*[195]

என்பது அவர் கூற்று.

வினைகளைச் செய்கின்ற **உயிர்களும்**; அவ்வுயிர்களாற் செய்யப்படும் நன்றும் தீதுமாகிய **வினைகளும்**; அவ்வினை காரணமாக உயிர்கள் நுகர்தற்குரிய இன்ப துன்பங்களாகிய **வினைப் பயன்களும்**; அப்பயன்களை வினைசெய்த உயிர்களே நுகரும்படி நியமித்து, உலகினை இயக்கும் முதல்வனாகிய **இறைவனும்**; எனச் சைவ சமயச் சான்றோர்களால் ஆராய்ந்து நிச்சயிக்கப்பட்ட பொருள்கள் நான்காகும். இத்தகைய பொருட் பாகுபாடு சைவ சமயத்திலன்றிப் பிற சமயங்கள் எவற்றிலும் காணப்படாத சிறப்புடைய தத்துவ உண்மையாகும் என்பதனைப் புத்தசமயத்தினை மேற்கொண்டு ஒழுகிய சாக்கிய நாயனார் **இறைவனது திருவருளாலே** உள்ளவாறு உணரப் பெற்றார் எனச் சேக்கிழார் கூறுவது கொண்டு உணரலாம்.[196]

இவ்வருஞ் செய்தியினைச் சேக்கிழார்,

*"செய்வினையுஞ் செய்வானும் அதன்பயனும் சேர்ப்பானும்*
*மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள்*
*எனக்கொண்டே*
*இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக்கு இல்லைஎன*
*உய்வகையாற் பொருள்சிவன்என் றருளாலே*
*உணர்ந்திருந்தார்"*[197]

எனவரும் பாடல் மூலம் அறிவுறுத்தியுள்ளமை இவண் குறிக்கத்தகும்.

இவ்வாறு சைவத் திருமுறைகள் அனைத்திலுமே 'திருவருளை'ப் பற்றிய செய்திகளைப் பரக்கக் காணலாம்.

சிவஞானபோதத்திற்கு முற்பட்ட நூல்களாகிய திருவுந்தியாரிலும், திருக்களிற்றுப்படியாரிலும் இத்திருவருள் குறித்த பாடல்கள் உண்டு.

*"மருளுந் தெருளும் மறக்கும் அவர்கண்*
*அருளை மறவாதே யுந்தீபற*
*அதுவேயிங் குள்ளதென் றுந்தீபற"*[198]

*"ஆணவ மூலமலம் அகல ஆண்டான்காண்"*
*"பாகத்து அருள் வடிவுந் தானுமாய்"*[199]

என்பன சான்றுகள்.

இவ்வாறே பிறசாத்திர நூல்களிலும், இத் 'திருவருள்' விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது. அவை, பின்னர் வரும் இயல்களிலும் இடம்பெறும்.

**முடிவுரை:**

இவ் இயல் வாயிலாக அறியத்தகும் முடிபுகளாவன :

1. மெய்கண்டார், தம் நூலில் 'அருள்' என்ற சொல்தவிரச் "சத்தி, ஆணை, கழல், பாதம், சீபாதம், அடி, தாள்" முதலான சொற்களையும் எடுத்தாள்வதன் மூலம், முதல்வனாம் சிவபெருமானின் திருவருட்டிறத்தை விதந்து ஓதுகின்றார் எனலாம்.

2. சைவசித்தாந்தத்தின் உயிர்நாடியாக விளங்கும், 'அத்துவித'க் கொள்கை, உயிர்களோடு முதல்வனின் திருவருள் பிரிப்பின்றி நிற்றலை உணர்த்தும்.

3. இவ் 'அத்துவிதத்'தைத் திருமுறைவாணர்கள், முன்பே எடுத்துமொழிந்துள்ளனர்.

4. 'அத்துவிதம்' என்ற சொல்லுக்கு உண்மைப் பொருள்கண்டு உலகுக்கு உணர்த்திய அருளாளர், மெய்கண்டதேவர்.

5. முதல்வனது 'காட்டும் உபகாரத்'தால் உயிரறிவு, பொருளையறியும் தகுதியைப் பெறுகின்றது; அவ்வாறு தகுதிபெற்றாலும், முதல்வனும் அதனோடு உடன்நின்று அறிதல் வேண்டும். அது, 'காணும் உபகாரம்' எனப்படும்.

6. இறைவனது அறிவாகிய ஆற்றல், 'சிற்சத்தி' எனப்படும். இது, மும்மலங்களைத் தொழிற்படுத்தி, உயிருணர்வை மறைக்கும்படி செய்விப்பதால், 'திரோதான சத்தி' என்ற பெயரும் பெறும்.

7. இத் 'திரோதான சத்தி' செயலாற்றும்போது, 'இச்சை, கிரியை, ஞானம்' என மூன்றாய் நின்று செயலாற்றும்.

8. இச் சத்திகளைக் கொண்டே, இறைவன், தன்னுடைய தொழிலனைத்தும் செய்கின்றான்.

9. ஆணவமலம் தேய்ந்து நீங்கும் நிலையடையத் 'திரோதான சத்தி' துணைபுரிவதாதலின், இதுவும் 'அருள்' எனவேபடும்.

10. உயிரானது, ஆணவ மலத்தோடு மட்டும் இருப்பது; பின்பு, மாயை கன்மங்களோடு இருப்பது; இறுதியில் மும்மலமும் நீங்கப்பெற்று இறைவனோடு கலப்பது என முந்நிலைகளையடையும்.

11. உயிருக்குச் 'சதசத்து' என்றும், 'சிதசித்து' என்றும் பெயர்.

12. உயிர், செயற்படுதற்கு முதல்வனின் 'திருவருள்' தேவை.

13. பதிஞானத்தால் பதிப்பொருளை அறியலாம்.

14. முத்தியில் உயிரானது, முதல்வனை வேறாய் நின்று அறியாமல், ஒன்றாய்நின்றே அறியும்; அதாவது சிவத்தோடு இரண்டறக் கலந்து நின்றே அறியும் என்பதாம்.

15. 'ஆணவம், கன்மம், மாயை' எனும் மும்மலங்களும், உயிருணர்வைக் கவர்ந்து, இறைவனை நோக்கவிடாமல், உலகத்தையே நோக்கும்படி செய்யும்.

16. இம்மூன்று தவிர, 'மாயேயம், திரோதானம்' எனும் இரு மலங்களைச் சேர்த்து, 'மலம் ஐந்து' எனலும் உண்டு.

17. இம் மலங்களுள், 'ஆணவமலம்' மிகமிகக் கொடியது; பொல்லாதது. ஆணவமலம் ஒன்றுதான்; எனினும் அதன் சத்திகள் அளவிறந்தன. ஆணவத்திற்கு 'உண்மை இயல்பு, பொது இயல்பு'களும்; 'காரணநிலை, காரியநிலை'களும் உண்டு.

18. ஆணவமலத்தின் சத்திகெடுதல் 'மலபரிபாகம்' எனப்படும்.

19. 'கன்மம்' மூவகைப்படும். அவை : சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம்.

20. வினைப்பயன்களைச் செய்த உயிர்களுக்கே கூட்டுவிப்பதும் இறைவனது திருவருளே.

21. 'மாயை' - உள்பொருள்; இறைவனுக்குப் பரிக்கிரக சத்தியாய் இருப்பது. உலகின் அடிப்படை மாயை; தனு, கரண, புவன, போகங்களை அளிப்பது; இஃது அறிவற்றது; எனவே, முதல்வன், தன் இச்சைப்படி, இம் மாயையினின்று அனைத்தும் செய்கின்றான்.

22. இம் மாயையானது, 'சுத்த மாயை, அசுத்த மாயை' என இருவகைப்படும். இவற்றுள், முதல்வன் திருவருள், நேரே பற்றி நின்று தொழிற்படுத்தற்கு உரியது 'சுத்தமாயை'. ஆனால் 'அசுத்தமாயை'யானது 'ஆணவம், கன்மம்' இவற்றோடு கலந்திருப்பது; இன்ப, துன்ப மயக்கங்களைத் தருவது.

23. முதல்வன், கொடிய ஆணவமலத்தின் ஆற்றலை மெலிவித்து, உயிருக்கு அருள் செய்தற்காகவே, 'மாயை கன்மங்'களை உயிர்கள்பாற் சேர்த்துப் பிறப்பு இறப்புக்களில் செலுத்தி, இன்ப துன்பங்களை அனுபவிக்கச் செய்கின்றான். இறுதியில் மலபரிபாகம் எய்த, உயிருள் இருக்கும் முதல்வன், ஞானாசிரியனாகி அருள்புரிவான்.

24. கருவிக் கூட்டங்களினின்று நீங்கிய ஆன்மாவை, 'ஊசல் கயிறு அற்றால் தாய்போல் தாங்கும் நிலம்போல' இறைவனின் திருவருள் தாங்கிக் கொள்ளும். அதனால், உயிர், தன் சிற்றறிவு

நீங்கப்பெற்றுத் தனது இயல்பான வியாபக அறிவைப் பெற்றுச் சிவனுடைய திருவருள் வியாபகத்துள் அடங்கிச் சிவமேயாய் நிற்கும்.

25. உயிரினிடத்து அருட்சத்தி விளங்கும் நிலை 'சத்திநி பாதம்' எனப்படும். அஃதாவது 'திருவருளின் வீழ்ச்சி'யாகும். அப்போது சிவவழிபாட்டில் விருப்பம் ஏற்படச் 'சரியை' முதலான வழிபாட்டு முறைகளில் ஆர்வமுண்டாகும்.

26. சிவபெருமானிடம் கொள்ளும் பக்தியினால், இருவினைகளையும் சமமாகக் கருதும் 'இருவினை யொப்பு' உண்டாகும்; அவ்வாறு உண்டாகும் காலமே, உயிருக்கு 'ஞானம்' ஏற்படும் காலமாகும்.

27. திருவருளில் அழுந்தி நிற்போர்க்குப் 'பிராரத்த வினை'யின் தாக்குதல் இல்லை; புதிய 'ஆகாமிய வினை'யும் ஏறமாட்டாது; இவர்களினின்றும் 'கன்மலம், மாயாமலம்' நீங்கும்.

28. மும்மலமும் நீங்கப் பெற்று, 'ஞானம்' பெற்ற உயிரானது, சிவத்தோடு அத்துவிதமாய்க் கலந்து சிவானந்தப் பேரின்பத்தில் திளைத்து இன்புற்றிருத்தலே 'முத்தி' ஆகும். இம்'முத்தி'யில், உயிரும் சிவமும் ஆகிய இரண்டும் உள்ளன; ஆயினும் பிரிந்து வேறுநில்லாது ஒருபொருள்போல விளங்கும். கலப்பால் ஒன்றாய் நிற்கும்; அதுவே 'அத்துவிதம்' எனப்படும். அப்போது, உயிரானது, 'தான்' என வேறு தோன்றாது நிற்கச் சிவமாகிய ஒருபொருளே உள்ளதுபோலத் தோன்றும்.

29. முத்தியில், 'பொல்லாத ஆணவம்', வறுத்த விதை போலச் செயலிழந்து நிற்கும்.

30. இத்தகைய 'முத்தி' நிலை, உடம்போடு கூடியுள்ளபோதே கிட்டுதலும் உண்டு. இத்தகையோர் 'சீவன் முத்தர்' எனப்படுவர்.

31. மும்மல வாசனை மீண்டும் தாக்காதிருக்க எஞ்ஞான்றும் சிவ மெய்யன்பர்களோடு இணைந்திருத்தல் வேண்டும்.

32. முதல்வனின் 'திருவருள்' குறித்துத் 'திருமுறை'களும், பிற 'சாத்திர' நூல்களும் விரிவாக எடுத்துரைக்கின்றன.

33. முதல்வனின் திருவருளை மெய்கண்டார், படிப்படியாக விளக்கிச் செல்கின்றார். அவனது '**திருவருள்**' என்னும் பேரொளிக்குள் நுழைந்துவிட்டால், பிறவித்தளை நீங்கும்; அவனின் திருவடிப் பேறும் கிட்டும். "உலகம் உய்யவேண்டும்; முதல்வனின் திருவருளைப் பெற்று முடிவிலாப் பேரின்பம் எய்தவேண்டும்" எனும் பெருங்கருணைகொண்டே, 'சிவஞானபோதம்' எனும் செந்தமிழ்ப்பனுவலை ஆக்கியுள்ளார். இந்நூல், இம் மன்பதை வாழ்தற்கென அவரால் அளித்த அருங்கொடையாகும்.

## சான்றெண் விளக்கம்

1. மறைமலையடிகள், **சிவஞானபோத ஆராய்ச்சி**, ப.8,9.
2. **'அருள், சத்தி, ஆணை'** முதலாயின இடம்பெறும் **நூற்பா, செய்யுள் பற்றிய விளக்கம்**,
   பட்டியல் எண் 6 இல், தரப்பட்டுள்ளது.
3. சி. அருணைவடிவேலு முதலியார், **சிவஞானமாபாடியப் பொருள்நிலை விளக்கம்**, ப.308.
4. பொ. முத்தையபிள்ளை (வி.உ.), **சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்**, பக்.87-89.
5. **சிவஞானபோதம்**, நூற்பா 2.
6. **மேலது.**, முதல் அதிகரணம், உ.வெ.6.
7. **மேலது.**, உ.வெ.7.
8. பொ. முத்தையபிள்ளை, **மு.கா. நூல்**, ப.94.
9. ஆ. ஆனந்தராசன், **சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை**, ப.45.
10. சிவஞானபோதம், முதல் **அதிகரணம்**, உ.வெ.8.
11. ஆ. ஆனந்தராசன், **மு.கா. நூல்**, ப.47.
12. சிவஞானபோதம், நூற்பா 2, **முதல் அதிகரணம்**, உ.வெ.9.
13. ப. இராமநாதபிள்ளை, (ப.ஆ.) **சிவஞானபோதமும் சிவஞான முனிவர் சிற்றுரையும்**, ப.27.
14. சம்பந்தர் **தேவாரம்**, 109.
15. அப்பர் **தேவாரம்**, 7018:1; 6699:1.
16. சுந்தரர் **தேவாரம்**, 7518:1.
17. **திருவாசகம்**, 1:44.
18. ஔவை சு. துரைசாமிபிள்ளை, **சிவபுராணம் விரிவுரை**, ப.25.
19. **திருமந்திரம்**, 131:17.
20. **அற்புதத் திருவந்தாதி**, 21:1:2.
21. தாயுமானவர், **எந்நாட்கண்ணி**, 9.
22. ஆ. ஆனந்தராசன், **மு.கா. நூல்**, ப.286.
23. சிவஞானபோதம், **நூற்பா**, 11.
24. பொ. முத்தையபிள்ளை, **மு.கா. நூல்**, ப.532.
25. ப: இராமநாதபிள்ளை, **மு.கா. நூல்**, ப.143.

26. சிவஞான சித்தியார், நூற்பா 11:1.

27. ஆ. ஆனந்தராசன், மு.கா. நூல், ப.288.

28. சிவஞானபோதம், நூற்பா 11, முதல் அதிகரணம், மேற்கோள்.

29. மேலது, ஏது.

30. மேலது, நூற்பா 5.

31. மேலது, மன்றப்பதிப்பு, ப.89.

32. ஆ.ஆனந்தராசன், மு.கா. நூல், ப.124.

33. சிவஞானபோதம், நூற்பா 11, முதல் அதிகரணம், வெண்பா.

34. திருவாசகம், 29:3; 180:4

35. திருவிசைப்பா முதற்பதிகம்; 1:4; 2:4; 3:4.

36. ந. சுப்புரெட்டியார், சைவ சமய விளக்கு, பக்.83,84.

37. ஆ. ஆனந்தராசன், மு.கா. நூல், ப.57.

38. சிவஞானபோதம், நூற்பா 2, இரண்டாம் அதிகரணம், உ.வெ. 12.

39. சிவஞான சித்தியார், நூற்பா 1:63:62. (வ.எண். 83,82)

40. சி. அருணைவடிவேலு முதலியார், மு.கா. நூல், ப.462.

41. வ.ஆ. தேவசேனாபதி, சைவசித்தாந்தத்தின் அடிப்படைகள், ப.78.

42. பெரியபுராணம், கண்ணப்பர், 157.

43. திருக்களிற்றுப்படியார், 78:1-2.

44. ஆ. ஆனந்தராசன், மு.கா. நூல், ப.123.

45. திருவாசகம் 168:4 (பக்கம் 48லும் வந்துள்ளது)

46. சிவஞானபோதம், நூற்பா, 3:1.

47. மேலது, நூற்பா, 4.

48. பொ. முத்தையபிள்ளை, மு.கா. நூல், ப.201.

49. மேலது, ப.202.

50. மேலது, ப.201.

51. சி. அருணைவடிவேலு முதலியார், முப்பொருள் இயல்பு, ப.55.

52. ந. சுப்புரெட்டியார், மு.கா. நூல், ப.151.

53. மேலது, ப.167.

54. சிவஞானபோதம், நூற்பா, 7.

55. பொ. முத்தைய பிள்ளை, மு.கா. நூல், பக். 341-350; 361-370.

56. **சிவஞானபோதம்,** நூற்பா, 7; மூன்றாவது அதிகரணம், வெண்பா.

57. மறைமலையடிகள், **மு.கா. நூல்,** ப.231.

58. **சிவஞானபோதம்,** நூற்பா 2, நான்காவது அதிகரணம், மேற்கோள்.

59. ஆ. **ஆனந்தராசன், மு.கா. நூல்,** ப.63,64.

60. **சிவஞானபோதம்,** நூற்பா, 4:3.

61. **மேலது,** நூற்பா, 4:1.

62. **மேலது,** நூற்பா, 7:1.

63. ஆ. **ஆனந்தராசன், மு.கா. நூல்,** ப.154.

64. **சிவஞானபோதம்,** நூற்பா, 7; மூன்றாவது அதிகரணம், மேற்கோள்.

65. ஆ. **ஆனந்தராசன், மு.கா. நூல்,** ப.163,164.

66. **சிவஞானபோதம்,** நூற்பா, 5.

67. சி. அருணைவடிவேலு முதலியார் **சிவஞானமாபாடியப் பொருள்நிலை விளக்கம்,** ப.547.

68. ஆ. **ஆனந்தராசன், மு.கா. நூல்,** ப.115.

69. **சிவஞானபோதம்,** நூற்பா, 5; இரண்டாவது அதிகரணம், மேற்கோள்.

70. **மேலது,** உ.வெ. (வ.எண்.32).

71. ஆ. **ஆனந்தராசன், மு.கா. நூல்,** ப.121.

72. **சிவஞானபோதம்,** நூற்பா. 5, இரண்டாவது அதிகரணம், உ.வெ. (வ.எண்.33)

73. **மேலது,** நூற்பா, 6 (ப. 43லும் சொல்லப்பட்டுள்ளது)

74. **திருவாசகம்,** 1:18

75. **அப்பர் தேவாரம்,** 7203:3-4.

76. **சிவஞானபோதம்,** நூற்பா,6, இரண்டாவது அதிகரணம், உ.வெ. (வ.எண்.36)

77. **மேலது,** உ.வெ. (வ.எண்.39)

78. **திருமந்திரம்,** 114:1-2.

79. ச. சாம்பசிவனார், **திருநாவுக்கரசர் தேவாரத்தில் சைவசித்தாந்தக் கருத்துக்கள்,** ப.18.

80. வ.ஆ. தேவசேனாபதி, **மு.கா.நூல்,** ப.58.

81. **சைவசித்தாந்த சாரம்,** 7.

82. ந. சுப்புரெட்டியார், **மு.கா.நூல்,** பக். 52 - 54.

83. **தாயுமானவர் பாடல்,** 30.

84. மறைமலையடிகள், **மு.கா.நூல்,** ப.25

85. வ.ஆ. தேவசேனாபதி, **மு.கா.நூல்,** ப.57.

86. **கந்தரனுபூதி,** 43:3-4.

87. திரு. வி. கலியாணசுந்தரன், **திரு.வி.க.வின் சிவஞான பாடிய அணிந்துரை,** பக்.12,13.

88. **சிவஞானபோதம்,** நூற்பா, 7:1-2 (ப. **79லும் வந்துள்ளது)**

89. **தாயுமானவர் பாடல்,** தேசோமயானந்தம், 1:4.

90. ச. சாம்பசிவனார், **மு.கா.நூல்,** ப.83

91. ச. கங்காதரன், **சைவசித்தாந்த அடிப்படைக் கொள்கைகளும் வரலாறும்,** ப.100.

92. **சிவஞானபோதம்,** நூற்பா, 9:1.

93. **மேலது,** நூற்பா, 2, இரண்டாவது அதிகரணம், உ.வெ. உரை (மன்றப் பதிப்பு) ப.39.

94. **மேலது,** உ.வெ. (வ.எண்.12) (ப. **73லும் சுட்டப்பட்டது)**

95. ஆ. ஆனந்தராசன், **மு.கா.நூல்,** பக்.54-56.

96. **இருபா இருபஃது,** 4:1.

97. தே.ஆ. ஸ்ரீநிவாஸாசாரியன், **இருபா இருபஃது நூலின் விரிவுக் கட்டுரை,** பக்.73, 74.

98. சி. அருணை வடிவேலு முதலியார், **மு.கா.நூல்,** பக். 327 - 328.

99. **சிவஞான சித்தியார்,** 176, 177

100. **திருமந்திரம்,** 2192.

101. மு. திருவிளங்கம், (உ.ஆ.) **சிவஞான சித்தியார் சுபக்கம், ப.279.**

102. க. வச்சிரவேல் முதலியார், 'சைவம்', **சைவமும் வைணவமும்,** பக். 67, 68.

103. முரு.பழ. இரத்தினம் செட்டியார், **இதோ சைவசித்தாந்தம் தெரிந்து கொள்ளுங்கள்,** பக். 21, 22.

104. வ.ஆ. தேவசேனாபதி, **மு.கா.நூல்,** ப.101.

105. சி. அருணைவடிவேலு முதலியார், **மு.கா.நூல்,** பக். 326,327.

106. **சிவஞான சித்தியார் சுபக்கம்,** 169.

107. வ.ஆ.தேவசேனாபதி, **மு.கா.நூல்,** பக். 100, 101.

108. ஆ. ஆனந்தராசன், **'சேற்றில் அழுந்தாச் சிந்தை', 'தமிழ்மாருதம்',** சூலை, 1992.

109. **சிவஞான போதம்**, நூற்பா, 1.

110. பொ. முத்தையபிள்ளை, **மு.கா.நூல்**, ப.22.

111. **சிவஞான போதம்,** நூற்பா, 1, இரண்டாவது அதிகரணம், உ.வெ (வ.எண்.2)

112. பொ. முத்தையபிள்ளை, **மு.கா.நூல்,** ப.45.

113. **சிவஞானபோதம்,** நூற்பா, 4:2.

114. பொ. முத்தையபிள்ளை, **மு.கா.நூல்**, ப.227.

115. **சிவஞான போதம்,** நூற்பா, 4, இரண்டாவது அதிகரணம், ஏது.

116. பொ. முத்தையபிள்ளை, **மு.கா.நூல்,** ப.230.

117. **மேலது**, பக். 231,232,235,236.

118. **மேலது**, பக்.328, 330, 331.

119. தே.ஆ. ஸ்ரீநிவாஸாசாரியன், **மு.கா.நூல்**, ப.83.

120. **சிவப்பிரகாசம்**, 25:4,

121. ந. சுப்புரெட்டியார், **மு.கா.நூல்**, பக். 194,195.

122. மறைமலையடிகள், **மு.கா.நூல்,** ப.26.

123. ச. கங்காதரன், **மு.கா.நூல்,** பக்.117,118.

124. சி. அருணை வடிவேலு முதலியார், **மு.கா.நூல்**, ப.334.

125. ஆ. ஆனந்தராசன், **சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை,** பக்.51,53.

126. **மேலது**, ப.274.

127. **சிவஞானபோதம்**, நூற்பா, 2.

128. பொ. முத்தையபிள்ளை, **மு.கா.நூல்** ப.78.

129. **சிவஞானபோதம்**, நூற்பா 2, இரண்டாவது அதிகரணம், மேற்கோள்.

130. **மேலது**, ஏது.

131. பொ. முத்தையபிள்ளை, **மு.கா.நூல்**, ப.108.

132. **சிவஞானபோதம்**, நூற்பா, 2, இரண்டாவது அதிகரணம். உ.வெ. (வ.எண்.11)

133. பொ. முத்தையபிள்ளை, **மு.கா.நூல்**, ப.113.

134. **சிவஞான சித்தியார்,** 94.

135. **சிவப்பிரகாசம்,** 24.

136. சி. அருணைவடிவேலு முதலியார், **மு.கா.நூல்,** ப.352.

137. ர. ராமானுஜாசாரி, **சைவசித்தாந்தம்**, ப.75.

138. ஞானியார் அடிகள், **ஞானியார் அடிகள் நினைவுமலர்,** ப.135.

139. தே.ஆ. ஸ்ரீநிவாஸாசாரியன், **மு.கா.நூல்**, ப.82.

140. சி. அருணைவடிவேலு முதலியார், **மு.கா.நூல்**, ப.339.

141. ந. சுப்புரெட்டியார், **மு.கா.நூல்**, ப.217.

142. ர. ராமானுஜாசாரி, **மு.கா.நூல்**, பக்.77-78.

143. ச. சாம்பசிவனார், **மு.கா.நூல்,** ப.133.

144. **சிவஞானபோதம்**, நூற்பா, 3, முதல் அதிகரணம், உ.வெ. (வ.எண்.16:3)

145. ஆ. ஆனந்தராசன், **மு.கா.நூல்**, ப.69.

146. **சிவஞானபோதம்**, நூற்பா, 4, இரண்டாவது அதிகரணம், உ.வெ. (வ.எண்.27)

147. ஆ.ஆனந்தராசன், **மு.கா.நூல்**, ப.97.

148. **மேலது**, ப.99.

149. **மேலது**, ப.100.

150. **சிவஞானபோதம்,** நூற்பா, 9.

151. சி.சு.மணி (வி.உ) **சிவஞானமாபாடியம்,** ப.965.

152. ஆ.ஆனந்தராசன், **மு.கா.நூல்,** ப.235.

153. **சிவஞானபோதம்**, நூற்பா, 5. (ப. 85லும் வந்துள்ளது)

154. **மேலது**, நூற்பா, 9, இரண்டாவது அதிகரணம், உ.வெ. (வ.எண்.58)

155. **மேலது**, நூற்பா, 8.

156. ஆ.ஆனந்தராசன், **மு.கா.நூல்**, ப.207.

157. **சிவஞானபோதம்,** நூற்பா, 8, நான்காவது அதிகரணம், மேற்கோள்; ஏது.

158. **மேலது**, உ.வெ. (வ.எண்.51)

159. **தாயுமானவர் பாடல்**, சின்மயானந்த குரு:5.

160. **சிவஞானபோதம்**, நூற்பா, 10.

161. பொ. முத்தையபிள்ளை, **மு.கா.நூல்**, ப.486.

162. **சிவஞானபோதம்,** நூற்பா, 10, முதல் அதிகரணம், உ.வெ. (வ.எண்.62)

163. ஆ.ஆனந்தராசன், **மு.கா.நூல்**, ப.261.

164. **திருவாசகம்,** வ.எண் 501

165. **மேலது,** 504.

166. **சிவஞானபோதம்**, நூற்பா, 10, இரண்டாவது அதிகரணம், ஏது.

167. **அப்பர் தேவாரம்**, 6512

168. **பெரியபுராணம்,** திருநாவுக்கரசர், 422.

169. ஆ.ஆனந்தராசன், **மு.கா.நூல்,** ப.275

170. ந. சுப்புரெட்டியார், **மு.கா.நூல்,** பக். 327 - 329.

171. வ.ஆ.தேவசேனாபதி, **மு.கா.நூல்,** ப.131

172. முரு.பழ. இரத்தினஞ் செட்டியார், **மு.கா.நூல்,** ப.34.

173. எம். தேவகி, **'முடிவிலாப் பேரின்பநிலை', தமிழ்மாருதம்**, செப்.97

174. **சிவஞானபோதம்**, நூற்பா, 11, இரண்டாவது அதிகரணம், உ.வெ (வ.எண்.72)

175. ஆ. ஆனந்தராசன், **மு.கா.நூல்,** பக். 280,281.

176. **சிவஞானபோதம்**, நூற்பா, 12.

177. பொ. முத்தையபிள்ளை, **மு.கா.நூல்,** ப.577.

178. **சிவஞானபோதம்**, நூற்பா, 12, முதல் அதிகரணம், மேற்கோள்; ஏது.

179. **மேலது**, இரண்டாவது அதிகரணம், மேற்கோள்.

180. **மேலது**, மூன்றாவது அதிகரணம், மேற்கோள்.

181. **பெரியபுராணம்,** திருநாவுக்கரசர், 140

182. வை. இரத்தினசபாபதி, **திருமுறைத் தெளிவே சிவஞானபோதம்**, பக்.27,28.

183. **சம்பந்தர் தேவாரம்,** 1:1:3-4.

184. **அப்பர் தேவாரம்**, 4161:1; 5041.

185. **சுந்தரர் தேவாரம்**, 7225:1

186. **திருவாசகம்,** 465.

187. **மேலது**. 6:3:4.

188. **திருக்கோவையார்,** வர்த்தமானன் பதிப்பகம் (தமிழ் நிலையம்), ப.71

189. **திருவிசைப்பா,** எண் 2:1-2.

190. **மேலது**, எண் 81:1-2.

191. **திருமந்திரம்,** 48.

192. **அற்புதத் திருவந்தாதி**, 52.

193. **பொன்வண்ணத்தந்தாதி**, 17.

194. **திருக்கழுமல மும்மணிக்கோவை**, 22 - 26.

195. க. வெள்ளைவாரணனார், **'ஆராய்ச்சி முன்னுரை' பெரியபுராணம்**, ப.25.

196. **மேலது**, பக்.28,29.

197. **பெரியபுராணம்**, சாக்கியர், 5.

198. **திருவுந்தியார்**, 18.

199. **திருக்களிற்றுப்படியார்**, 4:3; 5:3.

# 5

# சிவஞானசித்தியாரில் 'திருவருள் விளக்கம்'

## முன்னுரை

அருணந்தி சிவாசாரியர், தம் 'சிவஞானசித்தியார் சுபக்கத்'தில், 'அருள்' என்னும் சொல்லை 55 இடங்களில் எடுத்தாள்கின்றார்[1] இது தவிரச் 'சத்தி' என்ற சொல்லை ஆளுமிடங்கள் பலவாம். "ஆணை, கருணை, தாள், பாதம், கமலபாதம், சந்நிதி, அடி, சேவடி, திருவடி, பாதமலர், அடிக்கமலம், தாள் இணைகள்" முதலான பலசொற்களையும் கையாள்கின்றார். இவற்றால், இவர், முதல்வனின் திருவருளுக்கு எத்துணைச் சிறப்பிடம் தந்துள்ளார் என்பது போதரும்.

இத்தகைய 'திருவருள்', அருணந்திசிவாசாரியர் அருளிய இந்நூலில், எவ்வாறெல்லாம் விளக்கம் பெற்றுள்ளது என்பதை ஆராய்வது, இவ்வியலின் நோக்கம்.

## பாயிரத்தில் திருவருள்

அருணந்தி சிவாசாரியர் பாயிரத்துப் பரசிவவணக்கத்திலேயே, இறைவனின் திருவருட்டிறத்தைக் குறிப்பிடுகின்றார்:

> *"அறுவகைச் சமயத் தோர்க்கும் அவ்வவர் பொருளாய் வேறாம்*
> *குறியது வுடைத்தாய் வேதா கமங்களின் குறியிறந்தங்(கு)*
> *அறிவினில் அருளால் மன்னி அம்மையோ டப்பனாகிச்*
> *செறிவொழி யாது நின்ற சிவனடி சென்னி வைப்பாம்"[2]*

இதற்கு மு.திருவிளங்கம், பின்வருமாறு உரை தருவர் :

> *"அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் கொண்ட முதற்பொருளாயும் சித்தாந்த சைவருக்குச் சச்சிதானந்த சொரூபியாயும் பரஞானத்தால் அறிந்தநுபவிக்கப்படுவதாயும், உயிர்க்குயிராயும், உயிர்களுக்கு வியாபக அறிவைப் பயப்பிப்பதாகவும், எங்கும் வியாபகமாயிருக்கும் பரமசிவனது திருவடியைச் சிரத்தின்மேற் சூடிக்கொள்வாம்."[3]*

இப்பாடலில் "அறிவினில் அருளால்மன்னி" என்பதற்கு 'ஆன்ம அறிவின்கண் **திருவருளோடு** பொருந்தி, உயிருக்குயிராகி' என்பது பொருள்.

சத்தியும் சிவமும், ஆன்ம அறிவைப் பொருந்தி நின்று, அதன் ஏகதேச அறிவை நீக்கி, வியாபக அறிவை உண்டாக்கும்.

இங்குச் 'சிவனடி' எனவருவதும் 'சத்தி' சொரூபத்தைக் குறிக்கும்.

எனவே, இந்நூல் இனிது நிறைவேறுதற்குச் சிவபெருமானின் திருவருள் துணை இன்றியமையாது வேண்டப்படும்; எனவே இவ்வாறு துதித்தார் எனலாம்.

அருணந்தி சிவாசாரியரின் குருநாதர், மெய்கண்டார் ஆதலின்,

*"என்னைஇப் பவத்திற் சேரா வகையெடுத் தென்சித் தத்தே*
*தன்னைவைத் தருளினாலே தாளிணை தலைமேற் சூட்டும்*
*மின்னமர் பொழில்சூழ் வெண்ணெய் மேவிவாழ் மெய்கண் டான்நூல்*
*சென்னியிற் கொண்டுசைவத் திறத்தினைத் தெரிக்க லுற்றாம்"*[4]

என்று கூறவந்த போதும், தம் ஆசிரியர் தமக்குச் செய்த அருளைச் சுட்டுகின்றார்.

*"முற் செய்த நற்றவத்தினாலே, சாமுசித்தராய்ப் பிறந்து, பரமசிவனை அன்பு மாத்திரையால் வழிபடும் அடியார்களை, அப்பரமசிவன், தாமாகவே சிவகதியிற் சேர்ப்பர்"*

என இறைவனின் திருவருட் பேற்றைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார் அருணந்திசிவாசாரியர் :

*"பண்டைநற் றவத்தால் தோன்றிப் பரமனைப் பத்திபண்ணும்*
*தொண்டரைத் தானே தூய கதியினில் தொகுப்பன்"*[5]

*"சிவாகமங்கள் வாயிலாகவும், பரஞானத்தாலும் சிவனை அறியலாம்"*

என்று இயம்ப வந்தவர், "பரஞானம், ஆன்மாவின் இருளை நீக்கும் திருவருளாம்; அபரஞானம் அத்திருவருளைத் தெரிய உணர்த்தும் சிவாகமங்களாம்" என்பர். இதனை உணர்த்துவது, 'அருளினால் ஆகமத்தே' எனும் பாடல்.[6]

## முத்தொழிலும் இறைவன் திருவருளும்

சங்காரக் கடவுள், 'படைத்தல் காத்தல் அழித்தல்' எனும் முத்தொழில்களைச் செய்பவன். இதற்குக் காரணங்கள் இரண்டு என்பர்

அருணந்தி சிவாசாரியர். ஒன்று, அவனது திருவிளையாடல்; மற்றது, அவனது **திருவருள்.**

> *"சொன்னஇத் தொழில்க ளென்ன காரணந் தோற்ற வென்னின்*
> *முன்னவன் விளையாட் டென்று மொழிதலுமாம் உயிர்க்கு*
> *மன்னிய புத்திமுத்தி வழங்கவும் அருளால் முன்னே*
> *துன்னிய மலங்கள் எல்லாம் துடைப்பதுஞ் சொல்லலாமே"*[7]

என்பது இவர் வாக்கு.

இப்பாடலின் கருத்து வருமாறு :

> *"சங்காரக் கடவுள் முத்தொழிலையும் செய்தற்குக் காரணம் யாதெனின், அவனது திருவிளையாட்டு என்று சொல்லுதலுமாம்; அஃதன்றி, தமது கருணையால், உயிர்களுக்கு அவ்ரவர் கன்மத்துக்கேற்பப் போக முத்திகளைக் கொடுத்தற்கு என்றும், அநாதியே அவ்வுயிர்களைப் பொருந்திய மும்மலங்களை நீக்குதற்கு என்றும் சொல்லலாம்."*

'அழித்தல் தொழில்' என்பது, தனு கரணங்களை ஒடுக்குதல் ஆம். அது பிறந்திறந்து வினைகளைச் செய்து வினைப் பயன்களை அனுபவித்து உழல்கின்ற உயிர்களுக்கு அதனால் வரும் இளைப்பை நீக்குதற் பொருட்டுச் செய்யப்படுவது.

'சிருட்டித் தொழில்' என்பது, கன்மங்கள் பக்குவமானவிடத்து அவற்றின் பயனை அனுபவித்தற் பொருட்டுத் தனுகரணங்களைத் தோற்றுவித்தல் ஆம். அனுபவத்தால் கன்மங்கள் நீங்கவே, ஆணவமலத்தின் வலியும் குன்றும். எனவே, 'சிருட்டி'த் தொழிலானது, கன்மங்களை ஒழித்தற் பொருட்டும் ஆணவம், பரிபாகமடைதற் பொருட்டுமாம்.

'திதித் தொழில்' என்பது, தனுகரணங்களை நிறுத்துதல் ஆம். இது, பக்குவப்பட்ட கன்மங்கள், அனுபவத்தால் ஒழிதல் பொருட்டுச் செய்யப்படுவதாம். கன்மம் ஒழியவே, ஆணவமும் 'மலபரிபாகம்' எய்தும். 'மறைப்பு' என்பது, இருவினைப் பயன்களாலே நிறுத்துதல் ஆம். இது, 'இருவினைஒப்பு' வருவித்து, மலங்களை நீக்குதற் பொருட்டு நிகழ்வதாம். 'இருவினைஒப்பு' வருமிடத்துக் கன்மப் பயன்களில் ஒப்புவெறுப்பு உண்டாகும். அதனால் ஆணவமலசத்தி வலி குன்றும். கன்மம் காரணமாக மாயா மலசத்தியும் வலிகுன்றும்.

இறுதியில் உள்ளது 'அருட்சத்தி'. மேற்கூறியவாறு இருவினைஒப்பும், மலபரிபாகமும் வந்தவிடத்து, இதுவரை உள்நின்று மலம் பரிபாகம் எய்தும்படி, வேண்டிய உபாயங்களைச் செய்துவந்த

'திரோதானசத்தி'யானது, அருட்சத்தியாய் மாறி, குருவடிவம் கொண்டு எழுந்தருளி வந்து, தீக்கை செய்து, மும்மலங்களையும் போக்கி, முத்தியைக் கொடுக்கும்.

இவ்வாறு "இளைப்பாற்றல், மலபரிபாகம் வரச் செய்தல், கன்மங்களை நீக்குதல், இருவினைஒப்பு வருவித்தல், மலங்களைப் போக்கி முத்தி கொடுத்தல்" என்னும் ஐந்து தொழில்களும், உயிர்களின்மேல் முதல்வன் வைத்த கருணையினால் செய்யப்படுவன ஆதலின், இவையனைத்தும் 'அருட் செயல்களே'யாம்.

மறைத்தல் தொழில் காத்தலிலும், அருளல் தொழில் சங்காரத்திலும் அடங்குதலின் 'முத்தொழில்' என்றும் கூறுவதுண்டு. இத்துணை உட்பொருளும் தன்னுள் கொண்டு விளங்குவது, பின்வரும் சித்தியார் பாடல்:

*"அழிப்பிளைப் பாற்றல் ஆக்கம் அவ்வவர் கன்ம*
*மெல்லாம்*
*கழித்திடல் நுகரச் செய்தல் காப்பது கன்ம வொப்பில்*
*தெழித்திடல் மலங்க ளெல்லாம் மறைப்பருள் செய்தி*
*தானும்*
*பழிப்பொழி பந்தம்வீடு பார்த்திடின் அருளே எல்லாம்"*[8]

தம் மூன்றாம் வயதிலேயே சிவபெருமானின் திருவருளைப் பெற்ற ஞானசம்பந்தர் முதன்முதலாக இறைக்காட்சி கண்டு பாடிய தேவாரத் திருப்பாட்டு, "தோடுடைய செவியன்" என்பது. இதற்குப் ப.இராமநாதபிள்ளை கூறும் விளக்கம் இங்கு ஒப்பு நோக்கத்தகும்.

*"விடையினால் - படைப்பு; வெண்மதியால் - காப்பு;*
*சுடலைப்- பொடி - துடைப்பு; கள்வனால் - மறைப்பு"*
*தோடுடைய செவியன் - அருள்."*[9]

எனவே, முதல்வனின் ஐந்தொழில் பற்றிச் சம்பந்தர் குறிப்பிட்டுள்ளமை தெளிவு.

இவ்வாறே, திருவாசகத்தில் வரும்,

*'தோலும் துகிலும் குழையும் சுருள் தோடும்"*[10]

என்பதற்கு இவர்,

*"தோல் - படைப்பு; துகில் - காப்பு; குழை - துடைப்பு;*
*தோடு - மறைப்பு; நீறு - அருளல்"*[11]

என்று நயம் கூறுவர்.

*"படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி"*[12]

என்பது மணிவாசகர் திருவாக்கு.

*"ஆதிபடைத்தனன் ஐம்பெரும்பூதம்"*[13]

என்பது திருமந்திரம்.

குமரகுருபரர், தம் 'கந்தர்கலிவெண்பா'வில்

*"..........அறிவுக்கு*
*அநாதியாய் ஐந்தொழிற்கும் அப்புறமாய் நின்றே*
*அனாதிகளுக்கு எட்டாவடிவமாய்த் - தனாதருளின்*
*பஞ்ச விதரூபப் பரசுகமாய் எவ்வுயிர்க்கும்*
*தஞ்சமென நிற்கும் தனிப்பொருளாய்"*[14]

என்று, முதல்வனின் ஐந்தொழில் குறித்துப் பாடுவர்.

தில்லை நடராசப் பெருமானின் நடனத்துவம் குறித்துச் சிவநந்தி அடிகளார் கூறுவது இங்குக் குறித்தல் சாலும் :

*"தமருகம், ஆக்கமாம் நாதம் ஒலிக்கிறது; அளித்தல், அபயக்கரத்தில் விளங்கும்; தீ, அழித்தலைக் குறிக்கும்; ஊன்றிய பாதத்தில் மறைப்பும், தூக்கிய திருவடியில் அருளலும் விளங்கும். இந்த ஐந்தொழில் நடனத்தால், திருஆட்சி, அருளாட்சி உலகில் நடக்கிறது."*[15]

## முதல்வனும் திருவருளும்

*"உதவியின்றி மனிதன் தடுமாறும்போது, அவனுக்கு உறுதுணையாயிருப்பது இறைவனின் திருவருளேயாம் எனச் சைவம், கிறித்துவம் எனும் இரு சமயங்களும் கூறும். ஆனால் இவை சொல்லும் முறைகள்தாம் வேறு"*[16]

எனத் தமது ஆங்கில ஆராய்ச்சி நூலில் குறிப்பிடுகின்றார், ஜோசப் ஜஸ்வந்த்ராஜ்.

முதல்வனுக்கு 'அருவம், அருவுருவம், உருவம்' எனும் மூவகை வடிவங்கள் உண்டு. இம்மூன்றும் முதல்வனுக்குத் 'தடத்த வடிவங்கள்' எனப்படும்.

உயிர்களுக்குரிய வடிவத்திற்கும், முதல்வனுக்குரிய வடிவத்திற்கும் வேறுபாடு உண்டு. உயிர்கள் ஆணவமலமும், சிற்றறிவும் சிறுதொழிலும் உடையன ஆதலால், அவைகளுக்குரியன, மாயாகாரிய வடிவங்கள். ஆனால் முதல்வன் நின்மலன், முற்றறிவும், முற்றுத்தொழிலும் முழுமுதன்மையும் உடையவன். எனவே, மலமில்லாத முதல்வனுக்கு, மலம் காரணமான மாயாகாரிய வடிவம் பொருந்தாது; சத்தி காரியமான வடிவமே அவனுக்கு வடிவமாம்.[17]

முதல்வனது திருவுரு, அருள்வடிவமே. ஆதலால், அவ்வுருவிலே தோன்றும் குணங்கள், கரணங்கள், தொழில்கள், பிரத்தியங்க சாங்க உபாங்கங்கள் யாவும் அருள் வடிவேயாம். இவையெல்லாம் தன் பொருட்டன்று, உயிர்களின் பொருட்டே கொண்டனன் முதல்வன் என்பதை விளக்கும் பாடல் வருமாறு :

*"உருவருள் குணங்க ளோடும் உணர்வருள் உருவிற்*
*றோன்றும்*
*கருமமும் அருள ரன்றன் கரசரணாதி சாங்கம்*
*தருமரு ளுபாங்க மெல்லாம் தானருள் தனக்கொன்*
*றின்றி*
*அருளுரு உயிருக்கென்றே ஆக்கினன் அசிந்த னன்றே"*[18]

இனி, முதல்வன் கொள்ளும் திருமேனிகளும் வெவ்வேறு வகையில் உள்ளன. அவை போகவடிவம், வேகவடிவம், யோகவடிவம். இவையும் அருள் காரணமாக அமைவனவே. உயிர்களுக்குப் போகம் அருளுதற் பொருட்டுப் போகவடிவம்; உயிர்களின் வினைகளைக் கெடுத்தற் பொருட்டு 'வேகவடிவம்'; உயிர்கட்கு யோகமுத்தி அருளுதற்பொருட்டு, 'யோகவடிவம்'.[19]

*"அன்றிஅவ் வேடமெல்லாம் அருள்புரி தொழில்"*[20]

என்பர் அருணந்தி சிவாசாரியர்.

உயிர்கட்குப் போகத்தைக் கொடுத்துப் பாசத்தைக் கெடுத்து, முத்தியை அளித்தற் பொருட்டும் முதல்வன் உருவத் திருமேனி கொள்ளல் இன்றியமையாததாகிறது.[21]

*"சொரூப நிலையில் இறைவன் தனக்கென்று ஓர் உருவும், தொழிலும் பெயரும் இல்லாதவனாயினும், தடத்தநிலையில், உயிர்களின் பொருட்டுப் பலப்பல உருவும் தொழிலும் செயலும் உடையவனாகின்றான் என்பதை அறிய முடிகின்றது"*[22]

என்ற ந.சுப்புரெட்டியார் கூறுவது இவண் குறிக்கத்தகும்.

*"ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமில்லார்க்கு ஆயிரம் திருநாமம்"*[23]

என்பர் மணிவாசகர்.

### சத்தியும் திருவருளும்

அரசனது சத்தி ஒன்றே, மந்திரி முதலாயினோரிடத்து நின்று செய்யும் தொழில் வேறுபாட்டால் பலவேறு வகைப்பட்டாற்போலச் 'சிவசத்தி' ஒன்றே அயன் முதலாயினோரிடத்து நின்று செய்யும் தொழில் வேறுபாட்டால், 'செநநி' முதலியனவாய்ப் பலவேறு வகைப்படும்.

அச்சத்தி, முதல்வனோடு பிரிவின்றி நின்று, அம்முதல்வன் நினைந்தபடி போக மோட்சங்களைக் கொடுக்கும்.[24]

சிவசத்தியின் சொரூபம் 'சுத்தஞானம்' ஆகும். அதுவே 'பராசத்தி' எனப்படும். அச்சத்தியே 'கிரியாசத்தி' முதலிய சத்திகளனைத்தையும் காரியப்படுத்தும்.[25]

அப்பராசத்தியானது பொதுவகையால் ஒன்றாய், ஐந்தொழிலும் செய்தலைக் குறித்துச் சிறப்பு வகையால் வியாபரிக்குமிடத்துத் 'திரோதான சத்தி' என நின்று 'இச்சை, ஞானம், கிரியை' என மூவகைப்பட்டு வியாபரிக்கும்.

உயிர்களுக்கு மலத்தை நீக்கிச் சிவத்தை அளித்தற்கண் உள்ள இரக்கம் 'இச்சாசத்தி' எனப்படும்; இரக்கம் கொண்டபின் மலத்தை நீக்குதற்கும் சிவத்தை அளித்தற்கும் செய்யவேண்டிய 'படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்' எனும் உபாயங்களை அறியும் சத்தி, 'ஞானசத்தி' எனப்படும். பின் அவ் உபாயங்களைச் செய்யும் சத்தி 'கிரியா சத்தி' எனப்படும்.[26]

பளிங்கானது, பொன்மை நீலம் முதலிய நிறங்களைப் பொருந்தியவிடத்து, அவ்வந் நிறங்களின் தன்மையாய்த் தோன்றினும், தான் வேற்றுமையின்றி நிற்பதுபோல, முதல்வனும் சத்தியினுடைய பேதங்கள் எல்லாவற்றையும் பொருந்தியவிடத்து, அவ்வச் சத்தியின் தன்மையாய்த் தோன்றியும், தான் வேற்றுமையின்றியே நிற்பன். அப்பேதமெல்லாம் அருட் சத்தியினிடமாகத் தோன்றுவனவேயன்றி முதல்வனிடத்துத் தோன்றுவனவன்று.

அஃதாவது, வெண்மையான பளிங்கில் நீலம் முதலிய நிறங்கள் தோன்றினும், அப்பளிங்கு வெண்மை என்பது மாறாததுபோல, இறைவனும் அறிவு செயல் ஆகிய இரண்டன் வழிப் பல்வேறு வடிவுகள் கொள்ளினும், அவன் அவ்வருட் சத்தியினின்றும் வேறுபடமாட்டான் என்பதாம்.[27]

இவ்வாறு, 'சத்திசிவம்' என்று இருதன்மையாயிருத்தலால்தான் உலகம் முழுவதும் 'ஆண்பெண்' என இருவகையாகவும், குணம், குணிப் பொருள்களாகவும் விளங்க வைத்தனன்.[28]

இவை குறித்துத் திருமுறைகள் விரிவாகப் போற்றும். அவற்றுட் சிலவருமாறு:

சம்பந்தப் பெருமான்,

*"பெண்டான் பாகமாகப் பிறைச்சென்னி, கொண்டான்"*[29]

*"பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே"*[30]

என்பர்.

நாவரசர், ஐயாற்றில் கண்ட கயிலைக் காட்சியும், 'சத்திசிவம்' ஆகும்.

*"காதன் மடப்பிடியோடும் களிறுவருவன கண்டேன்"*[31]

என்பர் நாவரசர். சேக்கிழாரும் இதனைச்,

*"சத்தியும் சிவமுமாம் சரிதைப்*
*பன்மை யோனிகள் யாவையும்..."*[32]

என்பர்.

மணிவாசகரும்,

*"மைஇலங்குநற் கண்ணி பங்கனே"*[33]

என்று கூறுவர்.

சங்க இலக்கியத்துள் ஒன்றாகிய புறநானூறு,

*"பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று, அவ்வுருத்*
*தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்"*[34]

எனக் கூறுவது, பண்டைத் தமிழர்களின் 'சத்திசிவ' வழிபாட்டை உணர்த்துவதாம்.

இதே சித்தியாரில்,

*"எத்திற நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்"*[35]

என வருவதும் அறியத்தகும்.

*"பதியும் சத்தியும் தன்னிலையில் 'சிவன்' என்பதும், உலகத்துடன் தொடர்பு கொண்ட நிலையில் 'சத்தியுடனாய ஒருவன்' என்பதும் சித்தாந்த மரபு"*[36]

என வ.ஆ.தேவசேனாபதி கூறுவது இதுபற்றியேயாம்.

*"ஒரு கடவுளே தம்முள் அப்பனுமாய் இருபொருளாய் இருப்பர். ஆயினும் ஒருபொருளே என்னும்படி ஒன்றாய்க் கலந்திருப்பர்"*[37]

என்பர் இளவழகனார். இதனையே, ப.வெள்ளியங்கிரி,

*"ஞானம் தனியாக இருப்பின் அதன்நிலை 'சிவம்' எனப்படும்; ஞானம் தொழிலாக இயங்கும்போது 'சத்தி' எனப்படும்"*[38]

என்பார்.

முதல்வனின் திருவுருவம் குறித்தும், அவன் அருள் செய்யும் பான்மை குறித்தும் திருமுறைகளில் பரக்கக் காணலாம் :

*"நானாவித உருவாய் நமையாள்வான்"*

*"வெந்த சாம்பல் விரையெனப் பூசியே*
*தந்தை யாரொடு தாயிலர் தம்மையே*
*சிந்தி யாவெழு வார்வினை தீர்ப்பரால்*
*எந்தை யாரெவர் எவ்வகை யார்கொலோ"*[39]

என்பன சம்பந்தர் மொழிவன.

*"இங்குற் றேனென் றிலிங்கத்தே தோன்றினான்*
*பொங்கு செஞ்சடைப் புண்ணிய மூர்த்தியே"*

*"இருநிலனாய் . . . . அட்டமூர்த்தியாகிப்*
*. . . . . . பெண்ணும் ஆணும்*
*பிறருருவும் தம்முருவும் தாமேயாகி . . ."*[40]

என்பன நாவரசர் நவில்வன.

*"இந்திரன் மால்பிரமன் எழிலார்மிகு தேவரெல்லாம்*
*வந்தெதிர் கொள்ள என்னை மத்தயானை அருள்புரிந்து"*[41]

என்பது சுந்தரர் வாக்கு.

*"வழங்குகின் றாய்க்குன் அருளார் அமுதத்தை*
*வாரிக்கொண்டு*
*விழுங்குகின்றேன்"*[42]

என்கின்றார் மணிவாசகர்.

*". . . . . . அம்பலத்துள்*
*நிறைதரு கருணா நிலயமே"*[43]

என்பது 9ஆவது திருமுறையில் வருவது.

*"அருளே உலகெலாம் ஆள்விப்பது ஈசன்"*[44]

என "அனைத்தும் அவன் அருளே" என்கிறார் காரைக்காலம்மையார்.

*"தொழுவார்க்கே அருளுவது சிவபெருமான்"*[45]

என்கின்றார் சேக்கிழார்.

இவ்வாறு பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்திருப்பது சிவபெருமானின் திருவருளேயாம்.

*"முதல்வனின் திருவருள் இருந்தால்தான், அவனிடத்து அன்பு செலுத்தமுடியும் என்பதுவே உண்மை. பெரியபுராணத்து வரும் அடியார்கள் அனைவருமே அவனது திருவருளாலேயே பல்வேறு சோதனைகளுக்கு ஆட்பட்டு வெற்றிகண்டனர்"*[46]

என்று தம் ஆங்கிலக் கட்டுரை ஒன்றில் குறிப்பிடுகின்றார் ஆர் கோபாலகிருஷ்ணன்.

## அத்துவிதமும் திருவருளும்

மெய்கண்டார் தம் 2ஆம் நூற்பாவில், 'அத்துவித' உண்மையை அருளிச் செய்துள்ளார். அவரைப் பின்பற்றியே சிவாசாரியரும், தம் 2ஆம் நூற்பாவில் அதனை விரித்துரைக்கின்றார்.

*"பரமசிவன், கலப்பினால் உலகுயிர்கள் அனைத்தும் தானேயாய்; பொருட்டன்மையால் அவற்றின் வேறுமாய்; செலுத்தும் தன்மையினால் உடனுமாய்; சத்திவடிவாய் வியாபரித்து, எண்ணிறந்த உயிர்கள், இருவினைக்கீடாக வரும் இன்பத்துன்பங்களை நுகர்தற்பொருட்டு, மாயா காரியமான தனுகரணங்களைப் பொருந்திப் பிறந்திறந்து அவ் வாணையின் வழி அடங்கிச் செல்லுமிடத்து, அவற்றை நடத்தும் முதல்வனாய், உலகு உயிர்களாகிய இவற்றின் தன்மைகள் தன்கட் பொருந்துதலின்றித் தான் சுயம்பிரகாசமாம் இயல்புடைய நின்மலனாய், இவ்வுலகுயிர்களெங்கும் அத்துவிதமாய்க் கலந்து பிரிவின்றி நின்றான்"*[47]

என்னும் பொருள்பட அருணந்திசிவாசாரியர் அருளும் திருப்பாட்டு வருமாறு :

*"உலகெலா மாகி வேறாய் உடனுமாய் ஒளியாய் ஓங்கி*
*அலகிலா உயிர்கள் கன்மத் தாணையின் அமர்ந்து*
*செல்லத்*
*தலைவனாய் இவற்றின் தன்மை தனக்கெய்த*
*லின்றித்தானே*
*நிலவுசீர் அமலனாகி நின்றனன் நீங்கா தெங்கும்"*[48]

இதனைப் பின்வருமாறு உவமை மூலம் அருணந்திசிவாசாரிய விளக்குகின்றார் :

*"அகர உயிரானது, உயிரெழுத்து மெய்யெழுத்துக்களோடு நிற்றல்போல, முதல்வனும் உயிர்களாகிய சேதனப் பிரபஞ்சத்தோடும் அசேதனப்*

*பிரபஞ்சத்தோடும் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்பன்.*"[49]

முதல்வன், உயிர்களோடு கலந்து "ஒன்றாய் நிற்றல் வேறாய் நிற்றல் உடனாய் நிற்றல்'' பற்றிய விளக்கங்களும், எடுத்துக்காட்டுக்களும் முன்னைய இயலில் இயம்பப்பட்டுள்ளன.

இவ்வாறு இறைவன் மூவிதமாய் நிற்றல், உயிர்களுக்கு வேண்டுவன ''நிலைத்தல், அறிதல், செல்லுதல்'' என்னும் மூன்றிற்காகவேயாம். ஒன்றாய் நிற்றலால் - நிலைத்தல்; வேறாய் நின்று அறிவித்தலால் - அறிதல்; உடனாய் நின்று செலுத்துவதால் - செல்லல். ஆதலின் இவையும் திருவருளின் காரணமாக நிகழ்வனவாம்.

இறைவன் இங்ஙனம் உயிர்களோடு ஒன்றாய் - வேறாய் - உடனாய் நிற்றல் 'பொது இலக்கணம்' ஆகும். சித்துச் சத்தாய் நிற்றல் 'சிறப்பிலக்கணம்' ஆகும்.[50]

இவண், இ.வே. கந்தையா கூறும் கருத்து உணரத்தக்கது

"*உயிர் உடம்பில் கலந்து நிற்றல்போல, முதல்வன் உயிர்களிற் கலந்து ஒற்றுமைப்பட்டுள்ளான். காணும் கண் விளக்கொளியாலன்றிக் காணமாட்டாது; அதுபோல, அறியும் உயிர், முதல்வனது அருள் அறிவித்தாலன்றி அறியாது. பொறிகள் உயிராற் செலுத்தப் படுதல்போல, உயிரும் முதல்வனாற் செலுத்தப்படும். இம்மூன்று இயல்பும் ஒன்றாய், வேறாய், உடனாதல் எனப்படும்.*"[51]

இவ் 'அத்துவித நிலை' குறித்துத் திருமுறை நூல்களில் பரக்கக் காணலாம். அவற்றுட் சில வருமாறு :

"*. . . . முற்றுமாகி வேறுமானான்*
*மேயது முதுகுன்றே*"[52]

"*பண்ணினார் பாட லாகிப்*
*பழத்தினில் இரதமாகி*"[53]

"*பூவில் வாசத்தைப் பொன்னினை மணியை*"[54]

"*என் பொல்லா மணியைப் புணர்ந்தே*"[55]

## உயிரும் திருவருளும்

"*இறைவனின் சிற்சித்தியாகிய அவனது ஆற்றலே திருவருள் எனப்படும். அஃது பதிஞானம், சிவஞானம் எனவும் கூறப்படும். ஆணவத்தில் அழுந்தித் தன்னையும், தன் தலைவனையும் அறியாது தடுமாறுகின்ற உயிர்க்கு, விடுதலை அளிக்கவல்லது*

*திருவருள் ஒன்றே. இத்திருவருளே, இறைவனினின்றும் நீங்காத வேற்றுமைப்படாத 'சத்தி' ஆகும்."*

என்பர் சி.சு. மணி.[56]

*"வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது"*[57]

என்னும் தொல்காப்பிய நூற்பாவுக்குப் ப. இராமநாதபிள்ளை, பின்வருமாறு புதுவிளக்கம் தருவர் :

*"காரணப் பெயர்கள் 'இறை, உயிர், தளை' என மூன்றாம். இவற்றையே 'முப்பொருள்கள்' என்ப. இவற்றை நல்லாசானை யடுத்துக் கற்பதே கல்வியின் முடிநிலை பயன். இம் முடிநிலைக்கோளே, (இத்) தொல்காப்பிய நூற்பாவின் விழுப்பொருளாகும். "யாண்டும் வேண்டிய கல்வி மூன்றிறவாது" - மூன்று முப்பொருள்."*[58]

இம் முப்பொருள்களுள் ஒன்றான (பசு) உயிரைக் குறித்து அருணந்திசிவம் பல்வேறு விளக்கங்களைத் தருவதோடு, உயிர்களிடத்து முதல்வன் காட்டும் திருவருள் பற்றியும் குறிப்பிடுகின்றார் :

*"உயிர் உடம்பின் வேறாயுள்ளது; ஐம்பொறிகளாலும் வேறாயுள்ளது; பிராணவாயுவினும் வேறாயுள்ளது; அந்தக்- கரணங்களினும் வேறாயுள்ளது; உயிர், பலபொருட்கூட்டமுமன்று; அருவத்தன்மை, வியாபகத்தன்மை, நித்தியத்தன்மை, பசுத்துவம் என்னும் இலக்கணங்களை உடையது. இஃது உடல்களைப் பொருந்திப் புண்ணிய பாவங்களைச் செய்து, இன்பதுன்பங்களை நுகரும். உயிர், தானாக அறியாது; தனுகரணாதிகளோடு கூடி நின்று விடயங்களை அறியும்; அஃது, அரசன் அமைச்சர்களோடு கூடிநின்று அரசு செய்தல் போன்றது."*[59]

பொறி, புலன், கரணங்கள் ஆகிய யாவும், உயிரினது உதவியால் விடயங்களை அறிந்தாலும் அவ்வுயிரைத் தாம் அறியா. அதுபோல, உயிர்களும் விடயங்களை முதல்வனது கருணையால் அறிந்தாலும் அம்முதல்வனைத் தாம் அறியா. அங்ஙனம் அறியச் செய்யும் முதல்வனே, அனைத்தையும் அறிந்து உயிர்களுக்கு அறிவித்து, உடன் நிற்பன்.[60]

விளைநிலம் அவரவர் செய்கைக்குத்தக்க பயனைத் தருமாறு போலவும், சூரியன் பக்குவமான தாமரை முகைகளை அலர்வித்தல் போலவும், முதல்வனும் அவரவர் கன்மத்துக்கு ஏற்ப ஏற்றத் தாழ்வான

அறிவையும், பக்குவமான உயிர்களுக்கு வியாபக அறிவையும் கொடுப்பன்.[61]

> *"இறைவன்அருள், சூரியன் ஒளியைப் போன்றது. சூரியனின் ஒளி வானத்தில் ஒரே வகையாகத்தான் வீசுகிறது. ஆனால் அதனைப் பெறுகின்ற பூக்களில் ஒன்று தழைக்கிறது; ஒன்று அரும்புகிறது; ஒன்று மலர்கிறது; ஒன்று வாடுகிறது. அதுபோலவே, இறைவனது அருளும் ஒரே வகையாக உயிர்களுக்கு உணர்த்தும் ஆற்றலைச் செய்தாலும், உயிர்கள் பல்வேறு வகையாகி, அவ்வுணர்த்துதலைப் பெறுகின்றன."*[62]

எனும் இளவழகனார் கூற்று இதனை விளக்குவதாக அமைகின்றது.

உயிர் தானாக அறியும் இயல்புடையதன்று; இவன் அறிவிக்க அறியும் இயல்புடையது.

> *". . . . தானே*
> *அறிந்திடும் அறிவன் அன்றாம்;*
> *அறிவிக்க அறிவன் அன்றே"*[63]

என்பர் அருணந்திசிவம்.

உயிரானது, சகலநிலையில் ஐம்பொறி முதலியவற்றால் அறிவிக்கப்பட்டு அறிதலாலும்; கேவலநிலையிலே ஒன்றும் அறியாது நிற்றலாலும்; இவ்விரு நிலைகளையும் அறியவல்ல முதல்வனே **திருவருளினால்** அப்பொறி முதலியவற்றைக்கொண்டு உயிர்களுக்கு அறிவிப்பன். இதனை அருணந்திசிவம்,

> *"ஒருவனே எல்லாத்தானும் உணர்த்துவன் அருளினாலே"*[64]

என்பதால் குறிப்பிடுவர்.

சிவன், உயிர்களுக்கு உயிர்க்குயிராய் நின்று உணர்த்துவன். அவ்வாறு உணர்த்துவதால் அவன் விகாரி ஆகான்.

முதல்வன் உணர்த்துவதால், உயிர்களுக்கு ஏகதேச அறிவும், அதனால் விடய போகமும், கன்ம ஒப்பில் வியாபக அறிவும் அதனால் பரபோகமும் ஆகிய பயன்கள் கிட்டும்.

முதல்வனின் திருவருட்சத்தியில் உயிர்கட்கு உண்டாகும் நன்மை இது எனக் கூறுவது பின்வரும் பாடல் :

> *"அருளது சத்தியாகும் அரன்தனக் கருளையின்றித்*
> *தெருள்சிவ மில்லை அந்தச்சிவமின்றிச் சத்தியில்லை*
> *மருளினை அருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன்*

*கண்கட்(கு)*
*இருளினை ஒளியா லோட்டும் இரவியைப்போல ஈசன்"*[65]

*"அருள் எனப்படுவது, முதல்வனது சத்தியாம். அச்சத்தியினின்றும் பிரித்தறியப்படும் சிவம் இன்று; அந்தச் சிவத்தினின்றும் வேறாகச் சத்தி என்னும் பொருள் இல்லை. அச்சிவன், கண்களுக்கு மறைப்பைச் செய்யும் இருளைத் தன் கிரணத்தால் ஓட்டி, ஒளியைச் செய்கின்ற சூரியன்போல, நிலைபெற்ற உயிர்களுக்கு அறிவை மறைக்கும் மலமயக்கத்தைத் தனது திருவருளாலே நீக்கி, முத்தியைக் கொடுப்பன்"*

என்பது இதன் பொருள்.

இதனால் முதல்வன் உயிர்கட்குச் செய்யும் பேரருட்டிறம் புலனாகும்.

'சத்து, அசத்து' என்னும் இரண்டையும் அறிவது உயிர். அஃது அவ்விரண்டிற்கும் வேறாய், இரண்டின்பாலும், மலரின் நாற்றம்போல, அதுவதுவாய்த் தோன்றி நிற்றலால் 'சதசத்து' எனப்படும்.[66]

உயிர்கள், சிவன் அறிவிக்க அறிதலானும்; நித்தப் பொருள்களாய் இருத்தலானும், மலத்தின்பற்றுக்கோடுடைய தூலசித்துத் தன்மையும், அவ்வுயிர்களுக்கு உளவாகக் கூறப்படும். முதல்வனோ, உயிருக்கு அறிவுதந்து, கதியிற் செலுத்தும் சத்தாய் - மலமுத்தனாய் - அதிசூக்கும சித்தாய் நிற்பன். தூலப்படுத்தும் அம்மலங்கள் எல்லாவற்றையும், உயிர்கள் பக்குவம் எய்தியபோது, அவ்வுயிர்களினின்றும் தமது **அருளினாலே** நீக்குவன் ஆதலால் உயிர், 'சத்துச்சித்தின்' வண்ணமாம் தன்மையுடையது. இதனை அருணந்திசிவம்,

*"பிறிவிப்பன் மலங்களெல்லாம் பின்னுயிர்க்*
*கருளினாலே"*[67]

என்பதால் குறிப்பிடுவர்.

இறைவன், உயிர்கள்மாட்டுக் காட்டும் கருணையை ஓர் உவமை மூலம் விளக்குகின்றார் அருணந்திசிவம் :

*"மன்னவனின் மகன் ஒருவன் (இளமைப் பருவத்து மடமையால்) வேடரிடத்தே அகப்பட்டு, அவரோடு கூடி, இழிதொழில் செய்து வளர்ந்து (பருவம் வந்தவிடத்து) தன் தந்தையாகிய அம்மன்னனையும் தன்னையும் அறியாது மயக்கமுற்று நிற்க, பின்பு, அம்மன்னவனும், 'நீ என் மகன்' என அறிவுறுத்தி, அவ்வேடரினின்றும் அவனைப் பிரித்துப் பெருந்தகைமையோடும் தான் ஆம் வண்ணம் செய்து*

ஆதரித்தல்போல, அறியாமையால் நெருங்கிய ஐம்பொறிகளாகிய வேடரின் சுழற்சியிற்பட்டு, விடயபோகங்களிலே அழுந்தியிருந்து, தன்னையும் (பக்குவ காலத்துப் பேரின்ப அறிவு தரவந்த) தலைவனையும் அறியாது வருந்தும் அநாதி உயிரை, முதல்வனும் நிலைபெற்ற அருளே திருமேனியாகக் குருவடிவம் கொண்டு எழுந்தருளிவந்து உபதேசித்து, அவ்வைம்பொறிகளினின்றும் நீக்கி, மலங்களின் வலிமையைக் கெடுத்துத் தன் வண்ணமாக்கி மலர்போலும் திருவடிக்கீழ் வைத்து வாழ்விப்பவன்"

இப் பொருள்பட வருவது பின்வரும் பாடல் :

*"மன்னவன்தன் மகன் வேடரிடத்தே தங்கி*
*வளர்ந்து அவனை அறியாது மயங்கிநிற்பப்*
*பின்னவனும் என்மகன்நீ என்றவரிற் பிரித்துப்*
*பெருமையொடும் தானாக்கிப்பேணு மாப்போல்*
*துன்னியஐம் புலவேடர் சுழலிற்பட்டுத்*
*துணைவனையும் அறியாது துயருறும் தொல்லுயிரை*
*மன்னும் அருட்குருவாகி வந்து) அவரின் நீக்கி*
*மலம்அகற்றித் தானாக்கி மலரடிக் கீழ்வைப்பன்"*[68]

இப்பாடல், மெய்கண்டார் அருளிய,

*"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்*
*தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்*
*டன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே"*[69]

என்னும் நூற்பாவை அடியொற்றி அமைந்தது என்பது இங்குக் குறிக்கத்தகும்.

உயிர் வருக்கத்தை மூவகையாகப் பிரிப்பர்; இதுபற்றி முன்னைய இயலிலும் சுட்டப்பட்டுள்ளது.

(1) விஞ்ஞானகலர் - ஆணவமாகிய ஒரு மலம் மட்டும் உடையவர்கள்; (2) பிரளயாகலர் - ஆணவம், கன்மமாகிய இருமலம் உடையவர்கள். (3) சகலர் - ஆணவம், கன்மம், மாயை எனும் மும்மலம் உடையவர்கள். இவருள், விஞ்ஞானகலர் முதலிய இருவருக்கும், 'தீவிரம்' முதலிய இருவகைச் 'சத்திநிபாதம்' நோக்கி, முதல்வன் தாமே உண்மை ஞானத்தை விளக்கி, மலங்களை ஒழிப்பன். சகலருக்கு 'மந்ததரம்' முதலிய நால்வகை சத்திநிபாதம் நோக்கி, ஒரு குருமூர்த்தியை அதிட்டித்து நின்று, தீக்கை செய்து மலத்தை ஒழிப்பன்.[70]

விஞ்ஞானகலருக்கு, உள்நின்று - தன்மையிலும், பிரளயாகலருக்கு, மான்மழுவோடு - முன்னிலையிலும், சகலருக்குக் குருவடிவில் - படர்க்கையிலும் இறைவன் அருளுகின்றான்.

*"சத்திநிபாதம் தருதற்கு இருவினையும்*
*ஒத்துவரும் காலம் உளவாகிப் - பெத்த*
*மலபரிபாகம் வருமளவில் பன்னாள்*
*அலமருதல் கண்ணுற்று அருளி"*[71]

என்னும் குமரகுருபரர் வாக்கு இங்கு ஒப்புநோக்கத்தகும் :

உயிர்கள் பக்குவம் எய்தியவிடத்து, முதல்வன் குருவடிவாய் எழுந்தருளி வந்து, அத்துவசுத்தியினால் அவ்வுயிர்களின் சஞ்சித வினையையும், ஞானத்தால் ஆகாமிய வினைகளையும், ஆணவ மலத்தையும் ஒழிப்பன். பிராரத்தவினை அனுபவத்தால் ஒழியும்.

இவண், மறைமலையடிகள் கூறும் கருத்தைச் சுட்டுவது பொருத்தமாகும்.

*"மயங்கி வருந்தும் உயிர்களுக்கு, அவ்வுயிர்களுள் உயிராய் மறைந்துநின்று, அருள்புரிந்துவரும் முதல்வனே, இரக்கம் மிகுதியால் குருவடிவில் போந்து, அவ்வியல்புகளை உணர்த்த, அதனால் மெய்யுணர்வு தோன்றப் பெற்று, உயிர்கள் இறைவன் திருவடியினைத் தலைக்கூடும்."*[73]

இத்தகைய உயிர்கட்கு முதல்வன் செய்யும் கருணை குறித்து அருளாளர்கள் பலவாறு பாடியுள்ளனர் :

*"பத்தர்கட்கு அருளும் வைத்தார்"*[74]

என்பது அப்பர் வாக்கு.

*"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி . . . "*[75]

என உயிர்கள் கொள்ளும் பிறவிகள் குறித்து அடுக்கிக்கொண்டே போவார் மணிவாசகர்; மேலும் இவர்,

*"அன்றே என்றன் ஆவியும் உடலும்*
*உடைமை எல்லாமும்*
*குன்றே அனையாய் என்னை ஆட்கொண்ட*
*போதே கொண்டிலையோ"*[76]

என்றும் கூறுவது, உயிருக்கு முதல்வன் காட்டும் திருவருளை உட்கொண்டேயாம். இவற்றைக் கருத்திற்கொண்டு,

*"ஆணவத்தின் வலியைக் கெடுத்து, ஆன்மாவை இறைவனடியிற் சேர்த்தற்குக் கருவியாக இறைவனால்*

*கொடுக்கப்பட்டதே இந்த உடம்பு; இந்தப்பெற்றதொன்றே மனிதர்மாட்டு இறைவன் வைத்திருக்கும் அருட்பெருக்கைப் புலப்படுத்தப் போதிய சான்றாம்"*[77]

என்பர் ச. சாம்பசிவனார்.

## பாச நீக்கமும் திருவருளும்

*"முப்பொருள்களுள் (இறை, உயிர், தளை) தளை மூவகைப்படும். அவை, மலம், கன்மம், மாயை. மலத்தின் காரியம் - மறைப்பு; கன்மத்தின் காரியம் - இருவினை; மாயையின் காரியம் - உலகுடற் பொருள்கள். இம்மூன்றும் காரியப்படுவன, கண்ணுதலோனின் பெருந்தண்ணளியாம் என்க. காரியப்படுத்தும் கண்ணுதலோன் என்றும் ஒருபெற்றித்தாய் நின்றருள்வன். இவை, காரியப்படுவன, ஆருயிர்களின் நன்மையின் பொருட்டேயாம்"*[78]

என்பர் ப. இராமநாதபிள்ளை.

"இம்மூன்று பொருள்களும் அநாதி" என முன்னைய இயலில் சுட்டப்பட்டுள்ளது. இதுகுறித்துச் சோமசுந்தரத்தம்பிரான் கூறுவது இங்குக் குறிக்கத்தகும் :

*"பதியாகிய கடவுள் என்று உண்டோ அன்றே பசுவாகிய உயிரும், அவ்வுயிர்களைப் பிணித்துள்ள பாசமும் உண்டு என்பது சைவசித்தாந்தம் கூறும் முடிந்தமுடிபு. இவ்வாறு கூறுவதனால் இவை மூன்றும் சமமானவை எனல் தகாது. இறைவனே முதற்பொருள்; தகுதியால் வெவ்வேறு இயல்புடையன."*[79]

ஆனால் இம்முப்பொருள்களிலும் பதியே எஞ்சிய இரண்டின்மேல் ஆதிக்கமும் ஆணையும் கொண்டுள்ளது என்பதையும் அறிதல் வேண்டும்.[80]

இம்மூன்றனுள், 'பாசம்' என்னும் 'தளை'யானது 'ஆணவம் கன்மம் மாயை' என மூவகைப்படும் என்பது முன்னரும் விளக்கப்பட்டது. இவற்றில் ஆணவமலத்தின் இலக்கணமாக அருணந்திசிவம் கூறுவது வருமாறு :

*"ஒன்றதாய் அநேகசத்தி யுடையதாய் உடனாய் ஆதி*
*அன்றதாய் ஆன்மாவின்தன் அறிவொடு தொழிலைஆர்த்து*
*நின்றுபோத் திருத்து வத்தை நிகழ்த்திச் செம்பினிற்*
*களிம்பேய்ந்து*

*என்றும்அஞ் ஞானங்காட்டும் ஆணவம் இயைந்து நின்றே''*[81]

ஆணவமலம் ஒன்றே; ஆயினும் அதன்சத்திகள் எண்ணிறந்தன. உயிர் என்றுள்ளதோ அன்றே ஆணவமலமும் அதனோடு சகசமாயுள்ளது. அநாதியேயுள்ளது. கேவலத்தில், மலசத்தி உயிரின் அறிவையும் தொழிலையும் ஒருங்கே மறைக்கும். அந்நிலையில், உயிர், இருளிடைப்பட்ட கண்போல, ஒன்றையும் அறிய இயலாதிருக்கும். இங்ஙனம் மறைக்கும் சத்திக்கு 'ஆவாரக சத்தி' என்று பெயர். சகலத்தில் உயிரானது விளக்கின் துணைபெற்ற கண்போல, ஏகதேச விளக்கம் பெற்று, அவ்வறிவைக் கொண்டு போகம் நுகரும்போது, அம்மலசத்தி, அவ்வுயிரின் அறிவை விபரீதமாக்கி, 'இப்போகத்தை நுகர்பவன் நானே' என எண்ணச் செய்யும். இவ்வாறு செய்யும் சத்திக்கு 'அதோநியாமிகாசத்தி' என்று பெயர்.

களிப்பானது செம்புடன் உள்ளும் புறம்பும் கலந்து, வெட்டுவாய் தோறும் நின்றாற்போல, மலமும் உயிரோடு கலந்து நிற்கும்.

மாயையானது, உயிர்களுக்கு வேறாய் நின்று, அவற்றின் இச்சா ஞானக் கிரியைகளை விளக்கும். ஆனால் ஆணவமலமோ, உயிர்களோடு ஒன்றித்து நின்று, அவ் இச்சா, ஞானக் கிரியைகளை மறைக்கும்.[82]

உயிரின் இச்சா ஞானக் கிரியைகளை மறைப்பது ஆணவ மலமே. அஃது உயிரோடு இயைந்து நிற்றலால் உயிரின் குணம் போன்ற ஒன்றாகச் சொல்லலாம். ஆயினும், ஆணவ இருள் நீங்கும்படி மாயாகாரியங்கள் தோன்றுவன வாதலின், ஆணவமும், மாயை ஆகிய இரண்டும் இருளும் ஒளியும்போல வேற்றுமை பெரிதுடையனவாம்.[83]

இவற்றுள், இறைவனின் கருணைத்திறம் குறித்தும் ஆணவ மலத்தின் இயல்பு குறித்தும் கி. பழனியப்பனார் கூறுவது இவண் குறிக்கத்தகும் :

*"இறைவன் படைப்புத் தொழிலே மேற்கொண்டான் . . . இறைவன் கருணைகாட்ட, உயிர்களுக்கு என்ன நேர்ந்தது? எப்படி நேர்ந்தது? உயிர், இயல்பாகவே அறிவுடையதாயினும் அவ்வறிவைப் பயன்படுத்த முடியாத நிலையில் இருந்தது. அவ்வாறு அதன் அறிவு விளக்கத்தைத் தடை செய்தது அறியாமையாகும். அவ் அறியாமையைப் 'பேதைமை' என்றும், 'ஆணவம்' என்றும் கூறுவர். உயிரின் அறிவு விளக்கத்திற்குத் தடையாக உள்ளது ஆணவம். ஆணவம் இருள் போன்றது. அவ்விருளில் உயிர்கள் கிடந்து உழலுகின்றன. நமக்கு அறிவு உண்டு என்பதையே*

*உயிர்கள் அறியமுடியாது கிடக்கின்றன. உணர்வற்றுச் செயலற்று உதவியற்றுக் கிடக்கும் இவ் இழிநிலையைத் தனிநிலை அல்லது கேவலநிலை என்பர். . . . கேவலநிலையில் உள்ள உயிர்களுக்கு உதவிபுரிய அங்கு இறைவனைத்தவிர வேறு ஒருவரும் இல்லை."[84]*

மும்மலங்களும் உயிரைப் பந்திக்கும் முறைமை குறித்து அருணந்திசிவம் கூறுவது வருமாறு :

*"மும்மலம் நெல்லினுக்கு முளையொடு தவிடு மிப்போல்*
*மம்மர்செய் தணுவி னுண்மை விடிவினை மறைத்து நின்று*
*பொய்ம்மைசெய் போகபந்த போத்திருத் துவங்கள்*
*பண்ணும்"[85]*

உமி, தவிடு, முளைகள் ஆகிய மூன்றும், அரிசியின் உண்மை வடிவை மறைத்திருத்தல்- போல, ஆணவம், மாயை, கன்மங்கள் உயிரின் உண்மை வடிவை மறைத்திருக்கும்.

| உவமை | | பொருள் |
|---|---|---|
| நெல் | - | மலங்களோடு கூடிய உயிர் |
| உமி | - | ஆணவமலம் |
| தவிடு | - | மாயை |

உமியானது, அரிசியின் சொரூபம் தெரியவொட்டாது அதனை முழுவதும் மறைக்கும். தவிடு அரிசியின் சொரூபத்தைச் சிறிது விளக்குதல்போல, மாயையும் ஆன்ம அறிவைச் சிறிது விளக்கி, ஏகதேச அறிவை உண்டாக்கும். முளை தோன்றுமிடத்து, அரிசியின் சொரூபம் விளங்காதவாறுபோலக் கன்மமாகிய நல்வினை தீவினைகள் செய்யப்படுமிடத்து, உயிர், அவ் இருவினையிலே மதி மயங்கியிருத்தலால், அதன் சொரூபம் விளங்காதிருக்கும்.

இவ்வாறு மறைத்தலன்றிப் பொய்யான போகத்தையும் பந்தத்தையும், வினை முதலாம் தன்மையையும் உண்டாக்கும்.

இம்மூன்று மலம் தவிர, மாயேயமலம், திரோதாயிமலம் என மேலும் இரு மலம் உண்டு. 'அசுத்தமாயா காரியம்', மாயேயமலம் எனப்படும். மும்மலங்களையும், தொழிற்படுத்தி மலபரிபாகம் வருவிக்கும் சிவசத்தி, 'திரோதாயி' எனப்படும். இவ்வைந்து மலங்களும் உயிர்களைப் பொருந்தியிருக்கும்.[86]

'ஆணவம், கன்மம், மாயை' எனப் 'பாசம்' மூவகைப்படும் என்று முன்பே சொல்லப்பட்டது.

உயிரைத் துன்புறுத்தும் இப்பாசப்பிணிப்பு அகல முதல்வனின் திருவருள் வேண்டும். இதுகுறித்து க. வெள்ளைவாரணர் கூறுவது வருமாறு :

*"ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களும் உயிர்களை அநாதியே பற்றியுள்ளன என்பதும் முற்றுணர்வும் வரம்பிலாற்றலும் பேரருளும் உடைய இறைவன், மன்னுயிர்களைத் தோற்றமில் காலமாகப் பிணித்துள்ள ஆணவமலப் பிணிப்பினை அகற்றுதற் பொருட்டு, உடல், கருவி, உலகு நுகர் பொருள்களைப் படைத்துக் கொடுத்து மன்னுயிர்களை வாழ்வாங்கு வாழச் செய்து, பாசப் பிணிப்பகற்றி மீண்டும் பிறவா நெறியாகிய வீடுபேற்றினை வழங்கியருள்கின்றான் என்பதும் மக்கள் தம்மைப் பிணித்துள்ள பாசப்பிணிப்பு அகல அருளேயுருவாகிய இறைவனை அன்பினால் மறவாது வழிபடுதல் வேண்டும் என்பது சைவசித்தாந்த நூல் முடிபாகும்."*[87]

வினை, மூவகையில் வைத்துப் பேசப்படும். அவை : ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம். இவற்றின் விளக்கம் முன்னரே தரப்பட்டுள்ளது.

முற்பிறவிகளிற் செய்யப்பட்டுக்கிடந்த புண்ணிய பாவங்களின் பயனாகிய இன்பதுன்பங்களை நுகரும்பொருட்டு, உயிர்கள் இவ்வுலகில் பிறந்து இறந்து மீண்டும் பூமிக்கு வருதலும், சுவர்க்க நரகங்களுக்குச் செல்லுதலுமுடையவாயிருக்கும். அவ்வாறு, நிலைபெற்றுள்ள புண்ணிய பாவங்களின் பயன்களை மருத்துவனும் அரசனும்போல, முதல்வன் தன் ஆணையால் கூட்டுவன்.[88]

உடலும் வினையும், வித்தும் மரமும்போலக் காரணமாய்த் தொன்று தொட்டுப் பிரவாக நித்தமாய் (அதாவது தோன்றி அழிந்து தொடர்பாய் வருதல்) வரும்.[89]

உணவின் பொருட்டு விளைந்த தானியம் முதலியவை, பின்பு உணவுமாய், வித்துமாய்ப் பயன்படுதல்போல, 'நாம்' என்ற முனைப்போடு செய்யப்படும் இதமகிதங்கள் புண்ணிய பாவங்களாய் விளைந்து பின்னர் இன்பதுன்பப் பயன்களைத் தருவதாயும், அவற்றை அனுபவிக்குமிடத்து உண்டாகும் இதமகிதங்களுக்குக் காரணமாயும் இருக்கும்.

உயிர்களுக்கு நன்மை செய்தல் 'இதம்'; தீமை செய்தல் அகிதம்'. அவ்விரண்டையும் அறியவல்ல முதல்வனே அவற்றிற்கேற்ப இன்பதுன்பங்களாகிய பயனைத்தருவன்.[90]

முதல்வன் இதமகிதங்களை ஏற்றுக் கொள்வதற்குக் காரணம், உயிர்கள் முத்தியடைதற் பொருட்டு அவர்கள்மேல் வைத்த **திருவருளேயாம்**. இதம் செய்வோருக்கு அனுக்கிரகத்தையும், அகிதம் செய்வோருக்கு நிக்கிரகத்தையும் செய்வன்.

முதல்வன், அனுக்கிரகம் செய்தலேயன்றி, அகிதம் செய்தவரைத் தண்டித்தலும், அவர்கள்மேல் வைத்த கருணையினாலாம். நீதி தவறிச்

செய்யப்பட்ட குற்றங்களைக் கண்டித்து நீக்கி, அச்சம் உண்டாகச் செய்து, 'இம்முறைமைப்படி இங்கே அறத்தைச் செய்வாயாக' என உணர்த்துவன். எந்த முறையானும், முதல்வனது செயல் எப்போதும் கருணையேயாம்.

இதனை உணத்துவது பின்வரும் பாடல் :

*"நிக்கிர கங்கள் தானும் நேசத்தால் ஈசன் செய்வ(து)*
*அக்கிர மத்தால் குற்றம் அடித்துத்தீர்த் தச்சம்பண்ணி*
*இக்கிர மத்தினாலே ஈண்டறம் இயற்றி டென்பன்*
*எக்கிர மத்தினாலும் இறைசெயல் அருளே யென்றும்"*[91]

இதனை ஓர் உவமைமூலம் விளக்குகின்றார் அருணந்திசிவம். தந்தைதாயர், தம் சொல்லின் வழி ஒழுகாத புதல்வர்களைத் தண்டித்தல் போல, முதல்வன் நிக்கிரகஞ்செய்தல் செயல்வகையில் வெகுளி போலத் தோன்றினும் கருத்துவகையில் **அருளேயாம்**.[92]

தனுகரணங்களையின்றி அறியமாட்டாத சிற்றறிவுடைய உயிர், தானாக வினைப்பயனையறிந்து கூட்டிக் கொள்ளமாட்டாது, எனவே, அளவிடற்கு அரிய, சுதந்திர அறிவுடைய முதல்வன், உயிர்கள் மேற்கொண்ட **திருவருள்** காரணமாகத் தனது சத்தியால் உலகு, உடல் முதலியவற்றை அவ்வுயிர்களுக்குப் பொருத்துவன்.

இதனை, அருணந்திசிவம்,

*"அலகிலா அறிவ னாணை அணைத்திடும் அருளி னாலே"*[93]

என்பதால் குறிப்பிடுவர்.

பாவம் செய்யின், முதல்வன் துன்பத்தைக் கொடுத்து, அப்பாவத்தை ஒழிப்பன்; புண்ணியம் செய்யின், இன்பத்தைக் கொடுத்து, அப்புண்ணியத்தைத் தீர்ப்பன். இவ் இன்பதுன்பங்கள் வினைநோய்க்கு மருந்தாகும். முதல்வன் மருத்துவனாவன். மருத்துவன், நோய்களை அறுத்துக் கீறியும், சில நோய்களைச் சர்க்கரையும் பாலும் மருந்தோடு கலந்து கொடுத்தும் தீர்ப்பன். அதுபோல, முதல்வனும் இன்ப துன்பங்களாகிய மருந்தைக் கொடுத்து இருவினைநோயை மாற்றுவன்.[94]

*"ஆணவமலச் சார்பான ஆன்மாக்கள் செய்யும்*
*வினைகளின் தொகுப்பே கன்ம மலமென்னும்*
*பெயர்க்குரித்தாவதாம்"*[95]

எனும் மறைமலையடிகள் கூற்றும்;

*“மூலகன்மத்தின் தொடர்பாய் நிகழும் இரு வினைகளே கான்மியம்”*[96]

எனும் பொ.முத்தையபிள்ளை கூற்றும் இவண் குறிக்கத்தகும்.

சைவத் திருமுறைகளில் இக் ‘கன்மம்’ அல்லது ‘வினை’ குறித்து வரும் செய்திகள் பலவாம்.

சம்பந்தர் தேவாரத்தில், ‘வினை’, ‘முந்தி நின்ற வினைகள்’ ‘செடிபடு வினைகள்’ ‘மேல்வினை’[97] என்ற குறிப்புக்கள் வந்துள்ளன.

அரவு தீண்டி இறந்த பூம்பாவையை உயிர்ப்பித்த போது, சம்பந்தர் பாடிய ‘மட்டிட்ட புன்னை’[98]என்ற பதிகம், ‘ஆகாமியம், பிராரத்தம், சஞ்சிதம்’ எனும் மூன்றும் கழிவதைக் குறிக்கும் என்பர் வை. இரத்தின சபாபதி.[99]

அப்பர் தேவாரத்தில், ‘முன்பிருந்த வினை’, ‘கடுவினை’, ‘பண்டைவல்வினை’[100] முதலாயின வருதல் காணலாம்.

இவ்வாறே சுந்தரர் தேவாரத்திலும், ‘இங்கே என் வினையை அறுத்திட்டு’ ‘முன்னைச் செய்வினை’, ‘வல்வினை’[101] என வருதல் காணலாம்.

திருவாசகத்தில் வினை பற்றிய செய்திகள் நிறைய உள்ளன.

*“சிந்தை மகிழச் சிவபுராணந் தன்னை*
*முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன்யான்”*
*“பொல்லா வினையேன்”*[102]

என்பன சில சான்றுகள்.

சேக்கிழார் அருளிய பெரியபுராணத்தில் வரும் ‘வினைக்’ கோட்பாடுகளில் ஒன்று மட்டும் இவண் சுட்டத்தகும் :

*“செய்வினையுஞ் செய்வானும் அதன்பயனுங் கொடுப்பானும்*
*மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள் எனக்கொண்டே*
*இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக் கில்லைஎன*
*உய்வகையாற் பொருள்சிவன் என்றருளாலே உணர்ந்தறிந்தார்”*[103]

*“வினைகள் அறிவற்றவை; ஆதலின் அவை, தாமாகவே, தம்மைச் செய்தவரைச் சென்றடைந்து பயன்தரமாட்டா! அவை, எங்கோ ஓர் இடத்தில் என்றோ ஒருகாலத்தில், ஏதோ ஓர் உடம்பு கொண்டு செய்யப்படுகின்றன. செய்யப்பெற்ற செயல்*

அப்பொழுது நிகழ்ந்து அழிந்து விடுகின்றது. எனவே, அது பின்னர் என்றாவது, எங்காவது, எந்த உடம்பிலாவது பயன்தர இயலாது. அதனால் இறைவனே அவரவர் செய்யும் வினையை நடுவண்நின்று, அவ்வவ் வினைக்குரிய பயனை, உரியகாலத்தில் உரிய இடத்தில் உரிய உடம்பில் கூட்டுவிப்பன். எவ்வுயிர்க்கு எப்பயனை எப்போது சேர்ப்பிக்க வேண்டும் என்பது இறைவனுக்குத் தெரியுமாதலின், அவ்வுயிர்க்கு அப்பயனை அவ்விடத்தில், அப்போது தப்பாமல் சேர்ப்பிப்பன். அங்ஙனமாயின், 'இறைவன் மிகக் கொடியவன் போலும்' என்ற எண்ணம் எழுதல் இயல்பு. அஃதன்று! உயிர்கள் மீது இறைவன் கொண்டுள்ள பெருங்கருணையே காரணம்"[104]

என்பர் ச.சாம்பசிவனார்.

இக்கூற்றுக்கு அரண் செய்வதாக அமைவது ஆ.ஆனந்தராசன் கூறும் கருத்து :

"உயிர்கள், தாம் செய்த வினைகளின் பயனைத் தாமே எடுத்துக்கொள்ளும் வல்லமையைப் பெற்றிருந்தால் நிகழ்வதே வேறு. அவை நல்வினையின் பயனை மட்டுமே விரும்பி எடுத்துக்கொள்ளும்; தீவினையின் பயனைக் கொள்ளாது விடுக்கும். மேலும், வலிய உயிர்கள் எளிய உயிர்களின் நல்வினைப் பயன்களையும் தட்டிப் பறித்து எடுத்துக் கொள்ளும் . . . அவ்வவ்வுயிரின் வினைப்பயனை அவ்வவ்வுயிர்களுக்கு மிகாமலும் குறையாமலும் ஒப்பநாடி அதற்குத்தக வழங்குதல் இறைவன் கருணை . . ."[105]

**மாயை**

"மருத்துவனுக்கு நோயாளியின் நோய் பகைப்பொருளாகும். மருந்து, மருந்துக்கலம், மருந்துறை, மருந்திருக்கை முதலியன மருத்துவனுக்கு நோய் நீக்குவதற்கு வேண்டிய நேயத் துணைப் பொருளாகும்.

அதுபோல் மாயையும் வினையும் ஆருயிர்களின் மலநீக்கத்தின் பொருட்டு ஆண்டவனுக்குத் துணைப் பொருள்களாகும்"[106]

என்பர் ப. இராமநாதபிள்ளை.

இம் 'மாயை' குறித்துக் க.வச்சிரவேல் முதலியார் கூறுவது இவண் குறிக்கத்தகும் :

> *"இருட்டில் உள்ள கண்ணுக்குப், பொருள்களைக் காட்டும் விளக்குப்போல, நம் அறிவை விளக்கி வரும் உடம்பும், சூழ்நிலையுமாகிய உலகைத் 'தனு, கரணம், புவனம், போகம்' என நான்கு வகைப்பட வைத்து விளக்குவது சைவ நூல் மரபு. தனு - உடம்பு.* (The physical aspect of the body) *கரணம் - மனம் முதலிய அகக் கருவிகள், புவனம் - உடம்புக்கு ஆதாரமாக உள்ள நிலம்; போகம் - நிலத்தில் உள்ள நுகர்ச்சிப் பொருள்கள். காணப்படும் பொருள்கள் எல்லாம் இந்த நான்கு வகையில் ஒன்றாக அடங்கும். இவை அனைத்தும் 'மாயேயம்' என்ற சொல்லால் குறிக்கப்படும்.*
>
> *மாயேயம் - மாயையின் காரியம். காணப்படும் பொருள்கள் எல்லாவற்றுக்கும் முடிந்த முதற்காரணமாக* (The ultimate substantial cause) *உள்ள பொருள் 'மாயை' எனப்படும்."*[107]

எனினும், "ஆணவத்தின் மயக்கும் தன்மைக்கு ஏதுவாதல் பற்றி, மாயையும் மயக்கும் தன்மையுடையதாகக் கூறப்படும்"[108] என்பர். ஆ.ஆனந்தராசன்.

இத்தகு மாயை குறித்து அருணந்திசிவம், தம் சித்தியாரில் விரிவாக எடுத்துரைக்கின்றார்.

உலகிற்கு முதற்காரணம் மாயை; அதனின்றும் காரியமாகிய பிரபஞ்சம், சற்காரிய முறைப்படி தோன்றி ஒடுங்கும். அது உதிர்ந்த இலைகள் சத்திரூபமாய்ப் பூமியில் கிடந்து, பின் இலை முதலியனவாய் வருதல் போலாம்.

பிரபஞ்சமாகிய காரியத்துக்கு வேண்டப்படும் காரணங்கள் மூன்றாம். அவை : முதற்காரணம், துணைக்காரணம், நிமித்தகாரணம். மாயை - முதற்காரணம்; சிவசத்தி - துணைக்காரணம்; சிவபெருமான் - நிமித்தகாரணன்.

பரமசிவனது அருளால் சுத்தமாயையிலிருந்து 'சூக்குமைவாக்கு' முதலிய சுத்தப்பிரபஞ்சமும், அசுத்தமாயையிலிருந்து 'அராகமாதி' சுத்தா சுத்தப்பிரபஞ்சமும், பிரகிருதி மாயையிலிருந்து 'குணதத்துவம்' முதலிய அசுத்தப்பிரபஞ்சமும் தோன்றும். உயிர்கள் சங்காரகாரணனிடத்திலே ஒடுங்கி, மீளவும் தோன்றுவதற்குக் காரணம் ஆணவமலமாம். அவை ஒடுங்குமிடத்து அவற்றோடு கூடிய தனுவாதி காரியங்கள் அவற்றின்

காரணமாகிய மாயையிலே ஒடுங்கும். முதல்வன் அவற்றை மீளவும் தோற்றுவிப்பன்.[109]

உயிர்களைப் பொருந்திய மலகன்மங்கள் நீங்குதற்பொருட்டு, முதல்வன் தனுகரணாதிகளைக் கொடுப்பன். அம் மலகன்மங்கள் நீங்கியவிடத்துப் பரஞானத்தை விளக்கி முத்தியைக் கொடுப்பன். இது, முதல்வனின் பேரருட்டிறமாம்.

*"........அநாதி மலங்களிம் மருந்தால் தீர்த்துப்*
*பரகதி யதுவுந்தந்து பாதபங் கயமும் சூட்டும்"*[110]

என்பர் அருணந்திசிவம்.

இதற்கு இவர் காட்டும் ஒர் உவமை வருமாறு :

*"அழுக்கைக் கொண்டு அழுக்கை நீக்கும் தொழிலாளியைப் போல முதல்வனும் மல கன்மங்களை மாயேய மலத்தாலே நீக்குவன்"*[111]

என்கின்றார்.

பிரபஞ்சமனைத்தும் 'தத்துவசொரூபம்' என்று கூறும் அருணந்திசிவாசாரியர்,

"சுத்ததத்துவம் - ஐந்து; அசுத்ததத்துவம் - 31, ஆக தத்துவம் - 36" என்று கூறி இவற்றை விரிவாகக் கூறுவர்.[112]

உயிரானது, ஐந்து மலங்களையும் பொருந்திப் பிறப்பு இறப்பிற்பட்டுக் கொள்ளிவட்டமும் காற்றாடியும் போல் மூன்று உலகங்களிலும் கணப்பொழுதில் சுழன்று, திரிந்து, இறைவனின் ஆணையின் வண்ணம் இயங்கும்.

இம்மலங்களைப் போக்கி, சிவப்பேறு பெறுவதற்கான வாயிலும், வழியும் கூறுகின்றார் அருணந்தி சிவாசாரியர்.

மானிடப் பிறவியில் வந்து பிறத்தல் அரிதினும் அரிது. அது, பெரியகடலைக் கையினால் நீந்திக் கரையேறியவனின் செயல் போன்றது என்கின்றார் இவர்.

அவ்வாறு மானிடப்பிறப்பு எய்தினும், நல்ல நாட்டில் பிறத்தல், மிக்க புண்ணியத்தினாலேதான் உண்டாகும். நல்ல சாதியில் பிறத்தல், புறச் சமயங்களில் செல்லாது நிற்கும் பேறு பெறுதல் அதனினும் அரிது.[113]

"சைவசித்தாந்த நெறியை அடைதல் அரிது; மலங்களைப் போக்கி, வீடடைதற்குச் சித்தாந்த நெறி - வாயில்; சிவனை வழிபடல் - உபாயம்" என்று இயம்ப வந்த இவர்,

"வாழ்வெனும் மையல்விட்டு வறுமையாம் சிறுமைதப்பித்
தாழ்வெனும் தன்மையோடும் சைவமாம் சமயம்சாரும்
ஊழ்பெற லரிது சால உயர்சிவ ஞானத் தாலே
போழிள மதியி னானைப் போற்றுவார் அருள் பெற
றாரே"[114]

என்கின்றார்.

"செல்வத்தால் உண்டாகும் மயக்கத்தை ஒழிக்க வேண்டும்; வறுமையால் உண்டாகும் சிறுமையினின்று நீங்கவேண்டும்; வணங்கும் தன்மை கொள்ளவேண்டும்; 'சைவ சித்தாந்தம்' என்னும் நெறியைப் பொருந்தும் புண்ணியத்தைப் பெறவேண்டும்; இவையெல்லாம் அரியன. இவ் அரியன பெற்று, மேலான சிவனருளாலே இளம்பிறையணிந்த சிவபெருமானை வழிபட-வேண்டும்; அவ்வாறு வழிபடுவாராயின் அவனருள்பெற்று, மலங்களைப் போக்கி, முத்திப்பேறு பெறுதல் உறுதி"[115]

என, உயிர்கள்மாட்டு வைத்த பெருங்கருணையால் திருவாய் மலர்ந்து அருளியுள்ளார் அருணந்திசிவம்.

"இறைவன் திருவடிகளையே நினைந்தும் உணர்ந்தும் நெகிழ்ந்தும் உருகிநிற்கும் போது ஆணவக்காரிருள் அகன்று விடுகின்றது. அல்லற்படுத்தும் ஐம்புலன்களும் புன்னெறி உழலும் போக்கினை விடுத்து நன்னெறியில் நிற்கின்றன. சஞ்சிதச் சேற்றில் முளைத்தெழுந்த பிராரத்தம் என்னும் பைங்கூழில் ஆகாமியம் என்னும் வித்துக்கள் விளையாது போகின்றன"[116]

என்கின்றார் மா. அமிர்தலிங்கனார்.

சைவத் திருமுறைகளில் இம் 'மாயை' பற்றிய செய்திகள் பல உள்ளன.

சம்பந்தர் தேவாரத்தில் 'புலனைந்தும் பொறிகலங்கி', 'புவிமுதல் ஐம்பூதம்', 'உரைசேரு மெண்பத்து நான்கு நூறாயிர யோனிபேதம்' என்றும்; அப்பர் தேவாரத்தில் 'புலன்களைப் போக நீக்கிப் புந்தியை'; 'நீருமாய்த் தீயுமாகிப், 'மண்ணிடைக்குரம்பை', 'அஞ்சினால் இயற்றப்பட்ட ஆக்கை' என்றும்; சுந்தரர் தேவாரத்தில், 'பொறிவிரவு'; 'மாயமாய மனங்கெடுப்பானை'; 'வஞ்ச நெஞ்சனை' என்றும் வருவன சில சான்றுகள்.[117]

திருவாசகத்தில், 'மாயவாழ்க்கை'; 'புன்புலால்யாக்கை', 'புலன்கள் திகைப்பிக்க'; 'பூதங்கள் ஐந்தாகிப் புலனாகி'[118]என்பனபோல் வருவன பலவாம்.

திருமந்திரத்தில், 'மாயை எழுப்பும் கலாதி'; 'மாயையில் வந்த புருடன்'; 'மாயையிற் சேதனன்'; 'மாயை கைத்தாயாக மாமாயை யீன்றிட' என்றும்;[119] பெரியபுராணத்தில், 'ஊன் அடைந்த உடம்பின் பிறவி' புலன்கொள் இன்றமிழ்'; 'மனம் தளரும் இடர்' என்றும்[120]வருதல் இவண் சுட்டத்தகும்.

## சிவப்பேறும் திருவருளும்

உலக முழுமுதற் பரம்பொருளை, 'இறைவன், கடவுள், முதல்வன்' என ஆன்றோர் குறிப்பிடுவர். சிவநெறியாளர்கள், இறைவனைச் 'சிவம்' என்னும் செந்தமிழ்ச் சொல்லால் கூறுவர்.

இருக்குவேதத்தில் ஓரிடத்தில் மட்டும் 'சிவ' என்ற சொல், 'மங்கலம்' என்ற பொருளிலே இடம் பெற்றுள்ளதாகவும்;[121]

'சிவ' என்ற தமிழ்ச் சொல், யசுர்வேத காலத்திலேயே வடமொழியில் வழங்கியதாகவும்;[122]கூறுவர் அறிஞர்.

'சிவ' என்பதிலிருந்து 'சிவன்' எனும் சொல் வந்தது என்று கர்மார்க்கர் எனும் அறிஞர் கூறுகிறார்.[123]

'சிவம்' என்ற சொல்லுக்கு 'மூர்த்தி, சித்துருவாகிச் சுயம்பிரகாசமாய் நிற்கும் சிவசொரூபம், சிவதத்துவம்' என உரை கூறுகிறது, 'சமயச் சொல்லகராதி'[124]

'சிவம்' என்னும் சொல்லுக்கு 'நன்மை. மங்கல(ள)ம், முத்தி' எனப் பொருள் கூறினும், 'சிவன்' என்னும்போது சிறப்பாக ஒலிக்கப்படுவது 'செம்மை' என்ற பொருளே என்கின்றார் ப.அருணாசலம்.[125]

'சிவம்' என்ற சொல்லுக்கு 'மங்கலம் உண்டாக்குபவன்' என்பது பொருள். "தன்னை வழிபடுவோர்க்கு என்றைக்கும் மங்கலம் செய்பவன் சிவன்" என்கிறார் சி.எம். இராமச்சந்திரன் செட்டியார்.[126]

> *"நன்மையே வடிவானது - நிறைவான நன்மையை உடையது - தீமையே இல்லாதது - கடவுட் பொருள் என்னும் கருத்து, சிவம் என்னும் பெயரால் பெறப்படுகின்றது"*[127]

என்பர் சி.அருணைவடிவேலு முதலியார்.

> *"பொதுவகையில் இறைவனை 'இறை' என்பது போலச் சிவனைச் 'சிவம்' என்று கூறுவது வழக்கு"*[128]

என்பர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை.

**சிவம் என்பதற்கு க.வச்சிரவேலு முதலியார் தரும் விளக்கமும் இங்கு எண்ணத்தக்கது :**

*"சிவம் என்னும் பெயர், முதற்கடவுள் எத்தகைய மாறுதலும் எய்துதல் இன்றித் தூய பேரின்பப் பொருளாய் அனுபவப்படும் தன்மையை உணர்த்துவதாகும். இது 'செம்பொருள்' என்னும் சொல்லோடு ஒத்த பொருள் உடையது. முதல்வன் உலகப் பொருள்களுள் ஒன்றல்லனாய்ப் பெண், ஆண், அலியெனும் பெற்றியனாய் நிற்றலின், அவன் இந்நெறிக்கண் 'சிவன்' என ஆண்பாற் சொல்லாலும், 'சிவை' (சிவா) எனப் பெண்பாற் சொல்லாலும் 'சிவம்' என ஒன்றன்பாற் சொல்லாலும் ஒப்ப வழங்கப்படுதல் அறியத்தக்கது."*[129]

**"அன்பே சிவமாவது"[130] என்பர் திருமூலர், எனினும் தத்துவமுறையில் கூறும்பொழுது, 'சிவம்' என்பதைப் 'பதி' என்றே சைவ சித்தாந்தம் குறிப்பிடும். 'பதி' என்பதற்குக் 'காப்பவன்' என்று பொருள். தன்கீழ் உள்ளாரை நல்லவகையில் ஆவன செய்து காப்பவன் தலைவன் ஆதலின் 'பதி' என்பது 'தலைவன்' என்ற கருத்தில் வழங்கப்படுகின்றது.[131]**

**'சிவம்' என்னும் செந்தமிழ்ச் சொல்லடியாய்ப் பிறந்து 'சிவனோடு தொடர்புடைமை' என்ற பொருளில் வழங்குவது 'சைவம்' என்பர் கா. சுப்பிரமணியபிள்ளை.[132]**

*"தெய்வம் சிவனே சிவனருள் சமயம் சைவம் சிவத்தோடு சம்பந்தம்"*[133]

**என்பது திருச்செந்தூர் அகவல்.**

**யசூர் வேதம் என்பது முக்கியமான வேதம் என அறிஞர் ஒப்புக் கொள்வர். அதில் மத்தியில் உள்ளது 'ஸ்ரீருத்ரம்' அதன் நடுவில் உள்ளது 'நமசிவாய' என்ற திருவைந்தெழுத்து மந்திரம். வேதத்தில் 'சிவன் குறிக்கப்பட்டுள்ளான்' என்பதற்கு 'இஃது ஒரு சான்று' என அறிஞர் கூறுவர்.[134]**

**இத்தகைய பரம்பொருளாகிய சிவத்தை அடைதலே, மனிதவாழ்க்கையின் உயர்ந்த பயனும், இறுதிப் பயனும் ஆகும். அஃதாவது, இவ் இறுதிப்பயன், ஆணவம் நீங்கி, உயிர் தூய்மையடைவதோடு, சிவத்தின் திருவடி நீழலைச் சரணடைந்து, பேரின்பம் துய்த்துப் பிறவாநெறியைப் பெறுவதாகும்.**

**சரியை கிரியை யோகமாகிய தவத்தால், ஞானம் பெற்ற ஆன்மா, சிவத்துடன் அத்துவிதமாய்க் கலந்து, இன்புற்றிருக்கிறது. இந்நிலையே சிவப்பேறாகிய முத்திநிலை ஆகும்.**

இத்தகைய சிவப்பேறு பற்றி அருணந்திசிவம் விரிவாக இந்நூலின்கண் கூறுகின்றார்.

"முத்தியைப் பற்றிப் பல சமயத்தவர்களும் பற்பலவாறு கூறுவர். ஆனால் சைவசித்தாந்திகள் கூறும் முத்தியானது முப்பத்தாறு தத்துவங்களுக்கும் அப்பாற்பட்ட சிவனடியை அடையும் முத்தியாகும். முதல்வன், பக்குவ உயிர்களுக்கு ஒரு பிறவியில் தானே திருநோக்கம் முதலிய தீக்கை செய்து, மும்மலங்களை நீக்கி, அருள் வடிவாக்கிப் பேரானந்தம் அனுபவிக்கச் செய்து, சீவன்முத்தராக வாழ்வித்து, மேல்வரும் பிறப்பை அறுத்து ஈண்டே வீட்டின்ப நுகர்ச்சியராக்கி முடிந்த நிலையாகிய திருவருட்பேற்றினைத் தந்தருளுவன்; பரமுத்தியாகிய திருவடிக்கீழ் வைப்பன்" என்று கூறும் அருணந்திசிவம் "உலகத்தார் இதனை அறியாது பிதற்றுகின்றனரே" எனக் கழிவிரக்கம் கொள்கின்றார்.[135]

*"சிவன் ஒருவனே முழுமுதற் கடவுளாய்*
*முத்தியளிப்பவன்"*[136]

எனவே, முடிவிலா ஆற்றலும், முற்றறிவும் உடைய இறைவன் முதன்மையுடையவன். உயிர்கள்- மாட்டுப் பேரருள் உடைமையால், வீடுபேறு தரும் வள்ளன்மையும் விளங்கும்.

அத்தகைய சிவனடியைச் சேர்தற்குரிய வழிமுறைகளையும் உரைக்கின்றார் அருணந்திசிவம்.

சிவனடியைப் பெறுதற்குரிய நெறிகள் நான்கு. அவை சன்மார்க்கம், சகமார்க்கம், சற்புத்திரமார்க்கம், தாதமார்க்கம். அவற்றையே ஞானபாதம், யோகபாதம், கிரியாபாதம், சரியாபாதம் என்றும் கூறுவர்.

தாதமார்க்கம் முதலான நான்கு மார்க்கங்களின் பயன் முறையே சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சியம் ஆகும். இவற்றுள் முன்னைய மூன்றும் 'பதமுத்திகள்'; பின்னையது 'பரமுத்தி'.

சரியை முதலான நால்வகை நெறிகளுக்கு இலக்கியமாய் ஒழுகிய அருளாளர்கள் முறையே அப்பர், சம்பந்தர், சுந்தரர், மணிவாசகர் ஆவர்.[137]

இந் நால்வகை நெறிகள் குறித்துக் க.வச்சிரவேல் முதலியார் கூறுவது இங்குக் குறிக்கத்தகும் :

*"பாசப்பற்று விடுதற்பொருட்டு, முதல்வனைப் பற்றும் முறையே 'கடவுள் வழிபாடு' எனப்படும். அது, 'பொதுவும் சிறப்பும்' என இருவகைப்படும். வழிபாடு பின்பற்றல், இறைவன் திருக்குறிப்பின் வழி நின்று*

*ஒழுகுதல். 'வழிபாடு, பிற்றைநிலை' என்பவை ஒருபொருட்சொற்கள். 'பொதுவழிபாடு' என்பது இறைவனது அருளாணை ஆகிய அறத்தின் வழி நிற்றல்... 'சிறப்பு வழிபாடா'வது, முதல்வனது உண்மை இயல்பைத் தெளியக்கண்டு, அவனைச் சார்தலால், அவன்றன் அருட்குணங்கள் நம்மிடத்து மேம்பட்டு விளங்குமாறு ஒழுகும் ஒழுக்கம். இஃது அருள் நூல்களை ஓதி உணர்ந்து, அவற்றுள் கூறியபடி முதல்வனை வணங்குதல், வாழ்த்துதல், நினைத்தல், உள்நோக்கி உணர்தல் என்னும் வடிவில் நிகழத்தக்கது... இது 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' என நான்கு வகையில் வைத்துணர்த்தப்படும்."*[138]

இந் நால்வகை நெறிகளும் முத்தி அடைதற்குத் தேவையான அடிப்படை ஒழுக்க நெறிகள் ஆகும். மும்மலச் சார்பால், உயிர்கள், பல்வகைப் பிறப்புக்கள் எய்தி, இன்ப துன்பங்கட்கு ஆட்படுகின்றன. இவற்றினின்று விடுதலையடைந்து இறைவனின் பேரருளைப் பெற இந்நெறிகள் துணைபுரிகின்றன. 'சரியை' முதலிய மூன்றும், 'ஞானத்'தை அடைவிக்கும்; 'முத்தி' அடைய 'ஞானம்' துணை புரியும்'.[139]

*"வாழ்க்கையில் ஒவ்வொரு படியையும் கடந்த பின்னரே மேல்நிலைக்குச் செல்ல முடியும். அதுபோன்றே சமயத் துறையிலும் படிகள் உண்டு. ஊனில் அரும்பி, உணர்வு நிலையில் சாய்த்து, உயிரில் கலந்து நிற்கும் சமயமானது, படிப்படியாக அமைக்கப்பட்ட ஒன்று. 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' என்னும் நான்கும் சமயப்படிகளாகும்"*[140]

என்பர் ம.சா. அறிவுடைநம்பி.

இச் 'சரியை' முதலிய மூன்றும் 'ஞானத்'தின் வளர்ச்சி நிலைகள் என்ற உண்மையைத் தாயுமானவர்,

*"விரும்பும் சரியை முதல்*
*மெய்ஞ்ஞானம் நான்கும்*
*அரும்புமலர் காய்கனிபோல்*
*அன்றோ பராபரமே!"*[141]

என்று கூறுவதால் அறியலாம்.

குருவருள் பெற்று, மலமுதிர்ச்சியும், சத்திநிபாதமும் காரணமாக ஞானம் விளைந்து, நிட்டை கூடினோர், சீவன் முத்தராய் ஒன்றிலும் விருப்பு வெறுப்பின்றிச் சிவனோடு பிரிவின்றி நின்று சிவம் ஒன்றையுமே காண்பர்.

சிவத்தில் விருப்பும், பிரபஞ்சத்தில் வெறுப்பும் உண்டாயவிடத்து, சிவன் உயிரிடத்துப் பிரகாசித்து நின்று அன்பைப் பெருக்க அவ் அன்பின் வழியாக ஆன்ம அறிவின்கண் புகுந்துநின்று பேரின்பத்தைக் கொடுப்பன்.

பாசமும் நானன்று; பதியும் நானன்று என்று கண்டு, பாசத்தைவிட்டு நீங்கிச் சிவோகம் பாவனை செய்யின், சிவன், இவனின் வேறறநின்று, மலங்கள் முழுவதையும் போக்கி, சுத்தனாகச் செய்வன்.[142]

*"கலப்பில்லாமல் கருணை செய்து வருவதனாலேதான் உயிர்கள் சிறிது சிறிதாகப் பாசம் நீங்கி, இறைவனை நுகர்கின்றன. இவ்வாறு விளக்காமல் இறைவன் செய்து வருகின்ற செயலை உயிர்கள் நினைந்து நினைந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே நிறைந்து நிறைந்து வருதல் வேண்டும் அன்றோ! சீவன் முத்தருக்கு இப்பக்குவம் இருக்கிறது"*[143]

எனச் சீவன் முத்தரின் நிலைகுறித்து இளவழகனார் கூறுவது இங்குக் கருதத்தகும்.

திருவைந்தெழுத்தை முறைப்படி ஓத, முதல்வன் உயிரின்கண் விளங்கித் தோன்றுவன்.[144]

நாவுரசரைக் கல்லாலே கட்டிக் கடலில் தள்ளியபோது இத்திருவைந்தெழுத்தை ஓதியே கரை சேர்ந்தார் என்பது வரலாறு.

*"சொற்றுணை வேதியன் சோதி வானவன்*
*பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்*
*கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்*
*நற்றுணை யாவது நமச்சி வாயவே"*[145]

என்பது அவர் திருவாய் மலர்ந்து அருளியது.

இத்திருவைந்தெழுத்தின் சிறப்பை அறிஞர் பலரும் விதந்து எடுத்தோதியுள்ளனர்.[146]

அவர்களுள், மு. கதிரேசச் செட்டியார் கூறும் கருத்து இவண் சுட்டுதல் பொருந்தும்.

*"திருவைந்தெழுத்தை 'நகாரம்' முதலாக ஓதுதல் 'மறை' வழக்கும்; 'சிகாரம்' முதலாக ஓதுதல் 'ஆகம' வழக்கும் ஆம். திருவாசகம், தமிழ்மறை ஆதலின், இதன் தொடக்கத்திலே, 'நமச்சிவாய வாஅழ்க' என்று கூறப்பட்டுள்ளது. ஏனைய மந்திரங்கள் எல்லாம் பிரணவத்தோடு கூடியே எண்ணப்படுவது ஆம். சிவபெருமானைப் பற்றிய இத் 'திருவைந்தெழுத்து*

*மந்திரம்', பிரணவம் இன்றியே எண்ணப்படுவதாகும். காரணம், திருவைந்தெழுத்திற்கும் பிரணவத்துக்கும் வேறுபாடு இன்மையாம் என்க"*[147]

மெய்ஞ்ஞானம் பெற்று, நிட்டைகைவந்த சீவன்முத்தர், உடல் அழிந்துபட, மும்மலமும் பற்றறத் திருவடிப் பேறாகும் அத்துவிதப் பரமுத்தியின்பம் துய்த்திருப்பர். முதல்வன் அந்நிலையில் உயிரோடு லீலை மாத்திரையானே **வேறாகியும் உடனாகியும் ஒற்றித்தும்** நின்று சிவாநுபவம் நிகழ்த்துவன்.[148]

இரும்பை இழுத்து நிற்கும் காந்தம்போல, விகாரமின்றி **உடனாயும்**, இரும்பைத் தீயாம் வண்ணம் செய்யும் நெருப்புப் போல் தன்குணம் ஈந்து, உயிரைக் கெடுக்காது **பிரிந்து நின்றும்**; விறகினுக்கு விறகாம் தன்மையை நீக்கித் தீயாம் தன்மையைத் தரும் நெருப்பே போல் மலத்தை நீக்கி, **ஒன்றாய் நின்றும்**, நீரோடு சேர்ந்த உப்பே போல் ஒன்றுவித்து, தன் வியாபகத்துட்படுத்தி நின்றும், பொன்னாய் வந்த செம்பினது செம்பின்தன்மையை மறைத்துநிற்கும் இரத குளிகை போல், உடனாய் மறைத்துநின்றும், ஒருலோகத்தை மற்றொன்றாய் மாற்றும் இரசவாதியே போன்று பிரிந்து நின்றும், கரும்பு தேன் பால் கனிரசம் கற்கண்டு சர்க்கரை முதலானவற்றின் சுவைபோன்ற சிவானுபவப் பேரின்பத்தை ஈந்தும், இறைவன் நிற்ப, அவனோடு கலந்து நிற்பதுவே சித்தாந்தமாகக் கண்ட சுத்தாத்துவித முத்தி நிலையாம்.[149]

இப் பொருள்பட அருணந்திசிவம் கூறும் பாட்டு வருமாறு :

*"இரும்பைக் காந்தம் வலித்தாற்போல் இயைந்தங் குயிரை*
*எரியிரும்பைச் செய்வதுபோல் இவனைத் தானாக்கி*
*அரும்பித்திந் தனத்தைஅன லழிப்பதுபோல் மலத்தை*
*அறுத்தமலன் அப்பணைந்த உப்பேபோ லணைந்து*
*விரும்பிப் பொன் னினைக்குளிகை யொளிப்பது போல்அடக்கி*
*மேளித்துத் தானெல்லாம் வேதிப்பா னாகிக்*
*கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்*
*கட்டியை ஒத்திருப்பன் அந்த முத்தியினிற் கலந்தே"*[150]

ஞானசம்பந்தர் போன்ற திருமுறை அருளாளர்கள், இச்சிவப்பேறு குறித்து விரிவாகப் பாடியுள்ளனர்.

*"நாதனை நல்லூர்ப் பெருமண மேவிய*
*வேதன தாள்தொழ வீடெளி தாகுமே"*[151]

என்பர் சம்பந்தர்.

நாவரசர், இறுதியாகப் பாடிய தேவாரப் பதிகத்தில்,

"எண்ணுகேன் என்சொல்லி, எண்ணுகேனோ" எனும் திருப்பாட்டில்,

*"புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்*
*பூம்புகலூர் மேவிய புண்ணியனே"*[152]

என உருகி உரைப்பது நோக்கத்தகும்.

சுந்தரரின் திருநொடித்தான் பதிகமும்,[153] இதைக் குறிக்கும்.

மணிவாசகர்,

*"செம்மையே ஆய சிவபதம் அளித்த*
*செல்வமே சிவபெருமானே"*[154]

என்றும்;

திருமூலர்,

*"சிவசிவ என்றிடச் சிவகதி தானே"*[155]

என்றும் கூறுவர்.

காரைக்காலம்மையார்,

*"சிவகதி சேர்ந்தின்பம் எய்துவாரே"*[156]

என்பர்.

சேக்கிழார்,

*"படியில் நீடும் பத்திமுதல் அன்புநீரிற் பணைத்தோங்கி*
*வடிவு நம்பி ஆரூரர் செம்பொன்மேனி வனப்பாகக்*
*கடிய வெய்ய இருவினையின் களைகட் டெழுந்த*
*கதிர்பரப்பு*
*முடிவி லாத சிவபோக முதிர்ந்து முறுகி விளைந்ததால்"*[157]

என்று கூறுவதும் இங்குக் குறிக்கத்தகும்.

**முடிவுரை**

இவ்இயல் வாயிலாக அறியத்தகும் முடிபுகளாவன:

1. அருணந்தி சிவாசாரியர், தம் நூலின் பாயிரத்திலேயே இறைவனின் திருவருட்டிறத்தைப் பரவுகின்றார்.
2. அவ்வாறே தம் ஞானாசிரியரான மெய்கண்ட தேவர், தமக்கு அருள் செய்த பான்மையையும் போற்றுகின்றார்.

3. இறைவன், முத்தொழில் செய்வதற்கு அவனது திருவிளையாடலும், திருவருளும் காரணங்களாகும்.

4. உயிர்கட்கு அருள் செய்தற்பொருட்டே, இறைவன் திருமேனி கொள்கின்றான்.

5. அருட்சத்தியினின்று முதல்வன் பிரிப்பின்றி விளங்குவன்.

6. இச்சாசத்தி முதலியன, உயிர்களிடத்துள்ள மலத்தை நீக்கிச் சிவத்தைச் சாரும்படி செய்யும்.

7. பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்து விளங்குவது, சிவபெருமானின் திருவருளேயாம்.

8. மெய்கண்டார் கூறும் 'அத்துவித' நிலையை அருணந்தி சிவாசாரியரும் விளக்கியுள்ளனர்.

9. உயிர்கட்கு, அறிவை மயக்கும் மலமயக்கத்தை, முதல்வன் தன் திருவருளால் நீக்கி, முத்தி கொடுக்கும் வள்ளலாவன்.

10. மெய்கண்டார் அருளிய 'ஐம்புல வேடரின்' என்னும் நூற்பாவை அடியொற்றி அருணந்தி சிவாசாரியரும் 'மன்னவன்தன் மகன்' என்னும் பாடலை அருளியுள்ளார்.

11. உயிர்கள், பக்குவம் எய்தியபோது, முதல்வன் குருவடிவாய் எழுந்தருளிவந்து, வினைகளை ஒழிப்பன்.

12. 'ஆணவம், கன்மம், மாயை' எனும் மும்மலமும் உயிரின் உண்மை வடிவை மறைப்பன. இப் பாசப்பிணிப்பு நீங்க முதல்வனது திருவருள் இன்றியமையாதது.

13. 'ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம்' என வினை மூவகைப்படும். முதல்வனது ஆணையால், வினைசெய்த உயிர்களே அவ்வினைப் பயன்களை நுகரும். இதுவும் அவனது திருவருளேயாகும்.

14. பிரபஞ்சமாகிய காரியத்துக்கு 'மாயை' முதற்காரணம்; சிவபெருமான் 'நிமித்தகாரணன்'.

15. உயிர்களைப் பொருந்தியுள்ள மலகன்மங்கள் நீங்குதற் பொருட்டு, முதல்வன் தனுகரணாதிகளைக் கொடுக்கின்றான்.

16. இம்மலங்களை நீக்கிச் சிவப்பேறு அடைதற்கு, அருணந்தி சிவாசாரியர் 'சைவசித்தாந்த நெறிநின்று ஒழுகல் வேண்டும்' என அறிவுறுத்துகின்றார்.

17. 'சரியை' முதலான நெறிகளால் 'ஞானம்' அடைந்த ஆன்மா, சிவத்துடன் அத்துவிதமாய்க் கலந்து 'முத்திநிலை' எய்தும்.

18. "சிவன் ஒருவனே முழுமுதற் கடவுள்; முத்தியளிக்கும் வள்ளலும் அவனே" ஆவன்.

19. பாசத்தினின்றும் நீங்கிச் 'சிவோகம்பாவனை' செய்யின், முதல்வன் அருளால் மலநீக்கம் உண்டாகும்.

20. திருவைந்தெழுத்தை முறைப்படி ஓதினால், உயிரின்கண் முதல்வன் விளங்கித் தோன்றுவன்.

21. மெய்ஞ்ஞானம் பெற்று, நிட்டை கைகூடிய சீவன்முத்தர், உடல்ஒழிய, மும்மலம் நீங்க, முதல்வனின் திருவடியாகிய சிவப்பேறு பெற்று, ஆராஇன்பம் துய்ப்பர்.

22. இச் சிவஞான சித்தியாரில் இடம்பெறும் கருத்துக்கள், சைவத் திருமுறைகளில் முன்பே சொல்லப்பட்டவை. ஆதலின், 'திருமுறைத் தெளிவே சாத்திர நூல்கள்' எனலாம்.

## சான்றெண் விளக்கம்

1. 'அருள்' எனும் சொல் இடம்பெறும் செய்யுள் விவரப்பட்டியல், பின்னிணைப்பு எண். 7இல் காண்க.
2. **சிவஞான சித்தியார்**, 2.
3. மு. திருவிளங்கம் (உ.ஆ) **சிவஞான சித்தியார்**, ப.8.
4. **சிவஞான சித்தியார்**, 3.
5. **மேலது**, 4:1-2.
6. **மேலது**, 6.
7. **மேலது**, 56.
8. **மேலது**, 57.
9. ப. இராமநாதபிள்ளை, (உ.ஆ.) **தேவார அருள் முறைத் திரட்டு**, ப.3. (இப்பாடல், முன், ப.45, 145லும் சொல்லப்பட்டுள்ளது.)
10. **திருவாசகம்**, 232:1.
11. ப. இராமநாதபிள்ளை, **மு.கா.நூல்**, ப.2.
12. **திருவாசகம்**, 4:100.
13. **திருமந்திரம்**, 447:1.
14. **கந்தர் கலிவெண்பா**, 5-6.
15. சிவநந்தி அடிகளார், '**சிவநடராச நடனத்துவம்**' சைவநீதி, பொங்கல்மலர், 1999, ப.48.
16. Joseph Jaswant Raj, **Grace in the Saiva Siddhantam and in St.Paul**, p.388.
17. மு. திருவிளங்கம், **மு.கா.நூல்**, ப.121.
18. **சிவஞான சித்தியார்**, 67.
19. **மேலது**, 70.
20. **மேலது**, 71:3.
21. **மேலது**, 74.
22. ந. சுப்பு ரெட்டியார், **சைவசமய விளக்கு**, ப.58.
23. **திருவாசகம்**, 235:3-4.
24. **சிவஞான சித்தியார்**, 81.
25. **மேலது**, 82.

26. **மேலது,** 83.

27. **மேலது,** 88.

28. **மேலது,** 89.

29. சம்பந்தர் **தேவாரம்,** 240:1-2.

30. **மேலது,** 3052:4.

31. அப்பர் **தேவாரம்,** 4179:4-5.

32. **பெரியபுராணம்,** திருநாவுக்கரசர் புராணம், 374:2-3.

33. **திருவாசகம்,** 96:1.

34. **புறநானூறு,** 1:1-2.

35. **சிவஞான சித்தியார்,** 165:4.

36. வ.ஆ. தேவசேனாபதி, **சைவசித்தாந்தத்தின் அடிப்படைகள்,** ப.78.

37. இளவழகனார், **சிவஞானபோத ஆராய்ச்சி,** ப.126.

38. ப. வெள்ளியங்கிரி, **அருணகிரித் திருப்புகழில் சைவசித்தாந்தம்,** ப.40.

39. சம்பந்தர் **தேவாரம்,** 91:1; 3374:1.

40. அப்பர் **தேவாரம்,** 6173:3-4; 7163:1-3.

41. சுந்தரர் **தேவாரம்** 8249:1-2.

42. **திருவாசகம்,** 417:1-2.

43. **9ம் திருமுறை,** திருமாளிகைத் தேவர், கோயில் 11

44. **அற்புதத் திருவந்தாதி,** 9.

45. **பெரியபுராணம்,** திருஞானசம்பந்தர் புராணம், 78.

46. R. Gopalakrishnan, "**Social Perspectives in Saiva Siddhanta**", Saiva Siddhanta, vol XXVI No 1,2. May '92.

47. மு. திருவிளங்கம், **மு.கா.நூல்,** பக்.163-164.

48. **சிவஞான சித்தியார்,** 91.

49. **மேலது,** 92, மேலது, ப.166.

50. பொ. முத்தையபிள்ளை **(வி.உ.) சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்.** ப.284.

51. இ.வே. கந்தையா **(உ.ஆ.) உண்மைவிளக்கம் திருவருட்பயன்,** பக்.15-18.

52. **சம்பந்தர் தேவாரம்**, 571:4.

53. அப்பர் **தேவாரம்**, 4840:1.

54. சுந்தரர் **தேவாரம்**, 7914:1.

55. **திருவாசகம்**, 438:4.

56. சி.சு. மணி, (உ.ஆ) **திருவருட்பயன்**, பக்.4,5.

57. **தொல்காப்பியம்**, பொருளதிகாரம், கற்பியல் 47.

58. ப. இராமநாதபிள்ளை, **மு.கா.நூல்**, ப.11.

59. **சிவஞான சித்தியார்**, 188-195;210:212;221.

60. **மேலது**, 251.

61. **மேலது**, 232.

62. இளவழகனார், **மு.கா.நூல்**, ப.258.

63. **சிவஞான சித்தியார்**, 233:3-4.

64. **மேலது**, 234:4.

65. **மேலது**, 239.

66. **மேலது**, 250.

67. **மேலது**, 252:4.

68. **மேலது**, 253.

69. **சிவஞானபோதம்**, 8.

70. **சிவஞான சித்தியார்**, 254.

71. **கந்தர் கலிவெண்பா**, 20-22.

72. **சிவஞான சித்தியார்**, 262.

73. மறைமலையடிகள், **சிவஞானபோத ஆராய்ச்சி**, பக்.242-244.

74. அப்பர் **தேவாரம்**, 4538:1.

75. **திருவாசகம்**, 1:26.

76. **மேலது**, 502:1-2.

77. ச. சாம்பசிவனார், **பத்திநெறிப்பனுவல்கள்**, ப.59.

78. ப. இராமநாதபிள்ளை, **மு.கா.நூல்**, ப.12.

79. சோமசுந்தரத்தம்பிரான், 'தலைமையுரை', **சைவசமயச் சொற்பொழிவுகள்**, ப.198.

80. R. Ramanujachari, 'Saiva Siddhanta', **Collected Papers on Saiva Siddhanta**, p.6.

81. **சிவஞான சித்தியார்,** 170.

82. **மேலது**, 171.

83. **மேலது**, 174.

84. கி. பழநியப்பனார், **ஒன்றேகுலம், ஒருவனே தேவன்** (சித்தாந்த விளக்கம்) ப.14-17.

85. **சிவஞான சித்தியார்**, 176. (ப.99லும், இப்பாடல் உள்ளது.)

86. **மேலது**, 177.

87. க. வெள்ளைவாரணனார், 'ஆராய்ச்சி முன்னுரை' **பெரியபுராணம்**, ப.27

88. **சிவஞானசித்தியார்**, 94.

89. **மேலது**, 100.

90. **மேலது**, 102,103.

91. **மேலது**, 105.

92. **மேலது**, 106.

93. **மேலது**, 112:4.

94. **மேலது**, 123,125.

95. மறைமலையடிகள், **மு.கா.நூல்**, ப.31.

96. பொ.முத்தையபிள்ளை, **மு.கா.நூல்**, பக்.580-582.

97. சம்பந்தர் **தேவாரம்**, 2497,262,283,445,749.

98. **மேலது**, 1971.

99. வை. இரத்தினசபாபதி, **திருமுறைத் தெளிவே சிவஞான போதம்**, ப.36.

100. அப்பர் **தேவாரம்**, 4201,4162,4590,4688,5232,5825.

101. சுந்தரர் **தேவாரம்**, 7454,7581,7582.

102. **திருவாசகம்**, 1:19-23: 1:25.

103. **பெரியபுராணம்,** சாக்கியநாயனார், 5.

104. ச. சாம்பசிவனார், **திருநாவுக்கரசர் தேவாரத்தில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள்,** ப.121.

105. ஆ.ஆனந்தராசன், **சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை**, ப.53-54.

106. ப. இராமநாதபிள்ளை (உ.ஆ.) **மு.கா.நூல்**, ப.22.

107. க. வச்சிரவேல் முதலியார், 'சைவம்' **சைவமும் வைணவமும்**, பக்.69-70.

108. ஆ.ஆனந்தராசன், **சிவஞான முனிவரின் சைவசித்தாந்த விளக்கம்**, ப.184.

109. **சிவஞான சித்தியார்**, 35,38,39,52.

110. **மேலது**, 141:3-4.

111. **மேலது**, 142 கருத்துரை.

112. **மேலது**, 159-163. இத்தத்துவப்பட்டியல், பின்னிணைப்பு எண் 8-இல், தரப்பட்டுள்ளது.

113. **சிவஞானசித்தியார்**, 178-180.

114. **மேலது**, 181.

115. மு. திருவிளங்கம், (உ.ஆ.) **மேலது**, ப.293.

116. மா. அமிர்தலிங்கனார், 'தொட்டிலும் குழந்தையும்' **சித்தாந்தம்**, நவம்பர் '93.

117. சம்பந்தர் **தேவாரம்**, 1394,1389,1419,1481; அப்பர் **தேவாரம்**, 4683,4463,4421;
சுந்தர் **தேவாரம்**, 7700,7801,7518.

118. **திருவாசகம்**, 583; 545,132,484.

119. **திருமந்திரம்**, 2168,2198,2226,2268.

120. **பெரியபுராணம்**, பாயிரம் 2, திருஞானசம்பந்தர் 383, மானக்கஞ்சாரர் 36.

121. கலைவாணி இராமநாதன், **வேதபாரம்பரியமும் சைவசித்தாந்தமும்**, ப.24.

122. கா. சுப்பிரமணியபிள்ளை, **தமிழ்நாட்டு இந்து சமயங்களின் வரலாறு**, ப.10.

123. ஆதாரம்: சோ.ந.கந்தசாமி, **தமிழர் தத்துவமரபு**, ப.300

124. சீ. சசிவல்லி, **சமயச் சொல்லகராதி**, ப.154.

125. ப. அருணாசலம், **சைவசமயம்**, ப.7.

126. சி.எம். இராமச்சந்திரன் செட்டியார், **சமயங்கள்**, ப.23.

127. சி. அருணைவடிவேலு முதலியார், **முப்பொருள் இயல்பு**, ப.64.

128. ஔவை சு. துரைசாமிபிள்ளை, 'தலைமையுரை', தூத்துக்குடி சைவசித்தாந்த சபை 65ம் ஆண்டு நிறைவு விழா, (தனி வெளியீடு), ப.14.

129. க. வச்சிரவேல் முதலியார், **மு.கா.நூல்**, ப.1.

130. **திருமந்திரம்**, 270:2.

131. சி. அருணைவடிவேலு முதலியார், மு.கா.நூல், பக்.64-65.

132. கா. சுப்பிரமணியபிள்ளை, **சைவசித்தாந்த உண்மை வரலாறு**, ப.5.

133. ஆதாரம் க. பாலகிருட்டிணன், **பட்டினத்தார் பாடல்கள் ஓர் ஆய்வு**, பி.எச்.டி. ஆய்வேடு, ப.308.

134. இரா. நாகசாமி, 'எந்தையே தெய்வம்', **மெய்கண்டார்**, மார்ச்சு '94.

135. **சிவஞானசித்தியார்**, 264,268.

136. **மேலது**, 269.

137. **மேலது**, 27-274.

138. க. வச்சிரவேல் முதலியார், **மு.கா.நூல்**, ப.81.

139. ச. சாம்பசிவனார், **மு.கா.நூல்**, ப.145.

140. ம.சா. அறிவுடைநம்பி, போதமும் சுபக்கமும், '**சைவத்தமிழ்**' ப.172.

141. தாயுமானவர் பாடல்கள், **பராபரக்கண்ணி**, 157.

142. **சிவஞான சித்தியார்**, 281,297,298.

143. இளவழகனார், **சிவஞானபோத ஆராய்ச்சி**, ப.367.

144. **சிவஞான சித்தியார்**, 299.

145. அப்பர் **தேவாரம்**, 4262.

146. (அ) சி. அருணைவடிவேலு முதலியார், **சிவஞான மாபாடியப்பொருள் நிலைவிளக்கம்**, ப.25.

(ஆ) ஆ.ஆனந்தராசன், **சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை**, ப.246.

(இ) ஔவை சு. துரைசாமிபிள்ளை, **சிவபுராண விரிவுரை**, ப.10.

(ஈ) கா. சுப்பிரமணியபிள்ளை, **திருவாசகம் மூலமும் உரையும்**, ப.2.

147. மு. கதிரேசச் செட்டியார், **திருவாசகம் - திருச்சதகம் கதிர்மணி விளக்கம்**, ப.314.

148. **சிவஞான சித்தியார்**, 310.

149. மு. **திருவிளங்கம் (உ.ஆ.) மு.கா.நூல்**, பக்.642-643.

150. **சிவஞானசித்தியார்**, 321.

151. சம்பந்தர் **தேவாரம்**, 4146:3-4.

152. அப்பர் **தேவாரம்**, 7215:4.

153. சுந்தரர் **தேவாரம்**, 8241-8250.

154. **திருவாசகம்**, 538:3.

155. **திருமந்திரம்**, 2716:4.

156. காரைக்காலம்மையார் **மூத்ததிருப்பதிகம்**, 11.

157. பெரியபுராணம், **வெள்ளானைச் சருக்கம்**, 2.

# 6
# சிவப்பிரகாசத்தில் 'திருவருள் விளக்கம்'

## முன்னுரை

> *"தமிழருடைய கருத்து, சிவமும் சத்தியுமென ஈரியல்பு பற்றிய கடவுட் கொள்கையாம். சிவசத்தி உலகத்தைப் படைத்து, உயிர்கள் வீடடைதற்குரிய தொழில் யாவற்றிற்கும் காரணமாய் இருப்பது . . . கடவுளுடைய அருட்சத்தி, ஆன்மா உலகை நோக்கிய காலத்திலும்; கடவுளை நோக்கிய காலத்திலும் அதன் போக்கிற்கும் வரவிற்கும் துணையாக நின்று, இறுதியில் அதனைப் பேரின்ப வீட்டில் உய்க்கும்!"*[1]

என்று, முதல்வனின் திருவருட்சத்தி குறித்துக் கா. சுப்பிரமணிய பிள்ளை விளம்புவர். இத்தகைய 'திருவருள்' குறித்துச் 'சிவப்பிரகாசம்' என்னும் சித்தாந்த சாத்திர நூல் வாயிலாக ஆராய்வது இவ் இயலின் நோக்கம்.

## பாயிரத்தில் 'திருவருள்'

நூலின் தலைப்பு 'சிவப்பிரகாசம்' என்பது. 'பிரகாசம்' என்றால் 'ஒளி'. அஃது ஈண்டு முதல்வனின் 'திருவருளை'க் குறித்தது எனலாம். இந்நூலின்கண் உமாபதிசிவம், 'அருள்' என்னும் சொல்லை 4 இடங்களில் எடுத்தாண்டுள்ளார்.[2] அன்றியும் 'திருவருள்' என்ற சொல்லையே 4 இடங்களில்[3] கையாண்டுள்ளார். இவைதவிரக் 'கருணை, ஒளி, சத்தி' என்பனவும் ஆங்காங்கே வந்துள்ளன. இவ்வகையில், முதல்வனின் **திருவருளுக்கு** இவர் முதன்மை கொடுத்துள்ளார் எனல் மிகையன்று.

'நூல் நுதலிய பொருள்' குறித்துக் கூறவந்த உமாபதிசிவம்,

'சிவப்பிரகாசம்' எனும் பெயருக்குத் தகுந்தாற்போல், காப்புச் செய்யுள் 'ஒளி' என்ற சொல்லுடன் தொடங்குகிறது. இந்நூலின் பயன், மலநீக்கமும் சிவப்பேறுமாகும். 'சிவஞானம் ஒளி வடிவம்' கொண்டது என்பதால் 'இருளாகிய ஆணவம் நீங்கும்' என்பது பெறப்படுகிறது. 'திருவடிப் பேற்றால் வல்வினை நீங்கும்' என்பதும் பெறப்படுகிறது.

காப்புச்செய்யுளுக்கு அடுத்தது பாயிரம். இப் பாயிரம் பன்னிரு செய்யுட்களை உடையது.

'நூல்நுதலிய பொருள்' குறித்துக் கூறவந்த உமாபதிசிவம்,

*"அறத்திறனால் விளைவதாய் உடலுயிர்கண் அருக்கன்*
*அறிவொளிபோல் பிறிவரும்அத் துவித மார்கும்*
*சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ*
*சித்தாந்தத் திறன் இங்குத்தெரிக்க லுற்றாம்"*[4]

என்பர். இதன்கண், சைவசித்தாந்தம் கூறும், இறைவன், உயிருடன் 'ஒன்றாய், வேறாய், உடனாய்' இருக்கும் 'அத்துவிதநிலை'யைக் குறிப்பாகச் சுட்டியுள்ளமை காணலாம்.

பாயிரத்தில், முதல்வனின் 'திருவருள்' பற்றிக் கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியர் பல்வேறிடங்களிலும் குறிப்பிட்டுச் செல்கிறார்.

*"நின்மல சொரூபமாயிருக்கப்பட்ட பரமசிவனது ஆன்மாக்களுக்- குண்டான ஜநநமரண துக்கத்தை நீக்குவதைப் பொருட்டாகத் திருவம்பலத்தின்கண்ணே நின்று திருநடனஞ் செய்த அவதரத்தை நோக்கி இந்நூல் செய்து முடிவது பொருட்டாகத் தோத்திரம் பண்ணுவானெடுத்துக் கொண்டருளியது"*[5]

என்பது இப்பாயிர முன்னுரையாக அமைந்த பழைய உரையாகும்.

*"ஓங்கொளியாய் அருள்ஞான மூர்த்தி யாகி*
*உலகமெலாம் அளித்தருளும் உமையம்மை காண"*[6]

எனத் தொடங்குகின்றது பாயிரத்தின் முதற் செய்யுள்.

*"நின்மல சொரூபியாயிருக்கப்பட்ட பரமசிவமானது, தனது பரையினது சொரூபமாகிய பேரொளியுமாய் இச்சா ஞானக் கிரியா சொரூபியுமாய்த் திருவம்பலத்தின்கண்ணே நின்று திருநடஞ்செய்த அவதரத்தை நோக்கி இந்நூற் செய்து முடித்தற் பொருட்டாகத் தோத்திரம் பண்ணுமுறைமையை அறிப்பது"*[7]

இது.

"சிவபெருமான், **திருவருளாகிய** ஞானத்தையே தனது வடிவமமாகக் கொள்பவன்" என்பதை 'அருள்ஞானமூர்த்தி' எனும் தொடர் குறிக்கும். அவ்வாறே, 'உமாதேவியும் திருவருளால் உலகமனைத்தையும் காத்து அருளும் இயல்பினள்' என்பதை, 'உலகமெலாம் அளித்து அருளும் உமையம்மை' எனும் தொடர் குறிக்கும். உயிர்கள் பிறப்பு இறப்புகளிற் பட்டு அடையும் துன்பத்தை நீக்குதற்பொருட்டே இறைவன், தில்லையில் திருநடம்புரிகின்றான்

என்பதை, "நீங்கலரும் பவத் தொடர்ச்சி நீங்க" என்றும் பாடினார் உமாபதியார்.

அடுத்துவரும் 'சிவகாமியம்மை' துதியிலும், "மேலான சிவபோகத்தைத் தன் அடியார்க்குக் கடாட்சித்தருளுகின்ற காருண்ணிய சத்தி" என்ற பொருளில்,

*"பரபோக ரூபம் தரும் கருணை உருவாகி"*[8]

என வருவதும் இங்குக் குறிப்பிடத்தகும்.

*"கயற்கண்ணியொடும் இறைவன்*
*கலந்தருள வரும் ஆனைமுகத்தான் . . ."*

*". . . . ஈசன் அருள் ஞான மதலை"*[9]

என்று கூறும் உமாபதியார்,

*". . . . . .*
*மருவியிடும் உயர்ஞான மிரண்டாம் மாறா*
*மலமகல அகலாத மன்னுபோதத்*
*திருவருளோன் றொன்றதனைத் தெளியவோதும்*
*சிவாகமமென் றுலகறியச் செப்பும் நூலே"*[10]

என்றும் கூறுவர்.

"மேலான ஞானம் இருவகைப்படும் : ஒன்று, அநாதியே தன்னைவிட்டு நீங்காத ஆணவமல மறைப்புவிட்டு நீங்கும்படி தன்னைவிட்டு நீங்காத திருவருளோடும்கூடி, இரண்டற நின்று அனுபவிக்கின்ற ஞானம்; மற்றொன்று, அந்தத் திருவருள் ஞானத்தைத் தெளிய அறிந்து அனுபவிக்கத் தக்கதாகச் சிவாகமங்களை ஓதி உணர்ந்தது"[11]

என்பது இதன் பொருள்.

"உயர்சிவஞானபோதம் - முதல் நூல்; சிவஞானசித்தியார் - வழிநூல். இவ்விரு நூல்களையும் முறையே அருளிய மெய்கண்டார், அருணந்திசிவாசாரியர் ஆகிய இவ்விருவரின் திருவடிகளைப் போற்றி யான் இந்நூலினைச் சொல்லுவன். இதற்கும், இறைவன் என் இதயத்திலே பொருந்தி நின்று காட்டும் திருவருளே காரணம்"

என்பாராய்க்

*"கருத்திலுறை திருவருளும்"*[12]

என்றருளிச் செய்தார் உமாபதியார்.

## முதல்வனும் திருவருளும்

> "சைவசித்தாந்தத்தில் முடிந்த முடிபாகக் கொள்ளப்படும் பொருள்கள் மூன்று; இவை, 'பதி, பசு, பாசம்' என்று வழங்கப்பெறும். இவற்றுள், 'பதி' என்பது இறைவன். கடவுள், 'பரமான்மா' எனப்படுவதும் இதுவேயாகும். 'பசு' என்பது ஆன்மா - உயிர். 'சீவான்மா' எனப்படுவதும் இதுவே. 'பாசம்' என்பது தளை. அஃதாவது உயிரைப்பிணித்துள்ள கட்டு. இவை தமிழில் முறையே "இறை, உயிர், தளை" என்று சொல்லப்படும் . . . சைவசித்தாந்தப்படி இந்த மூன்றும் தனித்தனிப் பொருள்களாகும் . . . இந்த மூன்று பொருள்கட்கும் எந்நாளிலும் தோற்றமும் இல்லை; முடிவும் இல்லை; . . . எனவே பதியாகிய கடவுள் என்று உண்டோ, அன்றே பசுவாகிய உயிரும் உண்டு; அன்றே அவ்வுயிர்களைப் பிணித்துள்ள பாசம் உண்டு என்பது சைவசித்தாந்தத்தின் முடிந்த முடிபாகும்."[13]

என்பர் ந. சுப்புரெட்டியார்.

முதல்வனைச் 'சிவம்' என்ற சொல்லால் குறிப்பிடும் உமாபதிசிவம், அவனுக்குரிய இலக்கணங்களைப் 'பலகலை ஆகமம்'[14] என்னும் பாடலால் விளக்குவர் :

சைவசித்தாந்தம் 'உலகப் பொருள்களை இறை, உயிர், தளை' எனும் மூன்றனுள் அடக்கும். இவற்றுள் 'இறை' எனப்படுவது பரம்பொருள். இஃது, 'அருவம், உருவம், அருவுருவம்' இல்லாதது; எனினும் உயிர்கட்கு அருள்செய்தற்பொருட்டு, அருவாக உருவாக அருவுருவாகத் தான் நினைந்தபடி தோற்றம் கொள்ளும். இவ்வாறு கொள்ளுதற்கு, உயிர்களின் பொருட்டுக் கொள்ளும் திருவருளே காரணமாம். இறைவன், பாசங்களின் நீங்கி விளங்குபவன். ஆதலின், 'நின்மலன்' எனப்படுவான். அதனால்தான் மலங்களில் கட்டுண்ட உயிர்களை அவன் விடுவிக்கின்றான். அவன், தனக்குவமையில்லாதவன்; தோற்றமும் அழிவுமற்ற நிலையானவன்; உயிர்கட்கு உணர்வாக உள்ளவன். இன்பவடிவினன்; அடைதற்கு அரியவன். எனினும் அருளே வழியாகக் கொண்டு ஒழுகும் உயிர்கட்குச் செல்கதியாய் இருப்பவன்.[15]

> "நாடு அரியகருணை திருஉருவம் ஆகி"

என, "நின்மலனாகிய சிவபெருமான் தன் பெருங்கருணையாலே, தன் அருளே திருவுருவாகக்கொண்டு விளங்குபவன்" என்று மீண்டும் கூறுவர்.

சிவஞானசித்தியாரில்,

*"உருமேனி தரித்துக்கொண்ட தென்றலும் உருவிறந்த*
*அருமேனி யதுவுங்கண்டோம் அருவுருவான போது*
*திருமேனி உபயம் பெற்றோம் செப்பியமூன்றும் நந்தங்*
*கருமேனி கழிக்கவந்த கருணையின் வடிவுகாணே"*[16]

என வருவது இவண் சுட்டத்தகும்.

சிவபெருமானின் உண்மைத்தன்மையை, அவன் **அருளால்** அன்றி பிறரால் அறியமுடியாது, அத்தகைய இயல்பினன்; உயிர்க்கு உயிராய் நீங்காது நிற்பவன். ஆதலால்தான், தான் நினைந்த உருவை மேற்கொள்ளுகின்றான்.[17]

கதிரவன் முன்னிலையில் தாமரை பல்வேறு மாற்றங்களை அடையும். ஆனால் கதிரவன் விகாரப்படுவதில்லை. அதுபோலச் சிவபெருமானும் எல்லா உலகங்களையும் படைத்துக் காத்து அழித்த பின்னும், தான் மாறுதலின்றியே விளங்குவான்.[18]

முதல்வன் புரியும் தொழில்கள் ஐந்து : அவை, ஒடுக்கம், தோற்றம், காத்தல், மறைத்தல், அருளல் என்பன. **ஒடுக்கம்** என்ற தொழில், உயிர்களை இளைப்பாற்றுவதற்கு; **தோற்றுவித்தல்** - ஆணவமலம் பக்குவப்படுவதற்கு; **காத்தல்** - கன்மமலம் கழியுமாறு, அதன் பயன்களை நுகர்விப்பதற்காகவும்; **மறைத்தல்** - உயிர்கட்கு இருவினை ஒப்பு ஏற்படுமாறு செய்விப்பதற்கு; **அருளல்** - உயிர்களைக் கட்டினின்றும் விடுவித்து வீடு பேறு அடையச் செய்வதற்காகவும்.

இவை சிவபெருமானின் திருவிளையாடல்கள்; உயிர்களைத் துன்பக்கடலினின்றும் **திருவருளால்** எடுத்து இன்பக் கரை சேர்த்தலே இவ் விளையாட்டின் நோக்கம்.

இதனைக்கூறும் பாடல் வருமாறு :

*"ஏற்றஇவை அரனருளின் திருவிளையாட்டாக*
*இயம்புவர்கள் அணுக்கள் இடர்க்கடல் நின்றும்எடுத்தே*
*ஊற்றமிக அருள்புரிதல் ஏதுவாக*
*உரைசெய்வர் ஒடுக்கம் இளைப்பொழித்தல் மற்றைத்*
*தோற்ற மலபாகம் வரக்காத்தல் போகம்*
*துய்ப்பித்தல் திரோதாயி நிறுத்த லாகும்*
*போற்றலரும் அருள்அருளே யன்றி மற்றுப்*
*புகன்றவையும் அருளொழியப் புகலொணாதே"*[19]

சிவஞானசித்தியாரிலும்,

*". . . . அருள் செய்தி தானும்*
*பழிப்பொழி பந்தம் வீடு பார்த்திடின் அருளே எல்லாம்"*[20]

எனவருவது ஒப்புநோக்கத்தகும்.

இறைவனது திருவிளையாடலை மணிவாசகர்,

*"காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி"*

*"ஐயா நீ ஆட்கொண்டருளும் விளையாட்டின்"*[21]

என்னும் அடிகளால் குறிப்பர்.

**உயிரும் திருவருளும்**

சைவசித்தாந்தம் கூறும் முப்பொருள்களுள் 'உயிர்' என்பதும் ஒன்று.

> *"காணப்படும் உலகப் பொருள்களை இரண்டு கூறாகப் பகுத்து உணரலாம். ஒன்று, அறிவுடைப் பொருள்; மற்றொன்று அறிவில் பொருள். இவற்றுள் 'அறிவுடைப் பொருள்' என்பது, தன் முயற்சி உள்ளதாய், உடம்போடு கூடிப் புலப்படுவதாய் உள்ளது. உடம்புகள்தோறும் வேறுவேறாய், 'யான்' என்னும் உணர்வு வடிவில் (Self Consiousness) நிகழ்வதே 'உயிர்' எனப்படும்"*[22]

என்று விளக்கம் தருவர் க. வச்சிரவேல்முதலியார்.

*"பசுத்துவ முடையனாகிப் பசுவென நிற்கு மான்மா"*[23]

என்பது சித்தியார்.

> *"நித்தியமாகிய ஆன்ம ஞானக்கிரியைகளை அநாதியே தடுத்துநிற்கும் ஆணவமல சக்தியை உடைத்தாகையால் 'பசு' என்னும் பெயரையுடைத்தாய் நிற்கும்"*[24]

என்னும் சிவாக்கிரயோகியர் கூற்றும் இவண் குறிக்கத்தகும்.

உயிர்களின் தொகுதி, 'பசுவருக்கம்' எனப்படும். இஃது எண்ணிலடங்காதது. உயிர்கள், தோற்றமற்றவை. ஆதலின் அழிவும் இல்லாதவை. இவை மூவித நிலைகளுக்கு உட்படும். அவை, இருள்நிலை, மருள்நிலை, அருள்நிலை. இவற்றை முறையே 'கேவலம், சகலம், சுத்தம்' என்பர்.

இவ்வுயிர்கள், தோற்றமில் காலந்தொட்டே ஆணவமலத்தால் மறைக்கப்பட்டுள்ளன; இவ் ஆணவமலம் பரிபாகம் அடைதற்காக. இருவினைகளின் தன்மைக்கேற்பச் சிவபெருமான் **திருவருளால்** உடம்புகளைப் பெற்று, 'அது அவன் அவள்' என்று சுட்டப்படும் தொகுதிகளாகித் தத்தம் வினைக்கீடான இன்பதுன்பங்களை அடைந்தும்; நல்வினை தீவினைகளைச் செய்தும் இறந்தும் பிறந்தும் வரும் இயல்புடையன; இருள்மலமாகிய ஆணவம் பக்குவப்பட்டபொழுது, திருவருள் பதிதலால், உயிர்க்குயிராய் விளங்கும் சிவப்பேரொளியினால்

இருள்மலம் நீங்கப்பெற்று, இறைவன் திருவடியையடைந்து, மாறாத பேரின்பத்தைத் துய்க்கும் தகுதியைப் பெறுகின்றன.[25]

இக்கருத்துப்பட அமைவது பின்வரும் பாடல் :

*"எண்ணரிதாய் நித்தமாய் இருள்மலத்தின் அழுந்தி*
*இருவினையின் தன்மைகளுக் கீடான யாக்கை*
*அண்ணலரு ளால்நண்ணி அவைஅவரா யதனால்*
*அலகில்நிகழ் போகங்கள் அருந்தும் ஆற்றால்*
*புண்ணியபா வம்புரிந்து போக்குவர வுடைத்தாய்ப்*
*புணரும்இருள் மலபாகம் பொருந்தியக்கால்பாதம்*
*அருளால்*
*உள்நிலவும் ஒளியதனால் இருளகற்றிப் பாதம்*
*உற்றிடும்நற் பசுவருக்கம் எனஉரைப்பர் உணர்ந்தோர்"*[26]

உயிர் என்பது, அறிவுடைப் பொருளாகி, இறைவன் **திருவருளாலே** அறிவிக்க அறிந்து வினைக்கு ஈடாக, எடுத்த உடம்பினுள் தங்கும்,[27] உயிர் 'சதசத்து' எனப்படும்.

உமாபதிசிவம், "சத்து இது என்று"[28] என்னும் பாடலால் பேரொளிப்பிழம்பாகிய இறைவனின் துணைகொண்டே, சிற்றறிவுடைய உயிரானது, பிறவிப் பெரும்பயனை அடைதல்கூடும் என விளக்குகின்றார்.

கண், ஒளியைச் சார்ந்தும் இருளைச் சார்ந்தும் முறையே, பார்வை பெற்றும், பார்வையற்றும் நிற்கும். அதுபோல உயிரும், இறைவனைச் சார்ந்து பேரின்பத்தையும், மலத்தைச் சார்ந்து அறியாமையையும், பெறும். விளக்கொளியின் உதவியின்றிக் கண் காண இயலாததுபோலத் **திருவருளின்** உதவியின்றி உயிரும் அறிய இயலாது.

உயிர், ஒளிதரும் படிகத்தின் இயல்புபோலச் சார்ந்ததன் வண்ணமாம் தன்மை உடையது.

பொய்யாகிய பிறப்பு இறப்புக்களை விட்டு, உயிரை விடுவிப்பதற்காக இறைவன், தன் **பேரருளால்** ஐவகை அவத்தைகளையும் உயிருக்கு ஊட்டுவான்.

தனக்கு ஒருவர் அறிவிக்க வேண்டாமல், அனைத்தையும் தானே ஒருங்குணர வல்லவனாகிய சிவபெருமானால், உயிரானது யாவற்றையும் சார்ந்தும், நுகர்ந்தும் வரும்.[29]

உயிர்கட்கு உலகப் பொருள்களை அறியக் காட்டுவன கருவிகரணங்களேயாம். இக்கருவி கரணங்கள் கூடியபோதுங்கூட, மெய்ப்பொருளாகிய இறைவனை அணுகவும் உயிர்களால் இயலாது. முற்பிறவிகளில் ஈட்டிய தவத்தினாலே, இறைவன் **அருள் உருவாய்**

வந்து, இக்கருவி கரணங்களை நீக்கி, இவ்வுயிர்கள், தன் திருவடிப்பேற்றை அடையுமாறு அருள்பாலிப்பான்.

*". . . . . முன்னம்*
*ஈட்டியதவத்தினாலே இறை அருளுருவாய் வந்து*
*கூட்டிடும் இவற்றை நீக்கிக் குரைகழல் குறுகுமாறே"*[30]

என்பர் உமாபதிசிவம்.

படிகம் தனக்கென ஒருநிறமற்றது; எனினும் ஓர் ஒளி உடையது. அப்படிகத்தின் அருகே சிவப்புநிற மலர்களை வைத்தால் அம்மலர்களின் நிறத்தைக் கவர்ந்து, படிகமும் சிவந்திருப்பதுபோல விளங்கும். ஆனால் இவ்விரண்டும் நிகழக் கதிரவனின் போரொளி துணை நிற்கவேண்டும். அதாவது இரவு நேரத்தில் படிகம், அருகிலுள்ள பொருள்களின் நிறத்தைக் கவர்வதில்லை. அதுபோன்றே உயிர் தன்னையடுத்த பாசத்தின் இயல்பையும் காட்டும்; தனதியல்பையும் காட்டும். ஆனால் இவ்வாறு கூறப்பட்ட இரண்டு இயல்பும் **சிவஞானம் என்னும் பேரொளி** இல்லையேல், உயிர்கட்கு இல்லையாம். பாசஞானம், பசுஞானம் என இரண்டும் ஞானம் என்று கூறப்படினும் இவற்றுக்குத் தன்னுரிமை இல்லையாதலால் உயிர்கட்கு நன்மை தரவல்ல சிவஞானமே ஞானம் என்கின்றார் உமாபதிசிவம். இவ்வாறு திருவருள் ஞானத்தின் உயர்வை எடுத்துரைக்கின்றார்.

*"நன்னலம் பெறநிறைந்த ஞானமே ஞானமென்பர்"*[31]

என்பது இவர் வாக்கு.

*"தன்நிறமும் பல்நிறமும் தானாம்கற் றன்மைதரும்*
*பொன்நிறம்போல் மன்நிறம் இப் பூ."*[32]

எனும் திருவருட்பயன் பாடலும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

உயிர், சிற்றறிவுடையது. எனவே, எதனையும் தன் அறிவினால் தானே அறியும் ஆற்றல் அதற்கில்லை. எனினும் பொறிபுலன்கள்மூலம் வரும் இன்ப துன்பங்களை ஒவ்வொன்றாக நுகர்ந்து, அவற்றைத் தானே அறிந்து நுகர்வதாக எண்ணும். உண்மையில், தன் அறிவுக்கு அறிவிக்கும் சிவஞானப் பரம்பொருள் ஒன்று உண்டு என உணர்ந்து, தன்முனைப்பைவிட்டுத் தானே அதுவாகி நின்று அறியத் தொடங்கினால், தன்னைத்தான் அறியும் ஆற்றல் உயிருக்கு உண்டாகும்.[33]

உயிரானது, தத்துவங்களின் தன்மை உணர்ந்து அவை தன்னின் வேறானவை, சடப்பொருள் என அறிகின்றபோது ஒளிமிகுந்த ஞானம் உதிக்கும். இந்த ஞானமே **திருவருள்**. இத் திருவருளோடு கூடி உயிர், தான் காண்கின்ற தன்மையையும் மறந்து, தன்முனைப்பற்று நிற்கும்போதுதான், 'ஆன்மசுத்தி' நிகழ்கிறது. அவ்வாறு, தெளிவு

நிகழும்போது, அத்திருவருளுக்கு முதலாகத் திகழ்கின்ற சிவம் வெளிப்பட்டுத் தோன்றும். இதனை உணர்த்துவது,

*“தத்துவ மானவற்றின் தன்மைகள் உணருங் காலை”*[34]

என்னும் திருப்பாடல்.

சிவபரம்பொருள், அனாதியே பாசங்களின் நீங்கிய நின்மலப் பொருள். எனவே இறைவன் முதல்வன். அவனுடைய விளக்கம் நிறைந்த அருள், சத்தியாகும்.

*“இறையவன் முதலவன்றன் இலங்கருள் சத்தி யாமே”*[35]

என்பர் உமாபதிசிவம்.

சிவம் ஆகிய கதிரவன் இன்றிச் சுத்த ஞானம் ஆகிய ஒளி வீசுவதில்லை. காலை நேரத்தில் கதிரொளி தோன்றி, உலகெங்கும் மூடியிருக்கும் இருளைநீக்கிக் கதிரவனைக் காட்டுவதுபோலச் சத்தியாகிய பேரொளி, உயிர்களை அனாதியாகத் தொட்டுப் பற்றியிருந்த ஆணவம் முதலிய மலங்களை வாட்டி நீக்கிச் சிவமாகிய கதிரவனை மகிழ்ந்து உணர்த்தி அருளும்.

திருவருளானது, உயிர்களின் விழைவு, அறிவு, செயல்களைத் தடுத்துநின்ற மலத்தை அகற்றி, அவற்றிற்கு இறைவனைக் காட்டும் பேருதவியைச் செய்கின்றது. இதைக்கொண்டு, உயிர்களை இறைவனோடு சமமாகச் செய்யும் என்ற முடிவுக்கு வந்துவிடக்கூடாது.

மலங்கள் நீங்கிய நிலையில், உயிரானது திருவருளோடு சேர்ந்து நிற்கும். இதனைச் சுத்தநிலை என்பர். அஃதாவது திருவருள் வெளிக்குள் உயிர், அடங்கி நிலைபெறும் என்பதாம். அப்போது, எல்லையற்ற வியாபக ஞானம் என்னும் பயன் விளங்கித் தோன்றும்.[36]

உமாபதிசிவம், இந்நூலின் பிற்பகுதியில் ஞான ஆசிரியன் தோன்றுதல், ஞானநிட்டை, பாவனை, திருவைந்தெழுத்தின் பெருமை, சிவஞானியர் செயல், அகப்புறவழிபாடுகள் முதலானவற்றை விரிவாக எடுத்துரைக்கின்றார்.

*“உருத்தெரியாக் காலத்தே உள்புகுந்தென் உளம்மன்னிக்*
*கருத்திருத்தி ஊன்புக்குக் கருணையினால் ஆண்டுகொண்ட*
*திருத்துருத்தி மேயானை”*[37]

என மணிவாசகர், முதல்வன் தமக்குக் காட்டிய திருவருள் குறித்து விதந்து பாடுவர்.

*“கால்கொடுத் திருகையேற்றிக் கழிநிரைத் திறைச்சிமேய்ந்து*
*தோல்படுத் துதிரநீராற் சுவரெடுத் திரண்டுவாசல்*

*ஏல்வுடைத் தரவமைத்தங் கேழுசாலேகம் பண்ணி*
*மால்கொடுத் தாவிவைத்தார் மாமறைக் காடனாரே!"*[38]

என்பது அப்பர் திருமொழி.

*"பந்தித்தவ் வல்வினைப் பற்றறப் பிறவிப்*
*படுகடற்பரப் புத்தவிர்ப் பானைச்*
*சந்தித்த திறலாற் பணி பூட்டித்*
*தவத்தை யீட்டிய தம்மடியார்க்குச்*
*சிந்தித் தற்கெளிதாய்த்திருப் பாதஞ்*
*சிவலோகந் திறந்தேற்ற வல்லானை*
*வந்திப் பார்தம் மனத்தினுள் ளானை*
*வலிவலந்தனில் வந்துகண் டேனே!"*[39]

என்று சுந்தரர் பாடுவர்.

### பாசநீக்கமும் திருவருளும்

'பாசம்' அல்லது 'தளை' மூவகைப்படும் : அவை, ஆணவம், கன்மம், மாயை என்பன. இவைபற்றிய விளக்கம் முன்னரும் தரப்பட்டுள்ளது.

சிவப்பிரகாசத்தில் இம்மூன்று மலங்கள் பற்றிய குறிப்புக்களும் இடம்பெற்றுள்ளன :

*"ஆணவமலம் உயிருக்கு அநாதியாய் உள்ளதாகும். இது நீங்கப் பெறுவதே முத்திவிளைவாம். அம்மலம் எண்ணிறந்த சத்திகளையுடையது. செம்பிற்களிம்புபோல உயிருடன் சமமாக விரவி நிற்பது. கேவலநிலையிலும் உயிரின் அறிவு செயல் விளைவுகளை விளங்கவொட்டாது, மறைப்பது. சகலநிலையிலும், அறிவாதியற்றைக் கீழ்ப்படுத்துவது. எனவே உயிர்களை அவற்றின் வியாபகத்தன்மை விளங்கவொட்டாது மறைத்து ஒடுக்கி அணுத்தன்மைப் படுத்துவதனால், 'ஆணவம்' எனப் பெயர் பூண்டது. உயிர்க்கு இஃதொரு குற்றமாய்க் கிடத்தலினால் 'மலம்' எனப்பட்டது. . . . உயிர்களின் ஞானக் கண்ணை மறைக்கின்றது. இதனாலேயே இதனை 'இருள்மலம்' எனவும் வழங்கலுற்றனர்"*[40]

என்பர் தே.ஆ. ஸ்ரீநிவாஸாசாரியன்.

ஆணவமலத்தைச் சிவப்பிரகாசர், 'இருள்மலம்' என்றும், 'மூலமலம்' என்றும் குறிப்பிடுவர்.

மூலமலம் ஒன்றுதான்; எண்ணுதற்கு அரிய ஆற்றல் உடையது; செறிந்த இருள்கூட இதனோடு ஒப்பிடப்படும்போது 'ஒளி' என்று கருதுமாறு அத்துணை இருண்டது; மயக்கம் தருவது. செம்பினில் களிம்புபோல எப்போதும் உடனிருப்பது; எல்லாப் பெருங்கேட்டிற்கும் காரணமாயிருப்பது. உயிர்களின் அறிவனைத்தையும் மறைத்து நிற்பது; பக்குவம் வந்தபோது உயிரைவிட்டு நீங்கும் தன்மையது;

'திரோதானசத்தி' என்பது ஒன்று உண்டு. இதற்கு 'மறைப்பாற்றல்' என்று பொருள். ஆணவ மலம், பக்குவப்படுதற் பொருட்டுக் கன்ம மலத்தின் பயன்களை உயிர்கட்கு இறைவன் ஊட்டுங்கால், இத் திரோதானசத்தி, மறைப்பாற்றலாக இருந்து, உயிரைப் படிமுறையில் இட்டுச்செல்லும். ஆணவமலம், பக்குவப்பட்டபின், சிவபெருமானின் திருவடிகளை உயிர்கள் அடையும்படிச் செய்வது இத்திரோதான சத்தியாம்.

இதனை விளக்குவது,

*"ஏகமாய்த் தம்கால எல்லைகளின் மீளும் . . ."*[42]

எனும் சிவப்பிரகாசச் செய்யுளாகும்.

'மலங்கள் மூன்று' என்பதே பெருவழக்கு; எனினும் மேலேகூறிய 'திரோதானத்'தையும், 'மாயேயம்' என்பதையும் சேர்த்து, 'மலங்கள்' ஐந்து எனலும் உண்டு. 'இவ் ஐந்து மலங்களும் ஒழியாமல், இறைவன் அருள்பாலிப்பது என்பது நிகழாது. . ."[43] என்கின்றார் ஆசிரியர்.

மணிவாசகரும்,

*"மலங்கள் ஐந்தால் சுழல்வன் தயிரில்பொரு மத்துறவே"*[44]

என்பர்.

செறிந்த இருளில் நிற்கும் ஒருவனுடைய கண், எத்துணையளவு மலர விழித்துப் பார்ப்பினும், இருளே ஆக இருப்பதுபோல், உயிரும், இருள்மலமாகிய ஆணவமலமேயாய் நிற்கும். இவ் ஆணவ மலத்திலிருந்து நீங்கும் வகையின்றியும், பிறப்பு இறப்பு இல்லாமையால், நித்தமாகவும், முழுவதும் ஆணவத்தினால் மறைக்கப்பட்டு இருக்கும். இதனைக் 'கேவல அவத்தை' என்று கூறுவர்.

உயிரைத் தடுப்பது அறியாமை; அந்த அறியாமைதான் 'ஆணவமலம்'.[45] உயிர்கள், தம்மிலும் வேறாகிய, நிலைபேறற்ற உலகத்தை அறியுமாறு செய்தும், அதேவேளையில், உயிர்க்கு உயிராயும், உயிருள் நிறைந்தும் விளங்குகின்ற திருவருளை அறியவிடாமல் செய்வதும், இவ் ஆணவமலமே. படிமுறையால், திருவருளால் பக்குவப்படுத்தப்பட்டு நிறைந்த ஞானம் விளங்கும்நிலை அடைந்தவுடன், உயிர்க்குயிராகி, அவ்வுயிரின் வேறின்றித் திகழும்

இறைவனின் பேரருள், உயிர்கட்கு விளங்கும். எனவே திருவருள் தோன்றும் வரையில், 'உயிர்' என்ற ஒன்று இல்லை என்னும்படி, ஆணவமலம், அவ்வுயிரின்கண் நிலைபெற்று இருக்கும். மாயை, கன்மங்கள் போலன்றி, இவ்வாணவமலம் உயிரைப் பற்றுவதும் நீங்குவதுமின்றி என்றும் பொருந்தி இருக்கும். எனவே மனத்தால் நினைப்பதற்கு அரிய திருவருளின் துணைகொண்டு அறிந்தாலன்றி 'ஆணவமலம் ஒன்று உண்டு' என அறிதலே அரிதாகும்.

இப் பொருளில் உமாபதிசிவம் கூறும் பாட்டு வருமாறு :

*"அந்நிய மானவை உணர்த்தி அநந்நியமாய் நிறைந்த*
*அறிவறியாமையினாலும் அருள்நிலவும் காலம்*
*தன்னில் அவனேயாவு மாய்நின்ற தொன்மை*
*தாமுணர்தலானும் உயிர் தானெனவொன்றிலதாய்*
*மன்னியிடும் மலமாயை கன்மங்கள் மாறி*
*வந்திடும்இங் கிதுவமுவா தாதலினான் மனத்தால்*
*உன்னரிய திருவருளைஒழிய மலம் உளதென்று*
*உணர்வரிதால் அதனுண்மை தெரிவரிதாம் உனக்கே"*[46]

கருணைக் கடலாக விளங்கும் முதல்வன், எவ்வாறு உயிர்களின் ஆணவத்தைப் படிமுறையில் நீக்குகின்றான் என்பதை உமாபதிசிவம் 'புகலும் மலம்'[47] என்ற பாடலின் மூலம் உணர்த்துகின்றார்.

இவ் ஆணவமலத்தை நீக்கும்பொருட்டு, முதல்வன் திருவருளால், 'கலை' முதலான மாயையின் காரியங்கள் உயிரின் அறிவைப் பொருந்தும். 'விளக்கு' என்பது, 'தகழி, திரி, நெய், சுடர்' எனும் பலவற்றையும் உள்ளடக்கி விளங்குவதுபோல, மாயையும் 'தூயமாயை' முதலான பலவற்றையும் கொண்டுள்ளது. அந்தநிலையிலும், உயிரின் அறிவை ஆணவமலம் மறைத்துநிற்கும். ஆணவம் - இருள் போன்றது. மாயை - ஒளிபோன்றது. ஒன்றுக்கொன்று முரண்பட்டு இருக்கும் இவ்விரண்டையும் உணர்ந்தால், இவற்றின் இயல்புகள் விளங்கும்.

உயிரின் அறிவை மறைத்திருக்கும் ஆணவ மலத்தை, 'அசுத்தமாயை'யில் தோன்றிய 'கலை' சத்திதத்துவத்தின் துணையோடு சற்றேவிளக்கும். அப்போது புலன்கள் மூலமாகப் பொருள்களை உயிர் பொருந்தும். இவ்வாறு பொருந்தும் முறைமை சிவபெருமானின் சத்தியாலேதான் நிகழும்.

இந்நூலின் இரண்டாவது பகுதியாக விளங்குவது 'உண்மை அதிகாரம்' ஆகும். இதன்கண்ணும் ஆணவம்பற்றிக் குறிப்பிடுகின்றார் ஆசிரியர்.

உயிரானது, 'நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல்' எனும் ஐந்துநிலைகளைப் பொருந்தியும் நீங்கியும் வரும்.

இவ்வாறு ஐந்து அவத்தைப்படுவது ஆணவமலத்தினால் உண்டாவதாம்.[48]

இரவில், பொருள்களைக் காணமுடியாத மக்கள், செயலிழந்து நிற்பர். விடியலிலோ, கதிரவன் தோன்றியதும், இருள் நீங்க உலகத்துப் பொருட்களைக் கண்டு மகிழ்வர். ஆனால் கதிரவனைப் பற்றியோ, அவனது உதவியைப் பற்றியோ சிறிதும் எண்ணார். 'எல்லாம் தம்மால்' என்றே எண்ணுவர். அதுபோல, ஆணவமலத்தின் மறைப்பை நீக்க இறைவன் தன் **திருவருளால்** உயிர்கள் அறிந்தும் துய்த்தும் வருவதற்குத் திருவுளம் கொள்கின்றான். ஆனால் உயிர்களோ, அவனது திருவருளை மறந்து, 'எல்லாம் தம்மால்' என்று தன்முனைப்போடு செயல்படுவர். இதனை விளக்குவது,

*"இருள் நனி இரவி"*[49]

எனும் பாடல்.

கேவல நிலையிலும், முத்திநிலையிலும் ஆணவத்தின் இயல்பு எவ்வாறு இருக்கும் என்பதை உமாபதிசிவம் விளக்குகிறார்.

கேவலநிலையில், உயிர், ஆணவத்தோடு ஒன்றுபட்டிருந்தும், தான் அழியாமலும், ஆணவத்தைவிட்டு இரண்டுபட்டு நீங்காமலும் இருக்கின்றது. உயிருக்கும் ஆணவத்துக்கும் வேறுபாடு தெரியாத அளவுக்கு, உயிரே ஆணவமாகியும், ஆணவமே உயிராகியும் தோற்றம் அளிக்கும். எனினும் இரண்டின் இயல்பும் கெடுவதில்லை. கேவலநிலையில் ஆணவத்தோடு ஒன்றுபட்டிருந்த நிலை இழிவானது. முத்திநிலையில் உயிர், சிவத்தோடு ஒன்றுபட்டிருக்கும் நிலை மிக உயர்வானது. இது ஒன்றுதவிர, கேவல நிலையில் உயிருக்கும் ஆணவத்துக்கும் உள்ள தொடர்பே, முத்திநிலையில் உயிருக்கும், சிவத்துக்கும் உள்ள தொடர்பு.[50]

கதிரவன் ஒளியின் முன்னால் நிற்கமுடியாத 'இருள்' அழிவதும் இல்லை. ஒளியின்முன் அடர்ந்து நிற்பதும் இல்லை. அதுபோலச் சிவப்பேரொளியின் முன் ஆணவமலம் நிற்பதில்லை. உயிரைப்பற்றிநின்ற ஆணவமலத்தின் வலிமை அழிந்துபோகும். அதாவது, காரணமாகிய ஆணவமலம் இருக்கும். அதன் காரியங்கள் தடைப்பட்டுப் போகும்.

*". . . . . ஒளியின்முன்னர்*
*அழிந்திடும் இருளும் நாசம் அடைந்திடா*
*மிடைந்திடாவே"*[51]

என்பர் உமாபதிசிவம்.

இவர் இயற்றிய 'கொடிக்கவி' நூலிலும்,

"ஒளிக்கு மிருளுக்கு மொன்றே யிடமொன்று
மேலிடிலொன்
றொளிக்குமெனினு மிருளடராது"[52]

என்று கூறுவர்.

இத்தகைய ஆணவம்குறித்து அருளாளர்கள் பலரும் எடுத்துரைத்துள்ளனர். ஆணவம் உண்டு என்பதற்குச் சிவாக்கிரயோகியர் பின்வருமாறு கூறுகிறார் :

*"ஏதுக்கர ஆணவமுண்டென்ன வேண்டு*
*மெனிலுயிர்கள் ஞானத்தைத்தடுப்ப தொன்றிங்கில் கரியல்*
*மாதுக்கமுறா உயிர்கள் எவ்வறிவு மெல்லா*
*வல்லமையும் சுதந்திரமும் மருவியிரும் பிறப்பாந்*
*தீதுற்று வருந்தாது ஞான உருவாமால்*
*சிவன்போல வேநிற்கும் சிற்றறிவு மாகா*
*கோதற்ற முத்தியென்ப தேதுவிடி லென்றே*
*குறித்திடிலவ் வாணவமும் கூறுங் காலே!*[53]

இவ் ஆணவமலம் குறித்துத் திருமுறைவாணர்கள் பலவாறு எடுத்தோதியுள்ளனர்.

*". . . . மலமறுத்து வான்கருணை தந்தானை"*[54]

என்பர் மணிவாசகர்.

*". . . . இழுகு மலம் அறியும்வகை கழுவும்"*[55]

என்பது சம்பந்தர் வாக்கு.

*"மலங்கெடுத்து மாதீர்த்தம் ஆட்டிக்கொண்ட*
*மறையவனை"*[56]

என்பர் நாவரசர்.

*"மலம் தாங்கிய பாசப்பிறப்பு அறுப்பீர்"*[57]

என்பர் சுந்தரர்.

*"இருவினைப்பாசமும் மலக்கல் ஆர்த்தலின்"*[58]

என்பது சேக்கிழார் வாக்கு.

மும்மலங்களுள் ஒன்றாகிய 'கன்மம்' என்பதன் விளக்கமாகக் க. வச்சிரவேல் முதலியார் கூறுவது வருமாறு :

*"உயிர்கள் உடம்புகளோடு கூடியுள்ளபோது*
*மனமொழி மெய்களாற் செய்யும் நல்லனவும் தீயனவும்*

*ஆய செயல்களே 'கன்மம்' எனப்படும். இச் செயல்கள் செய்யப்பட்டு மறையும்போது, செய்வோனுடைய புத்தியில் ஒருவகைப் பழக்கத்தை உண்டு பண்ணி மறையும். அப் பழக்கமே முதல்வனது ஆணையால் 'அறம்' எனவும், 'பாவம்' எனவும் இருவகைப்பட்டு அப்புத்தியைப் பற்றி நிற்கும். இந்த அறம்பாவங்கள் பின், அப்புத்தி தொழிற்பட்டு ஒன்றனை நிச்சயிக்கும்போது, அந்த நிச்சயரூபத்தை மாற்றி இன்ப, துன்ப நுகர்ச்சியைப் பயக்கும்."*[59]

இவ்வுலகம், 'ஒருவன் ஒருத்தி ஒன்று' என்று சுட்டப்படுவதாகி, அதனதனுக்குரிய கால எல்லையில் தோன்றிச் சிலகாலம் நின்று, அதன்பிறகு ஒடுங்கும். ஒடுங்கிய உலகம், 'ஆணவமலம்' பக்குவமடைதற்பொருட்டு, முதல்வனால் மீண்டும் தோற்றுவிக்கப்படும். தோற்றல் - நிற்றல் - ஒடுங்குதல் எனும் இம் முத்தொழில்களை மாறிமாறிச் செய்தற்கு, எல்லையிலா ஆற்றலுடைய ஒருவன் வேண்டும். அவனே சிவபரம்பொருள். 'மாயை' அசைவற்றது; அறிவற்றது. எனவே அதுவாகவே தோன்றுதலும் நிற்றலும் ஒடுங்குதலும் செய்யவல்லதன்று; உயிர்களின் அறிவு சிற்றறிவு; உணர்த்த உணரும் இயல்பின; எனவே தாமாகவே உருவெடுத்துக் கொள்ளும் ஆற்றலற்றவை; வினைகள், மனம் மொழி மெய்களைப் பற்றியே நிற்கும். எனவே அவற்றாலும் உருவத்தைத் தோற்றுவிக்க இயலாது. எனவே முற்றறிவும், முழுமுதன்மையும் உடைய இறைவனே, உயிர்கள் செய்த இருவினைக்கேற்ப அவற்றிற்கு உடல், கருவி, உலகு, நுகர்ச்சிப் பொருள் முதலானவற்றைத் தோற்றுவிக்கின்றான். இஃது சிவனின் திருவருளே!

இக்கருத்துப்பட வருவது,

*"உலகமெலாம் ஒருவனோ டொருத்தி ஒன்றென்று"*[60].

எனும் பாட்டு.

அவ்வாறாயின், இவ்வுடல்களை உயிர்களோடு இறைவன் பொருத்தியது இருவினைப் பயன்களை நுகர்வதற்காக என்ற முடிவுக்கு வரவேண்டியுள்ளது. காலத்தால் உயிரை முற்பட்டுப் பற்றிக்கொண்டது வினையா அன்றி அவ்வினைகளுக்கு இடமாகச் சொல்லப்படும் மாயையா எனும் கேள்வி எழக்கூடும். மாயையும், கன்மமும், உயிரைப் பற்றிக் கொள்ளவில்லை; அநாதிகாலந்தொட்டே உயிரானது, 'மூலமலம்' எனப்படும் ஆணவமலத்தால் கட்டுண்டு கிடக்கிறது. இம்மலம் உள்ளதால்தான் பிறமலங்களும் நெல்லில் உண்டான முளையும் தவிடும் உமியும், நெல்லுள்ளபோதே தோன்றினாற்போல அநாதியாக உள்ளன.

*"அல்லல்மிக உயிர்க்கிவைதான் அணைத்த தீசன்"*[61].

எனும் பாடலால் இக்கருத்தை விளக்குவர் உமாபதிசிவம்.

சிவஞானபோதத்திலும், சித்தியாரிலும் வரும் இதே உவமைபற்றி முன்னர் விளக்கப்பட்டுள்ளது.

*"நண்ணியிடும் உருவதனுக் கேது வாகி"*[62]

எனும் பாடல், கன்மமலத்தின் இயல்புகளைக் கூறுகின்றது.

உயிர்கள் பெறும் உடம்புகளுக்குக் காரணமாதல்; பலவகை நுகர்ச்சிகளால் அழிவில் தோன்றும் தோற்றத்தால் சங்கிலித் தொடர்போல் வருதல்; நுட்பமாய் உயிர்கள்தோறும் செல்லுதல்; மனம்மொழி மெய்களால் இயற்றப்படும் இயல்பினவாதல்; புத்தியைப் பற்றி நிற்றல்; பயன்தரும்போது 'பாவம், புண்ணியம்' எனும் பெயர்களைப் பெறுதல்; ஒடுக்கம் நிகழும்போது மாயையில் பொருந்துதல்; இவ்வாறெல்லாம் கன்மமலம் விளங்கும்.

இக்கன்மம் மூவகையாகக் கூறப்படும். அவை : சஞ்சிதம் (பழவினை); பிராரத்தம் (ஏன்றவினை); ஆகாமியம் (ஏறுவினை); பலபிறவிகளில் ஈட்டிக்கொள்ளப்பட்ட வினைகளின் தொகுப்பு 'சஞ்சிதம்' எனப்படும்; இப் பிறவியில் நுகருமாறு இறைவனால் கூட்டப்படுவது 'பிராரத்தம்' எனப்படும்; இதனை நுகரும்போது உயிர்கள் தம் விருப்பு வெறுப்பால் ஈட்டும் வினை 'ஆகாமியம்' எனப்படும். வினை, பயன்தரும்போது நல்வினை 'புண்ணியம்' என்றும்; தீவினை 'பாவம்' என்றும் பெயர்பெறும். இவற்றின் விளைவுகள் இன்ப துன்பங்கள்.[63]

வினைகளின் வன்மை மென்மைகளுக்கு ஏற்பப் பக்குவப்பட்ட முறையில், அவற்றின் பயன்களை உயிர்கள் நுகருமாறு கூட்டுவிப்பவனும் இறைவனே.[64]

*"வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி*
*தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது"*[65]

எனும் குறட்கருத்து இங்கு எண்ணத்தகும்.

*"பொன்னும் மெய்ப்பொருளும் தருவானை*
*போகமும் திருவும் புணர்ப்பானை"*[66]

எனும் சுந்தரர் வாக்கும் இக்கருத்தை வலியுறுத்தும்.

அறிந்து செய்யும்வினை, அறியாது செய்யும்வினை எதுவாயினும் அவற்றின் விளைவு, புண்ணிய பாவங்களே :

*"ஒரு நல்வினையால், மற்றொரு தீவினை கழிக்கப்படுவதில்லை . . . வினை நீங்குவதற்கு இறைவன் திருவருளே துணை நிற்கவேண்டும்."*[67]

என்று சி.சு. மணி கூறுவது இவண் சுட்டத்தகும்.

நல்வினை தீவினைகளுக்கீடாகப் பிறந்தும் இறந்தும் வரும் உயிர்கள், தத்தம் வினைக்கு ஏற்ப இன்ப துன்பங்களை நுகர்ந்து வரும். உரியகாலம் வாய்க்கும்போது, அவை முடியும் தருணம் இறைவன் திருவருளால் வரும். அதனை 'இருவினை ஒப்பு' என்பர். அஃதாவது, நல்வினை தீவினைகளால் வரக்கூடிய இன்பதுன்பம் இரண்டையும் விருப்பு வெறுப்பின்றி சமமாக நோக்கும் தன்மை உண்டாதலாம்.

'மலபரிபாகம்' எனப்பட்ட, ஆணவ மலத்தின் வலிமைகுன்றிய நிலை எய்தும்பொழுது 'சத்திநிபாதம்' என்னும் '**திருவருள் பதிதல்**' நிகழும்.

'திரோதானசத்தி', உயிர்களின் ஆணவமலத்தின் ஆற்றல் தேயுமாறு, உயிர்களுடன் நின்று உதவி வரும். அதனால் ஆணவமலத்தின் வலிமை குன்றித் தேய, 'மலபரிபாகம்' உண்டாகும். அப்போது திரோதான சத்தியே, **திருவருள் சத்தியாக** மாறி, உயிர்கள் பேரின்பம் அடையத் துணைபுரியும்.

*"புளிப்புச் சுவையுடைய மாங்காய்,*
*பழமாகக் கனியும் காலம் வரும்போது,*
*மாம்பழமாகி இனிப்புச் சுவை தருவது*
*போன்றது இந்த மாற்றம்"*[68]

என்பர் சி.சு. மணி.

*"இனைய பலபிறவிகளில் இறந்துபிறந் தருளால்*

. . . . . . . . . . .

*சினமருவு திரோதாயி கருணை யாகித்*
*திருந்தியசத் திநிபாதந் திகழு மன்றே"*[69]

என்பது உமாபதிசிவத்தின் வாக்கு.

இச் சத்திநிபாதம், 'மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம்' என நால்வகைப்படும். இவற்றுள் மிகத் தீவிரமான நான்காம் 'சத்தி நிபாதம்' நண்ணியவர்கட்கு, உயிருக்குயிராய் விளங்கும் ஞானக் கூத்தப்பெருமான், வடிவம் கொண்டு எழுந்தருளுவன்; **தன் பேரருளினால்** அவர்களின் மலத்தைப் போக்குவான். சரியை, கிரியை, யோகங்களை முறையே கடைப்பிடித்தவர்கட்கு இந்நிலை வாய்க்கும்.[70]

இறைவனுடைய திருவருள் ஆற்றல், வினைக்கீடான பயன்களையும், உயிர்கள் நுகரும்படி செய்கின்றது. ஆயினும் அவ்வுயிர்கள், இறைவனை அறிவது இல்லை.[71]

இக் கன்மத்தைக் குறித்த கருத்துக்கள் திருமுறைகளில் விரிவாக வந்துள்ளன :

*"அவ்வினைக்கு இவ்வினையாம் என்றுசொல்லும்*
*அஃதறிவீர்*

உய்வினை நாடாதிருப்பது உந்தமக்கு ஊனமன்றே
கைவினை செய்துஎம் பிரான்கழல் போற்றுது நாமடியோம்
செய்வினை வந்துஎமைத் தீண்டப் பெறாத்
திருநீலகண்டம்"[72]

என்பர் சம்பந்தர்.

"விளைக்கின்ற வினையை நோக்கி
வெண்மயிர் விரவி மேலும்
முளைக்கின்ற வினையைப் போக
முயல்கிலேன்! இயல வெள்ளம்
திளைக்கின்ற முடியி னான்றன்
திருவடி பரவ மாட்டாது
இளைக்கின்றேன் இருமியூன்றி
என் செய்வான் தோன்றினேனே!"[73]

என்பது அப்பர் வாக்கு.

"குற்றொருவரைக் கூறைகொண்டு கொலைகள் சூழ்ந்த
களவெலாம்
செற்றொருவரைச் செய்ததீமைக ளிம்மையேவருந்
திண்ணமே"[74]

என்பர் சுந்தரர்.

"முன்னை வினையிரண்டும் வேரறுத்து முன்னின்றான்
பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன் - தென்னன்
பெருந்துறையில் மேய பெருங்கருணை யாளன்
வருந்துயரம் தீர்க்கும் மருந்து"[75]

என்பது மணிவாசகர் மொழிந்தது.

"வினையா மசத்து விளைவ துணரார்
வினைஞானந் தன்னில் விடலுந் தேரார்
வினைவிட வீடென்னும் வேதமும் ஓதார்
வினையாளர் மிக்க விளைவறி யாரே!"[76]

என்பர் திருமூலர்.

**மாயை**

"மாயையே மனித வரலாறாகிய நாடகம் நடிப்பதற்கேற்ற காட்சியை அளிக்கிறது. ஆனால் இயல்பாகவே செயலற்றதான மாயையானது கடவுளின் சத்தியாலேயே செயற்பட வேண்டியுள்ளது."[77]

என்பர் ர. ராமானுஜாசாரி.

இம் மாயையைப் பற்றி உமாபதிசிவம், ஆங்காங்கு எடுத்து மொழிகின்றார்.

சிவபெருமானது **திருவருள்** சத்தியினாலே, சுத்த மாயையிலிருந்து 'நாதம்' எனும் தத்துவம் தோன்றும். பின்னர், 'விந்து', 'சதாசிவம்', 'ஈசுரம்', 'சுத்தவித்தை' ஆகியன தோன்றும். அசுத்தமாயையானது, உடல், கருவி, உலகு, நுகர்ச்சிப்பொருள் என நான்கு வகையாகி, உயிர்களை மயக்கவும் செய்யும்; ஆதலின், 'மலம்' எனப்பட்டுச் சிவனருளால் நிலைபெற்றிருக்கும்.[78]

சைவசித்தாந்தக் கொள்கைப்படி, மாயை உள்பொருள்; நித்தியம்; மலஇருளில் தடுமாறும் உயிர்கட்குக் கைவிளக்குப்போல் அறிவை விளக்குவது எனலாம்.

சித்தியாரிலும்,

*"நித்தமாய் அருவாய்*
*ஏகநிலையதாய் உலகத்திற்கோர் வித்துமாய்"*[79]

என வருவது ஒப்புநோக்கத்தகும்.

உலகிற்கு முதற்காரணம் - மாயை; இறைவன் இம் மாயையைக் கொண்டே உலகையும் பிற பொருட்களையும் தோற்றுவிக்கிறான்.

ஆணவமலத்தையகற்றி, உயிர்கட்கு நன்மை செய்தற் பொருட்டே, இங்ஙனம் செய்கின்றான். இஃது அவனது திருவருள்.

'அராகம்' என்ற தத்துவம், உயிருக்குப் பிறபொருள்கள் மேல் மென்மேலும் ஆசையை உண்டாக்கும். 'நியதி' என்ற தத்துவம், உயிர்களின் முன்னைவினை, செய்தவர்க்கன்றி மற்றவர்க்குச் சேராதவாறு வரையறை செய்யும். 'காலதத்துவம்' பலம், எல்லை, புதுமை ஆகியன விளைவிக்கும். ஆனால், இவற்றையெல்லாம் உயிர்க்குக் கூட்டுவிப்பது இறைவனுடைய திருவருளாகிய சத்தியேயாம்.[80]

தத்துவங்களைப் பற்றியும், பிறவிகள் பற்றியும் இந்நூலில் பரக்கக் காணலாம்.[81]

மாயையும், அதன் காரியங்களும், இருவினைப் பயன்களும் உயிர் எந்நிலையில் நின்றதோ. அதற்கேற்றபடி நிற்கும். உயிரானது மலத்தால் கட்டப்பட்டுப் 'பசு' எனப் பெயர்பெற்ற காலத்தில், மாயை முதலிய, அதனைக் கட்டும் 'மல'மாகி நிற்கும். உயிர் கட்டுக்களைவிட்டு நீங்கி, அருளோடு கூடும்போது, மாயை முதலியனவும் 'பாசம்' எனும் பெயரை நீக்கி, **அருளேயாக** நிற்கும்

*". . . . ஆருயிரின் மேவும் அருளெனில் ஒளியாய் நிற்கும்"*[82]

என்பது உமாபதிசிவம் வாக்கு.

இம் மாயை குறித்தும் அருளாளர்கள் மொழிந்துள்ளனர்.

*"பொள்ளத்த காய மாயப் பொருளினை"*[83]

என்பர் நாவரசர்.

*"புலனைந்தும் பொறிகலங்கி"*[84]

எனச் சம்பந்தரும்,

*"பூதங்கள் ஐந்தாகிப் புலனாகி"*[85]

என மணிவாசகரும்;

*"மாயை எழுப்பும் கலாதி"*[86]

எனத் திருமூலரும் கூறுவன இங்குக் குறிக்கத்தகும்.

**சிவப்பேறும் திருவருளும்**

சைவசித்தாந்தம் கூறும் அடிப்படையான - முதன்மையான கொள்கை 'அத்துவிதம்' என்பது, முன்னரே விரிவாக உரைக்கப்பட்டது.

'வீடுபேறு' குறித்து கு. சுந்தரமூர்த்தி கூறுவது இங்கு எண்ணத்தகும் :

"பழத்தில் சுவையும், மலரில் மணமும், நெருப்பில் சூடும், வீணையில் இன்னிசையும், அவ்வப் பொருளில் அடங்கிப் பிரிவின்றி இயைந்து நிற்றல்போல, வீடு பெற்ற உயிரும் சிவப்பரம்பொருளில் இயைந்து இன்புற்றிருக்கும்."[87]

மலங்களிலிருந்து விடுபட்டுச் சிவபெருமானின் திருவடிக்கீழ் நண்ணரிய சிவானந்த ஞானவடிவேயாகி நிற்றலே, சைவசித்தாந்தம் கூறும் சிவப்பேறு அல்லது வீடுபேறாகும்.

உமாபதிசிவம்,

*"அரிவைய ரின்புறு முத்தி"*[88]

என்ற பாடல் மூலம், வேற்றவர்கள் கருதும் 'முக்திநிலை' பற்றிக் கூறி, 'இவை குற்றம் உடையன'. முத்திநிலைபற்றிய சரியான கொள்கை எதுவெனில், 'ஆணவம், கன்மம், மாயை' ஆகிய மும்மலங்களிலிருந்தும் விடுதலைபெற்று, உயிர், "அருளோடும் கூடிப் பேரின்பத்தை எய்துவதுபற்றிய சிறந்த கொள்கையாகும்" என அறுதியிட்டுக் கூறுகின்றார்.

*"திரிமலமும் அகலஉயிர் அருள்சேர் முத்தி*
*திகழ்முத்தி யிதுமுத்தித் திறத்த தாமே"*[89]

என்பது இவர் வாக்கு.

*'திருவருள் ஞானமே ஞானம்'*[90]

என்ற ஆசிரியர் உமாபதிசிவம், உயிரானது சிவப்பேற்றில் திளைப்பது குறித்தும் குறிப்பிடுகின்றார் :

*"தேசுற மருவும் ஆன்ம தெரிசனம் ஆன்மசுத்தி*
*ஆசிலா ஆன்ம லாபம் ஆகமுன் றாகும் மூன்றும்*
*பாசம தகல ஞானம் பற்றல்தான் பணியை நீத்தல்*
*ஏசில் நேயத் தழுந்தல் எனுமிவற் றடங்கு மன்றே"*[91]

ஞானத்தின் பயன்கள் மூன்று : அவை, ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, ஆன்மலாபம். உயிரானது பாசத்தைவிட்டு, உண்மை ஞானத்தைப் பற்றுவது 'ஆன்ம தரிசனம்'. உயிர் தன் செயலை நீத்துத் தன்முனைப்பு நீங்கி, இறைவனது, திருவருள் வழியில் நிற்பது, 'ஆன்மசுத்தி'; உயிர் சிவப்பேற்றில் திளைப்பது 'ஆன்மலாபம்' எனப்படும்.

சைவசித்தாந்க் கொள்கைப்படி, முப்பொருள்களும் என்றும் உள்ளவை. எனவே, இவற்றின் எந்த ஒரு பொருளும் இல்லாத நிலை, கட்டுநிலையிலும் இல்லை; வீடுபேற்று நிலையிலும் இல்லை. வீடுபேற்று நிலையில், உயிர் உயிராகவே நின்று இறைவனின் பேரின்பத்தை என்றும் அனுபவித்துக் கொண்டு இருக்கும். அந்தப் பேரின்ப அனுபவமே 'வான்பயன்'[92] ஆகும்.

இத்தகைய சிவப்பேறு குறித்து மணிவாசகர்,

*"சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட*
*அத்தன் எனக்கு அருளியவாறு யார்பெறுவார்*
*அச்சோவே!"*[93]

என மொழிவது எண்ணத்தக்கது.

*"உள்ளமல நீக்கி யோங்கு சிவானந்த*
*வெள்ளந் திளைத்துவாய் மேவுதலே - கள்ளவிழ்ப்பூங்*
*கொத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்தின்*
*சித்தாந்த முத்தியெனத் தேறு"*[94]

என்பது தருமை ஆதீன முதல்வர் குருஞான சம்பந்தர் வாக்கு.

திருநாவுக்கரசர், உழவாரத் திருத்தொண்டாற்றித் திருப்புகலூரில் எழுந்தருளிய ஈசனை வணங்கித் திருப்பதிகங்களால் ஏத்தி ஒழுகி வரலானார். 'தமியேனைப் புகலூரன் தன்திருவடிக்கீழ் 'இருத்திடும்' என்று எழுகின்ற முன்னுணர்வால் திருப்பதிகங்கள் பல மொழிந்தார். 'திருப்புகலூர்த் திருப்பதிகத் திருப்பாடல்கள், இவ்வுண்மைக்குச் சான்று பகரும்.

*"எண்ணுகேன் என்சொல்லி எண்ணுகேனோ*
*எம்பெருமான் திருவடியே எண்ணி னல்லால்*

*கண்ணிலேன் மற்றோர் களைகண் !*
*கழலடியே கைதொழுது காணின் அல்லால்*
*ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்*
*ஒக்க அடைக்கும்போ துணர மாட்டேன்*
*புண்ணியா ! உன்னடிக்கே போதுகின்றேன்*
*பூம்புகலூர் மேவிய புண்ணியனே*"[95]

நாவரசரின் விருப்பம் நிறைவேறியது. அண்ணலாம் சிவபெருமானின் திருவடி நீழலில் இன்புறுதலாகிய சிவப்பேறு பெற்றார்.

இவ் விந்தை நிகழ்ச்சியைச் சேக்கிழார்,

"*மண்முதலாம் உலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்*
*புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன் எனப்புகன்று*
*நண்ணரிய சிவானந்த ஞானவடிவேயாகி*
*அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்டஅர சமர்ந்திருந்தார்*"[96]

என்று அருளுவது இங்கு எண்ணத்தக்கது.

சம்பந்தர்,

"*மாதில் பங்கன் மலரடி*"[97]

என்பர்.

**முடிவுரை**

இவ் இயல் வாயிலாக அறியத்தகும் முடிபுகளாவன :

1. 'சிவப்பிரகாசம்' எனும் தலைப்பு, முதல்வனின் திருவருளைக் குறிக்கும்.
2. உமாபதிசிவம், தம் நூலில் 'திருவருள்' என்ற சொல் தவிர, 'அருள், கருணை, ஒளி, சத்தி' என்ற சொற்களையும் ஆண்டுள்ளார்.
3. நூற்பாயிரத்தில் 'திருவருள்' பற்றிய குறிப்பு இடம்பெற்றுள்ளது.
4. உயிர்களைத் துன்பக் கடலினின்றும் திருவருளால் எடுத்து, இன்பக்கரை சேர்த்தற்பொருட்டே முதல்வன், திருவிளையாடல்களைச் செய்கின்றான்.

. உயிர்கட்கு முதல்வன் அறிவிக்க, அவை அறிந்து, கருவி கரணங்களினின்றும் நீங்கி, அவனது திருவருளால் திருவடிப்பேறு எய்தும்.

சிவப்பேரொளிமுன் ஆணவமலம் நிற்பதில்லை.

வினைகளின் வன்மை, மென்மைகளுக்கேற்பப் பக்குவப்பட்ட உயிர்கள் நுகருமாறு கூட்டுவிப்பதும் முதல்வனின் திருவருளேயாம்.

8. திரோதான சத்தி, திருவருட்சத்தியாக மாறி, உயிர்கட்குப் பேரின்பம் அடையத் துணைபுரியும்.

9. உயிரானது, கட்டுக்களை விட்டு நீங்கி, அருளோடு கூடும்போது, 'மாயை' முதலியனவும் 'பாசம்' எனும் பெயரை நீக்கி, அருளேயாக நிற்கும்.

10. உயிரானது, மும் மலங்களினின்று விடுபட்டு, அருளோடு கூடிப் பேரின்பத்தை நுகர்வதே, சைவசித்தாந்தம் கூறும் 'முத்திநிலை' பற்றிய சரியான கொள்கையாம்.

11. தேவார, திருவாசகம் முதலானவற்றில் இடம்பெற்ற சைவசித்தாந்தக் கருத்துக்கள், உமாபதிசிவம் அருளிய 'சிவப்பிரகாசத்'திலும் சொல்லப்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. கா. சுப்பிரமணியபிள்ளை, **தமிழ்நாட்டு இந்து சமயங்களின் வரலாறு**, பக்.11,12.
2. 'அருள்' சொல் எடுத்தாண்டுள்ள பாடல் விவரப்பட்டியல் பின்னிணைப்பு எண் 9இல், தரப்பட்டுள்ளது.
3. **'திருவருள்'** சொல் இடம்பெறும் பாடல் : 10,11,36,100.
4. **சிவப்பிரகாசம்**, 7:3-4.
5. **சித்தாந்தசாத்திரம்**, மன்றப்பதிப்பு, ப.718.
6. **சிவப்பிரகாசம்**, 1:1.
7. **சித்தாந்த சாத்திரம்**, மு.கா. நூல். ப.718.
8. **சிவப்பிரகாசம்**, 2:1-2.
9. **மேலது**, 3:2-3; 4:1.
10. **மேலது**, 10:3-4.
11. **சித்தாந்தசாத்திரம்**, மு.கா.நூல், ப.748.
12. **சிவப்பிரகாசம்**, 11:3.
13. ந. சுப்புரெட்டியார், **சைவசமய விளக்கு**, ப.3,4.
14. **சிவப்பிரகாசம்**, 13.
15. **மேலது**, 14:2.
16. **சிவஞானசித்தியார்**, 75.
17. **சிவப்பிரகாசம்**, 15.
18. **மேலது**, 17.
19. **மேலது**, 18.
20. **சிவஞானசித்தியார்**, 57:3-4.
21. **திருவாசகம்**, 166:2; 165:3.
22. க. வச்சிரவேல் முதலியார், 'சைவம்', **சைவமும் வைணவமும்**, ப.63.
23. **சிவஞானசித்தியார்**, 210:4.
24. ஆதாரம் : வா.ஆ. தேவசேனாபதி, **சைவசித்தாந்தத்தின் அடிப்படைகள்**, ப.81.
25. சி.சு. மணி, (உ.ஆ.) **சிவப்பிரகாசம்**, ப.30.
26. **சிவப்பிரகாசம்**, 19.
27. **மேலது**, 53.

28. **மேலது**, 57.

29. **மேலது**, 58,59,61,64.

30. **மேலது**, 68:2-4.

31. **மேலது**, 69:4.

32. **திருவருட்பயன்**, 55

33. **சிவப்பிரகாசம்**, 72.

34. **மேலது**, 73.

35. **மேலது**, 74:4.

36. **மேலது**, 75,77,78.

37. **திருவாசகம்**, 477:1-3.

38. அப்பர் **தேவாரம்**, 4485.

39. சுந்தரர் **தேவாரம்**, 7907.

40. தே.ஆ. ஸ்ரீநிவாஸாசாரியன், இருபா இருபஃது நூலின் விரிவுக் கட்டுரை, ப.4,5.

41. **சிவப்பிரகாசம்**, 19:1; 20:2.

42. **மேலது**, 20.

43. **மேலது**, 32:4.

44. **திருவாசகம்**, 133:4.

45. **சிவப்பிரகாசம்**, 33,35.

46. **மேலது**, 36.

47. **மேலது**, 37.

48. **மேலது**, 39,52.

49. **மேலது**, 66.

50. **மேலது**, 87.

51. **மேலது**, 88.

52. **கொடிக்கவி**, 1:1-2

53. **சிவநெறிப்பிரகாசம்**, 47. ஆதாரம் : வ.ஆ. தேவசேனாபதி, மு.கா.நூல், ப.

54. **திருவாசகம்**, 483:3.

55. சம்பந்தர் **தேவாரம்**, 3525:3

56. **அப்பர் தேவாரம்**, 6449:2.

57. **சுந்தரர் தேவாரம்**, 8061:1.

58. **பெரியபுராணம்**, திருநாவுக்கரசர் புராணம், 129.

59. க.வச்சிரவேல் முதலியார், **மு.கா. நூல்**, ப.68.

60. **சிவப்பிரகாசம்**. 16.

61. **மேலது**, 25.

62. **மேலது**, 28.

63. சி.சு. மணி, **மு.கா. நூல்**, ப.45.

64. **சிவப்பிரகாசம்**, 29.

65. **திருக்குறள்**, 377.

66. **சுந்தரர் தேவாரம்**, 7827:1.

67. சி.சு. மணி, **மு.கா. நூல்**, ப.51.

68. **மேலது**, ப.72.

69. **சிவப்பிரகாசம்**, 48:1-4.

70. **மேலது**, 49.

71. **மேலது**, 67.

72. **சம்பந்தர் தேவாரம்**, 1247.

73. **அப்பர் தேவாரம்**, 4919.

74. **சுந்தரர் தேவாரம்**, 7878:1-2.

75. **திருவாசகம்**, 620.

76. **திருமந்திரம்**, 2557.

77. ர. ராமானுஜாசாரி, **சைவசித்தாந்தம்**, ப.76.

78. **சிவப்பிரகாசம்**, 22.

79. **சிவஞானசித்தியார்**, 143:1-2.

80. **சிவப்பிரகாசம்**, 23.37.40.

81. **மேலது**. 41-47.

82. **மேலது**, 70:4.

83. அப்பர் **தேவாரம்**, 4462:1.

84. சம்பந்தர் **தேவாரம்**, 1394:1

85. **திருவாசகம்**, 484:1.

86. **திருமந்திரம்**, 2168.

87. கு. சுந்தரமூர்த்தி, **அறுவகைச் சமயம் - சைவசித்தாந்தம் ஒப்பீடு**, ப.198.

88. **சிவப்பிரகாசம்**, 50.

89. **மேலது**, 50:4.

90. **மேலது**, 69:4.

91. **மேலது**, 71.

92. **மேலது**, 73.74.

93. **திருவாசகம்**, 650:3-4.

94. **முத்திநிச்சயம்**, 22.

95. அப்பர் **தேவாரம்**, 7295.

96. **பெரியபுராணம்**, திருநாவுக்கரசுநாயனார், 427.

97. சம்பந்தர் **தேவாரம்**, 2899:4.

# 7
# பிற சாத்திரங்களில் 'திருவருள் விளக்கம்'

## முன்னுரை

"சிவஞானபோதம், சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம்" எனும் இம்மூன்று நூல்கள் தவிர எஞ்சிய சாத்திர நூல்கள் பதினொன்றாகும். 'உந்தி, களிறு' எனும் வெண்பாவில் சொல்லப்பட்ட வரிசைமுறைப்படி, "திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், இருபா இருபஃது, உண்மை விளக்கம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மை நெறிவிளக்கம், சங்கற்பநிராகரணம்" எனும் நூல்கள், இவண் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

> *"மெய்கண்ட நூல்களை அருளிய அருளாளர்கள் இறைவனையே குருவாகக் கொண்டு வளர்ந்த உபதேச பரம்பரையில் வந்தவர்கள். இவ்வுண்மையால்தான் சைவம் இறைவனையே முதல் குரு- மூர்த்தியாகக் கொண்டு வளர்ந்தது எனக் கூறக் காரணமாயிற்று"*[1]

என இந்நூலாசிரியர்களைப் பற்றிக் கு. சுந்தரமூர்த்தி குறிப்பிடுவர்.

இந்நூல்களில் இயம்பப்படும் 'திருவருள்' மிகவும் விரிந்தது; ஆதலின் ஈண்டுச் சுருக்கமாகவே ஆராயப்படுகின்றது.

### 7.1. திருவுந்தியார்

## அருள்

திருவியலூர் உய்யவந்த தேவநாயனார், தாம் அருளிய 'திருவுந்தியார்' நூலில் 'அருள்' என்ற சொல்லை, இரண்டு இடங்களில் (18,40) எடுத்தாள்கின்றார் என்பது இங்கு எண்ணத்தக்கது.

## அத்துவிதமும் திருவருளும்

சிவபரம்பொருள், 'ஒன்றாய் - வேறாய் - உடனாய் நிற்கும் பெருந்தகைமை கொண்டது; எப்பொருளிலும் கலந்து நிற்கும் அப்பொருள், எதனாலும் தொடக்குறுவதில்லை. தன்னை நோக்கிச் சரணடைவார்க்கு இரங்கி அருள்புரியும். அவன் அருளே கண்ணாகக் காணின், உயிர்களுக்கு இரங்கி அருள் புரிவான்;

> *"தாக்கியே தாக்காது நின்றதோர் தற்பரம்"*[2]

என்பதில் 'தாக்கியே' என்பதற்கு அனைத்துப் பொருள்களிலும், 'ஒன்றாய் - வேறாய் - உடனாய்' என்பது பொருள்.

யாழ்ப்பாணத்து நீர்வேலி. ஆ. முத்துக்குமார சுவாமிகள், இவ் 'அத்துவிதம்' பற்றியும், 'சத்தி' பற்றியும் கூறும் பாடல் இங்கு நோக்கத்தகும் :

*"இறைவனுயிர் களினுடனத் துவிதமாய்நின்*
*றியற்றுவே ரவர்வினைகட் கேற்ப மாயை*
*யிடமாகப் பிரபஞ்சந் தோன்றச் செய்தற்*
*கிசைந்துயிரு முடலும்போற் கலந் தொன்றாயும்,*
*உறைவுறுமெய்ப் பொருட்பகுப்பாற் கண்ணுஞ்*
*சூரியனும்போல வுயிர்களின் வேறாயுமவ்வவ்*
*வுயிர்க்குயிராந் தன்மையிற்கண் ணொளியுமான்ம*
*போதமும்*
*போலுயிர்க ளிடத்துடனுமாகிப்*
*பறைவறு பேரறிவொளியாய் நிற்கும் பாங்கிற்*
*பற்றலிலாச் சிவமெனவு முயிர்வழித்தாய்ப்*
*பற்றிநிற்குந் தன்மையினிற் சத்தியென்றும்*
*பஞ்சகிர்த்யஞ் செயும்பாங்கிற் பதியென்றும்பேர்*
*அறைபடவே நின்றிடுவ னிறைவன்மன்றி லாடுகின்ற*
*மலர்ப்பதத்தி னாட்ட மல்லால்*
*அணுவளவு மசைவ தொன்று மிலையென்றெண்ணி*
*யகங்காரம் விடுத்தடிக் கீழடங்கி நில்லே"*[3]

## முதல்வனும் திருவருளும்

இறைவன் பேரின்பவடிவினன்; சிவசத்தியோடு நீக்கமின்றி விளங்குபவன்; அவன், தானும் தன்தையலுமாய் எழுந்தருளிவந்து அடியார்களை ஆட்கொண்டு அருள்புரிவான்.

*"பேரின்ப மான பிரமக் கிழத்தியோ(டு)*
*ஓரின்ப துள்ளானென் றுந்தீபற*
*உன்னையே ஆண்டதென் றுந்தீபற"*[4]

என்கின்றார் உய்யவந்ததேவர்.

பேயால் பீடிக்கப்பட்ட பெண்டிர்போல, உயிரைக் காணவும்; அப்பெண்டிரைப் பிடித்த பேய்போல, இறைவனைக் காணவும் வேண்டும். இவ்வாறு காணவல்லார்க்கு இறைவனின் திருவருள் வாய்க்கும்.

பரம்பொருளே எழுந்தருளிவந்து அருள் பாலித்த பிறகும், அதுவரை பழகிவந்த பழக்கத்தைத் தவிர்த்து, இப்பொழுது கிடைத்த திருவருளைச் சார்ந்து பழகுவதே சிறந்தது.

இறைவனின் திருவருள் 'பொற்கொழு'வைப் போன்றது. அத்னையறிந்து வேறுசெயல் அறியாது நிற்றல் வேண்டும்.[5]

*"என் சிந்தையில் நிறைந்தும், என் தலையில் உன் திருவடிகளைச் சூட்டியும், என்னை ஆட்கொள்ளுதற்காகத் தன் திருவருள் ஆகிய சத்தியோடு எழுந்தருளியுள்ள எம்பெருமான் என்றென்றும் வாழ்க!"*[6]

என முதல்வனின் திருவருட்டிறத்தைப் போற்றிப் புகழ்கின்றார் ஆசிரியர்.

**உயிர்களும் திருவருளும்**

'யான், எனது' என்னும் செருக்கை ஒழித்து, 'அனைத்துமே அவன் செயல்' எனத் தன்முனைப்பற்ற உயிர்களுக்கு, இறைவன் தன்னையே கொடையாகத் தந்து அருளுவான். தன் முனைப்பு அற்ற இடத்தில்தான், சிவபரம்பொருள் கிட்டும்.[7]

உயிர்களுக்குத் துன்பத்தைத் தருவன, 'யான், எனது' எனும் அகப்பற்றும் புறப்பற்றும். இவ்விரு பற்றுக்களையும் அறுத்து ஒழிக்கும் வல்லமை உயிர்கட்கு இல்லை. இறைவனையே பற்றிக்கொண்டால், இப்பற்றுக்கள் ஒழியும். இறைவனின் திருவடியைப் பற்றுவதென்பது அவன் திருவருள் வழியே செல்லுதல் என்பதாம். இதனை உணர்த்துவது பின்வரும் செய்யுள் :

*"பற்றை யறுப்பதோர் பற்றினைப் பற்றில்அப்*
*பற்றை யறுப்பரென் றுந்தீபற . . . ."*[8]

வள்ளுவரும்,

*"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்*
*பற்றுக பற்று விடற்கு"*[9]

என மொழிந்ததும் இங்கு ஒப்புநோக்கத்தகும்.

"இறைவனது திருவருளை என்றும் மறவாதிருக்க வேண்டும்" என்பதற்கான காரணத்தை ஆசிரியர் கூறுவது வருமாறு :

*"மருளுந் தெருளும் மறக்கும் அவர்கண்*
*அருளை மறவாதே யுந்தீபற*
*அதுவேயிங் குள்ளதென் றுந்தீபற"*[10]

"உயிர்கள் பல நேரங்களில் அறியாமையால் பற்றப்பட்டும், உணர்த்த உணரும் நேரத்தில் தெளிவோடு கூடியும், மாறிமாறிவரும் இயல்புடையன. அவை, இறைவனின் திருவருளில் ஒன்றிநிற்குமாயின், மயக்கமும் தெளிவும் மாறிமாறிவரும் நிலை முற்றிலும் அழிந்துபோகும். எனவே, திருவருளை மறவாதிருப்பாயாக" என்பது பொருள்.

தனக்குவமையில்லாத முதல்வன், உயிர்கள்மீது கொண்ட கருணையால் இரங்கிவந்து அருள் பாலிக்கிறான்; அதற்குக் காரணம், அருள்வடிவான சத்தியோடு நீக்கமின்றி நிற்பதனாலேயாம்.

சிவபெருமான், அளவிலாக் கருணையால், உயிர்களோடு பொருந்திநின்று, அவற்றுக்கு உடனாய் நின்று உதவுகின்றான்.[11]

சிவபெருமான், சொல்லுக்கும் மனத்துக்கும் எட்டாத பெருமையுடையவன்; எனினும் எளிவந்த தன்மையால், உயிர்கள்பால் இரக்கங்கொண்டு திருவருள் பாலிக்கின்றான். உயிர்களோடு ஒன்றாய் - வேறாய் - உடனாய் நிற்கும் அவன், அவ்வுயிர்கள் பக்குவப்பட்டகாலத்து, அவற்றைச் சிவமேயாக்கி ஆட்கொள்ளுகின்றான். இதனால் உயிரானது இறைவனாகிவிடாது; உயிர் எப்போதும் உயிரே; இறைவன் என்றும் இறைவனே. ஆகையால் கட்டுநிலையிலும் வீட்டுநிலையிலும் உயிரானது சிவபெருமானின் அடிமைதான். இப்பொருள்பட வருவது பின்வரும் பாடல் :

*"அவனிவ னான தவனருளா லல்ல(து)*
*இவனவ னாகானென் றுந்தீபற*
*என்றும் இவனேயென் றுந்தீபற"*[12]

உயிர்கள், சிவஞானத் தேனைப் பருகாமல், சிற்றின்பக் கள்ளை உண்டு மயங்கும்; எனவே பால் வற்றிப்போன வறட்டுப் பசுக்களைப்போல் பயனற்றவை எனக் கண்டிக்கின்றார் ஆசிரியர்.[13]

## பாசநீக்கமும் திருவருளும்

*"மூலையி லிருந்தாரை முற்றத்தே விட்டவர்"*[14]

என்னும் செய்யுளுக்குச் சி.சு. மணி, பின்வருமாறு விளக்கம் தருவர்

*"காரிட்ட ஆணவக் கருவறையிலே கண்ணில்லாக் குழவிபோல உயிர்கிடந்தது. அறியாமை இருளில் மூழ்கிக் கிடந்த அதற்குத் தன்னுடைய இழிநிலையை அறிந்துகொள்ளவோ, அதனை நீக்கிக் கொள்ளவோ ஆற்றலில்லை. சிற்றுயிர் படும் துன்பத்தை அறிந்து அதனைக் கேவல நிலையிலிருந்து மீட்டுப் படிப்படியாக உய்வடையும் பொருட்டு இறைவன் அதற்குக் கருவி கரணங்களைத் தருகிறான். அந்நிலையில் உயிர் படிமுறையாக வளர்ந்து பக்குவம் அடைந்த நிலையில், அவன் ஞான ஆசிரியனாகவும் எழுந்தருளி வந்து பேரின்பப் பெருவெளியிலே இறைவன் உயிரைச் சேர்க்கிறான். அவனே காலப் பெரியவன்; அவனே தவத்தின் தலைவன்."*[15]

ஆணவமலத்தால் உயிர் மூடப்பட்டிருந்ததால், இறைவன் உயிருக்கு உடலை வழங்கினான். இவ்வுடல் அத்திப்பழம் போன்றது. இவ் அத்திப்பழத்துக்கு ஆசை வைத்து, முத்திக்கனியை இழந்துவிடக்கூடாது.[16]

'கன்மம், மாயை' பற்றிய கருத்துக்களும் இந்நூலில் வந்துள்ளன. "கருமம் முடித்தவர்"; "நீ செயல் செய்யாதே"; "முளையாது மாயை"; "அண்டம் முதலாம் அனைத்தையும் உட்கொண்டு கொண்ட அத்தை"[17] என்பன சான்றுகள்.

மாயையைப்பற்றி நில்லாமல், சிவபெருமானையே பற்றி நிற்றல் வேண்டும்; அதுவே முத்திப் பயணத்தைத் தரும்.

## சிவப்பேறும் திருவருளும்

'முத்தி' அல்லது 'சிவப்பேறு' பெறுதற்குரிய வழியையும் ஆசிரியர் கூறுகின்றார்.

"உயிரும் அந்தக்கரணங்களும் உலகியலை நோக்கி அலையாமல் திருவருள் நெறியிலே அடங்கித் தன்னை இழந்திருப்பதே 'முத்தி' பெறுதற்குரிய வழி. உயிர்க்கு உயிராக எக்காலத்தும் மறைந்திருக்கும் திருவருளை, ஞான ஆசிரியன் தன் அருட்கண்ணால் 'தீக்கை' செய்து வெளிப்படுத்தி அருள, அதை உணர்ந்து, அந்தத் திருவருள் வழியாக நின்றொழுக வேண்டும். அப்போது சிவபரம்பொருள் உயிரை ஈர்த்து ஆட்கொள்ளும்.[18]

சிவோகம் பாவனையில் மூழ்கியிருப்போர், தாமரை இலைத் தண்ணீர்போல், எதிலும் பற்றின்றி இருப்பர். இறைவனின் திருவருளே முத்திக்கு வித்து. அத்திருவருளை நாடிப் பாசமுளையைக் கைவிட்டவர்களே, பேரன்பினில் விளைந்த அருட்டிறம் உடையவர்களாவர். சிவோகம் பாவனையுடைய சிவஞானியர், நனவிலேயே, மேலான நிலைபெறுவர்.

> *"அறிவும் அறியாமையும் மாறிமாறி வருகின்ற கட்டுநிலையிலிருந்து விடுபட்டு, இன்பமே வடிவாக என்றென்றும் விளங்கும் இறைவனின் திருவருள் வெளியிலே பிரிப்பின்றிக் கலந்து நிற்கும் பேரின்பத்தை விரைவில் கூடுவாயாக"*

என்ற பொருள்பட வருவது பின்வரும் செய்யுள் :

> *"இரவு பகலில்லா இன்ப வெளியூடே*
> *விரவி விரவிநின் றுந்தீபற*
> *விரைய விரையநின் றுந்தீபற"*[19]

இவ்வாறு 'திருவருள்' பற்றிக் குறிப்பிடும் உய்யவந்த தேவர், இந்நூலின்பயன் இன்னது என்பதையும் இறுதிச் செய்யுளில் உணர்த்துகின்றார் :

*"வையமுழுதும் மலக்கயங் கண்டிடும்*
*உய்யவந் தானுரை யுந்தீபற*
*உண்மை யுணர்ந்தாரென் றுந்தீபற"*[20]

*"உய்யவந்ததேவநாயனார் அருளிச் செய்த இந்நூல், உலகமக்களைப் பாசக்கடலிலிருந்து மீட்டு, இறைவனின் திருவடிப்பேறாகிய அக்கரைக்கு ஏற வாங்கும் தோணியாகும். இந்நூலை நல்லாசிரியர் வாயிலாக உணர்ந்தோர், மெய்ப் பொருளை உணர்ந்தோராவர்"*

என்பது இதன் பொருள்.

இவ்வகையில், 'திருவுந்தியார்' நூலில், முதல்வனின் திருவருள் பரக்கப் பேசப்பட்டுள்ளமை தெளிவு.

## 7.2. திருக்களிற்றுப்படியார்

### அருள்

திருக்களிற்றுப்படியாரில், 'முதல்வனின் திருவருள்' என்ற பொருளில், 'அருள்' என்னும் சொல் ஏழிடங்களில்[21] எடுத்தாளப்பட்டுள்ளது. இவைதவிர 'மன்னன் அருள்' (75:1), என உவமையாகச் சுட்டும் ஓரிடம் உண்டு. ஆனால், இஃது இறைவனின் திருவருளைக் குறிப்பதாக இல்லை.

### அத்துவிதமும் திருவருளும்

முதல்வன், 'ஒன்றாய் - வேறாய் - உடனாய்' நிற்கும் 'அத்துவித' நிலை குறித்துத் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனாரும் ஒருபாடலில் எடுத்தோதுகின்றார் :

*"ஈறாகி அங்கே முதலொன்றாய் ஈங்கிரண்டாய்*
*மாறாத எண்வகையாய் மற்றிவற்றின் - வேறாய்*
*உடனாய் இருக்கும் உருவுடைமை யென்றுங்*
*கடனா யிருக்கின்றான் காண்"*[22]

இதற்குப் பழைய உரை வருமாறு :

*"சங்கார காலத்திலே நிட்களமாயும், சிருட்டி காலத்திலே நிட்கள சகளமாயும், அட்டமூர்த்தியாயும், இவற்றுக்கெல்லாம் வேறாயும், இவற்றுக்கெல்லாம் உடனாயும் இருக்கின்ற அருள்வடிவுடைமையைக் கர்த்தா, எக்காலமும் முறைமையாகக் கொண்டிருப்பன்."*[23]

இதனைக் கு. வைத்தியநாதன் பின்வருமாறு விளக்குவர் :

*"உலகமும் உயிர்களும் தன் முழு நிறைவில் நிலைத்திருக்கும் பொருட்டு, இறைவன் உலகோடும் உயிர்களோடும் **ஒன்றாய்** நிற்கிறான்; உலகத்தை இயக்கும் பொருட்டும், உயிர்கட்கு அறிவிக்கும்பொருட்டும் இறைவன், உலகினின்றும், உயிர்களினின்றும் **வேறாய்** நிற்கிறான்; உலகம் இயங்கும் பொருட்டும், உயிர்கள் நுகரும் பொருட்டும், இறைவன் உலகோடும் உயிர்களோடும் **உடனாய்** நிற்கிறான். இவ்வாறு மூன்று நிலைகளிலும் இறைவன் ஒரேசமயத்தில் நிற்காவிட்டால், இறைவனால் உயிர்களுக்குப் பயன் ஏற்படாது. எனவே சுத்தாத்துவிதக் கொள்கையே பகுத்தறிவுக்கு உகந்ததாக உள்ளது."*[24]

## முதல்வனும் திருவருளும்

முதல்வனின் சத்தியே திருவருள்; ஆதலின் என்றும் உமையொடு கூடியே நிற்பன். உயிர்களுக்கு அருள்பாலிப்பதற்காக, அம்மையப்பராகச் சிவபெருமான் விளங்குகின்றான். அவன், தன் திருவருளாகிய சத்தியுடன் தோன்றிப் பாசவீடும் சிவப்பேறும் அளித்தருளுவன். இதனைக் கூறுவது,

*"அம்மையப்ப ரேஉலகுக் கம்மையப்பர் என்றறிக*
*அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர்"*[25]

என்னும் பகுதி. மேலும் இந்நூலாசிரியர்,

*". . . . . அம்பிகையோ(டு) எவ்விடத்தும்*
*காத்தல் அவன் கடனே காண்"*[26]

என்றும் கூறுவர்.

எந்நிலையில் இருந்தாலும், தன்முனைப்பை ஒழித்தவர்களுக்கே சிவபெருமான், உமையம்மையோடு எழுந்தருளி, அருள்பாலிப்பான்.

இவ்வகையில், சிவமும்சத்தியும் பொன்னும் அணிகலனும்போல வேறுபாடற்று விளங்கும். ஊழிக்காலத்தில்கூட, தன் சத்தியையும் தன்னுள் அடக்கித் தான் ஒருவனே நின்று தனிக்கூத்து ஆடுபவன்.

அம்மையப்பராகிய இறைவன், தன்னைவிட்டுப் பிரியாத திருவருளும் தானுமாக எளிவந்து பக்குவமடைந்த உயிர்களை ஆண்டிலனேல், அண்டம் கடந்து நிற்கும் அவனது பெருவடிவை யார்தான் அறியமுடியும்? மேலும், அவன், அருளே திருமேனியாகக்கொண்டு ஆகமங்களை அருளாமற் போனாலோ, அகச்சமயம் ஆறினையும் உணர்த்தாமலிருந்தாலோ, யோகியாக

இருந்து யோகத்தை உணர்த்தாமலிருந்தாலோ, பெருமைமிக்க அருள்நூலும் அருள்வழியும் எவ்வாறு உலகில் நிலைபெறக் கூடும் என்று வினவுகின்றார் இந்நூலாசிரியர்.[27]

சிவபெருமானுக்கு அவனுடன் நீக்கமின்றி நிற்கும் அவனது திருவருளே வடிவமாகும். எனவே திருவருளை உள்ளவாறு உணர்ந்து, அதிலே ஒடுங்கி நின்றபடியே நிற்கவேண்டும். அவ்வாறு திருவருளின் வயப்பட்ட நிலையில், ஞானமுதல்வனாகிய சிவபெருமான், முன்தோன்றி அருள்பாலிப்பான்.

திருவருளே கண்ணாகக் காணுமிடத்து, இன்ப வடிவாகத் தோன்றும் பொருளே 'சிவம்' ஆகும். அச்சிவத்தைப் பேரன்பால் நினைந்து போற்றினால், அவன் தன் பேரருளால் உயிரோடு இரண்டறக் கூடிநின்று திருவருள் பாலிப்பான்.[28]

சிவபரம்பொருளான முழுமுதல் - வித்து; அவ்வித்தினின்றும் வெளிப்பட்டுத் தோன்றும் 'முளை'யே - திருவருள். மறைந்திருப்பது - சிவம்; வெளிப்பட்டுத் தோன்றுவது - திருவருள் ஞானம்; இதனைக் கூறுவது,

*"வித்தும் அதன் அங்குரமும் போன்றிருக்கும்*
*மெய்ஞ்ஞானம்"*[29]

எனும் பாடல்.

நாடாளும் மன்னவன், தன் குடிமக்களிடத்து ஒத்த அருள்கொண்டு, அவர்களை முறைசெய்து செங்கோல் செலுத்துவது போலச் சிவபெருமானும், உலகத்து உயிர்கள் அனைத்தையும் நடுவுநிலை பிறழாமல் காத்து, அருள்புரிவான். உலகத்து உயிர்கள் யாவும் சிவபெருமானின் அடியவரே. ஆயினும் அவனிடத்து மிக்க அன்புகொண்டு ஒழுகி அவன் திருவடியையன்றிப் பிறிதொன்றினை நினையாதவர்க்கு அவன் மிகுந்த அருள்பாலிப்பான். அத்தகைய அடியவர்களே அவனோடு ஒத்துநிற்றலால் யாவையுமாய்த் திகழ்வார்கள்.

இக் கருத்துப்பட வருவது, பின்வரும் பாடல் :

*"மன்னன்அருள் எவ்வண்ணம் மானிடர்பால் மாணவக*
*அன்ன வகையே அரனருளும் . . . "*[30]

**உயிர்களும் திருவருளும்**

*"உயிர்கட்குப் பசுத்துவத்தை நீக்கிச் சிவத்துவத்தை விளக்குதற்கணுளவாகிய இரக்கம், முதல்வனுக்கு அநாதியேயுள்ளது. அவ்விரக்கம் வேறு பொருளன்று; முதல்வனுக்குரியதாகிய சத்தியேயாம்"*[31]

என்பது, உயிர்கட்கு முதல்வன் காட்டும் திருவருள குறித்து மாதவச் சிவஞான சுவாமிகள் கூறும் உரைக்கருத்தாகும். திருக்களிற்றுப்படியாரில் இதுகுறித்த செய்திகள் இயம்பப்பட்டுள்ளன.

உயிரின் பக்குவம் அறிந்து, திருமேனிதாங்கி, அதற்கு அருள் செய்வதற்காக வந்த ஞான ஆசிரியனின் திருவடிகளை வணங்கி, உயிர் இறைவனோடு பொருந்தும் முறைமையை அவரிடத்தில் உபதேச முறையால் பெற்று, அவ்வழியில் தவறாது ஒழுகி வந்தால், சத்தியும் சிவமுமாகிய இறைவன் உயிரை ஆட்கொள்ளுவான். அப்போது உயிரைப்பற்றியுள்ள பாசம் நீங்கித் திருவருள், உயிரின்கண் நிலைபெறும். அதனால் சிவஞானமும் சிவமும் அப்போதே அறியப்படும்.

இறைவன் அறிவிக்கவே அறியும் திறம் பெறுகின்றன உயிர்கள். எனவே, மெய்ப்பொருளைக் காண்பதற்குச் சிவபெருமானின் திருவருள் துணைநிற்றல் வேண்டும். எனவே, நன்மைதரும் சிவதருமம், சிவயோகம், சிவஞானம் ஆகியவற்றால் உயிர் படிப்படியே முன்னேறிப் பக்குவப்படவேண்டும்; அப்போது 'யான்' என்னும் செருக்கு நீங்கும். சிவன், வெளிப்பட்டுத் தோன்றுவன்.

'அகப்பற்று, புறப்பற்று' என்று கூறப்படும் 'யான், எனது' என்னும் செருக்கை அறுத்தவர்கள், நிலத்தின்மீது தாழவைக்கப்பட்ட மணியின் நாவைப்போல் அசையாதிருப்பர்.

தோற்றமில் காலந்தொட்டே, உலகமானது, சிவபெருமானுக்கு உடைமை; உயிர்கள் அவனுக்கு அடிமை.

எனவே, உயிர்களைப் பிணித்துள்ள பாசங்களை அறுத்து, அவற்றின் துயரத்தை நீக்குவது சிவபெருமானின் கடமை.[32]

> *"உயிர் உய்வதற்கு ஒரேவழி, அவனது திருவருளை உணர்தலாகும்."*

என்பதை இந்நூலாசிரியர் பின்வரும் பாடலால் குறிப்பிடுகின்றார் :

> *"சிவன்முதலே அன்றி முதலில்லை என்றும்*
> *சிவனுடைய தென்னறிவதென்றும் சிவனவனது*
> *என்செயல தாகின்ற தென்றும் இவையிற்றைத்*
> *தன்செயலாக் கொள்ளாமை தான்"*[33]

இதற்குப் பின்வருமாறு சி.சு. மணி, உரைவிளக்கம் தருவர் :

> *"சிவபெருமான் ஒருவனே முழுமுதற்பொருள். அவனன்றி முதற்பொருள் என்று சொல்லுவதற்குரிய பொருள் வேறு ஒன்றும் இல்லை. என்னுடைய அறிவு என்று நான் கூறுகின்ற யாவும் அப்பெருமான் அறிவிக்க அறிந்ததன்றி நானாக அறிந்தன அல்ல. அதுபோலவே நான் இயற்றுகின்ற எந்தச் செயலும்*

*அப்பெருமானுடைய துணையின்றி நிகழாது என்பதை உணர்ந்து இவை அனைத்தையும் அறிபவனும் செய்பவனும் இறைவனே; நான் அல்லேன் என உணர்வதே உயிர் உய்வதற்கு உரிய வழியாகும்."*[34]

**பாசநீக்கமும் திருவருளும்**

திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார், 'ஆணவ'த்தை, 'ஆணவமூலமலம்' என்றும் ஆணவமலத்தின் காரியமாகிய 'மோக'த்தை 'மோகக்கொடி' என்றும் கூறுகின்றார்.[35]

"சிவப்பேரின்பத்தை நுகரவேண்டுமானால், ஆணவம் தேய்ந்துபோக வேண்டும்" என்பதைச் "செய்யாச் செயலை" எனும் பாடல் மூலம் விளக்குகின்றார் நூலாசிரியர்.

'பிறர் எவராலும் செய்தற்கரிய ஐந்தொழில் இயற்றுபவன், சிவபெருமான்.' அவற்றைத் தன் சங்கற்ப மாத்திரையால் செய்பவன். இப்பெருமையை அறிந்து, உயிரானது, அவனது திருவருளோடு ஒன்றித் தன் செயல்களையும், தன்நினைப்பையும் விட்டொழித்தால், அந்நிலையிலேயே ஆசைக்கொடியை வளர்க்கும் ஆணவமலம் உயிருக்குத் துன்பம் செய்யாமல் தேய்ந்துபோகும். அவ்வாறு அது தேய்ந்தால் பிறப்பு இறப்பு இன்றி என்றும் சிவப்பேரின்பத்தை நுகர்ந்து மகிழலாம்.[36]

உயிரை, 'முத்திமுதற்கொடி' என்றும்; அவ்வுயிரைப் பற்றி நின்ற மோகத்தை 'மோகக்கொடி' என்றும்; திருவருளைக் 'கத்தி' என்றும் கூறுவர் இவர்..

*"முத்தி முதற்கொடிக்கே மோகக் கொடிபடர்ந்(து)*
*அத்தி பழுத்த தருளென்னுங் - கத்தியினால்*
*மோகக் கொடியறுக்க முத்திப் பழம்பழுக்கும்*
*ஏகக் கொடியெழுங்காண் இன்று"*[37]

'உயிர்' என்னும் கொடியானது, நன்றாக வளர்ந்து, 'முத்தி' எனும் 'கனி' தருதற்கு உரியது; ஆனால், அந்த முத்திக் கொடியைச் சுற்றி, 'ஆணவமலத்'தின் காரியமாகிய 'மோகம்' எனும் கொடி பற்றிப்படர்ந்து மூடியுள்ளது. இதன் விளைவாக, முத்திப்பழம் பழுக்காமல் அத்திப்பழம் பழுத்தது. 'திருவருள்' எனும் கத்தியால், அம்மோகக் கொடியை வேருடன் வெட்டி வீழ்த்தினால், சிவானந்தப் பெருவாழ்வாகிய முத்திப்பழம், பழுக்கும். அப்போது உயிர், இறைவனோடு இரண்டறக் கலத்தலாகிய பேரின்பம் அடையும் என்பது கருத்து.

மேலும் இந் நூலாசிரியர் "சிற்றம்பலக் கூத்தப்பெருமான், தன் பேரருளால், திருமேனி தாங்கி, ஞானாசிரியனாக என்முன் தோன்றி, என்னைப் பிணித்திருந்த ஆணவ மூலமலம் என்னைவிட்டு நீங்குமாறு

தளையிலிருந்து விடுவித்து என்னை ஆட்கொண்டான" என்றும் கூறுகின்றார்.[38]

மும்மலங்களுள் ஒன்றான 'வினை' குறித்தும் இந் நூலாசிரியர் குறிப்பிடுகின்றார். 'வினை, கருமம், கன்மம்' என்பன இவர் எடுத்தாளும் சொற்கள்.

காணப்பட்ட திருமேனியுடைய ஞான ஆசிரியரின் உபதேசமொழிகளைக் கடைப்பிடித்துத் தன்முனைப்பற்றுத் திருவருளில் ஒடுங்கிநின்றவர்களே, தமது வினைத் தொடக்கை அறுத்தவர்கள் ஆவர்.

வினை இரண்டு வகைப்படும். அவை, 'மெல்வினை', 'வல்வினை'. மலரும் நீரும் கொண்டு இறைவனை வழிபடுதல் 'மெல்வினை' எனப்படும். சிறுத்தொண்டநாயனாரைப்போல இறைவன் பொருட்டுக் கொடுந்தொழில் செய்வது 'வல்வினை' எனப்படும். இவ்விரண்டில் ஏதாவது ஒன்றில் நிலைத்துச் சிவத்தொண்டு செய்தால், சிவபெருமான் திருவருளால், வினைப்பயன் நீங்கும்.[39]

உயிர்களுக்கு எக்காலத்தும் உண்மையான பற்றுக்கோடு, இறைவனின் திருவடிகளே. எனவே உலகச் சார்புகளை விட்டொழிக்க வேண்டும். அவ்வாறு விட்டொழித்தால், வினையினால் வரும் துன்பங்கள் சாரமாட்டா; இதனை உணர்த்தும் பாடல் வருமாறு :

*"சார்புணர்ந்து சார்புகெட வொழுகின் என்றமையால்*
*சார்புணர்தல் தானே தியானமுமாம் - சார்பு*
*கெடவொழுகில் நல்ல சமாதியுமாம் கேதப்*
*படவருவ தில்லைவினைப் பற்று"*[40]

திருவள்ளுவர், "சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின்"[41] என்றருளிய குறட்பாவை அப்படியே எடுத்தாண்டுள்ளார் இந்நூலாசிரியர்.

*"திருவருளை உணர்ந்து உலகியல் சார்பு நீங்கும்படிக்கு ஒழுகினாயென்று திருவள்ளுவர் உரைத்தபடியினாலே; திருவருளை உணருகிறதே தியானமுமாம்; உலகியல் சார்பு விட்டகலத் தன்முனைப்பு முற்றிலும் அற்றுப்போனால் அதுவே சமாதியுமாம்; இந்நிலை அடைந்தவர்களுக்கு வினையால் வரும்துன்பங்கள் சார்வதில்லை."*

என்பது இப்பாட்டின் பொருள்.

வினைகள் அடுத்தடுத்து வந்துகொண்டேயிருப்பதால், அவ்வினைகட்கு ஏற்ப உயிரும் நன்மை தீமைகளை அனுபவித்துக் கொண்டுதான் இருக்கவேண்டுமா? உயிருக்கு உய்வே இல்லையா? என்ற கேள்வி எழுதல் இயற்கை. இதற்கு இந் நூலாசிரியர்,

"திருவருளை ஒருகூறாகக் கொண்ட உமைபாகன் ஒருநாளும் ஆன்மாவைக் கைவிடமாட்டான்" என்கின்றார்.

*". . . . . சிவபதிதான் கைவிடுமோ*
*மாதொருகூ றல்லனோ மற்று"*[42]

என்பது இவ் அருளாளர் வாக்கு.

இனி, 'மலம்' என்றும், 'குற்றம்' என்றும்,[43] பொதுவாக மும்மலங்களையும் குறிப்பிடுவர் இந் நூலாசிரியர்.

நாவுக்கரசர்,

*"மூலநோய் தீர்க்கும் முதல்வன் கண்டாய்"*[44]

என்று கூறுவது முதல்வனின் திருவருளைக் குறிப்பதாம்.

'மாயை' பற்றிக் கூறவந்த இந்நூலாசிரியர்,

*"அருமாயை ஈன்றவள்தன் பங்கனையார் காண்பார்*
*பெருமாயைச் சூழல் பிழைத்து"*[45]

என்பர். "நுண்ணிய மாயையிலிருந்து இவ்வுலகங்கள் அனைத்தும் தோற்றுவித்து அருளும் சிவசத்தியைத் தன்னுடைய ஒருபாகத்திலே கொண்டிருக்கும் உமையொரு பாகனை, மாயைக்கு உட்பட்டவர் எவர்தாம் காணஇயலும்?" என்பது பொருள்.

### சிவப்பேறும் திருவருளும்

நால்வகை நெறிகளைக் கடைப்பிடித்துச் சிவோகம் பாவனையில் நின்று, இறுதியில் சிவப்பேறு அடைதலாகிய முத்திநிலை குறித்துத் திருக்கடவூர் உய்யவந்ததேவநாயனார் பல பாடல்களில் விளக்குகின்றார்.

உறக்கம் வந்தவர்களைத் தூய படுக்கையில் விட்டுவிட்டால் அவர்கள் 'தூங்குகிறோம்' என்ற உணர்வின்றி எவ்வித முயற்சியுமின்றித் தாமாகவே ஆழ்துயில் கொள்வர். அதுபோலச் 'சரியை, கிரியை, யோகம்' எனும் இம்மூவகை நெறிநின்று பக்குவப்பட்ட உயிர்கள் ஞானாசிரியரின் கடைக்கண் நோக்கம் வாய்க்கப்பெற்ற மாத்திரத்தானே, இறைவனுக்கு மீளா அடிமை பூண்டு, அவனது திருவருள்வழி எம்முயற்சியுமின்றி இருப்பர். பின்பு, அவர்களிடத்துச் சிவபெருமானின் திருவருள்ஞான விளக்கமும் மெல்ல மெல்ல உண்டாகும்.

*ஐயன் அருட்கடைக்கண் ஆண்டதற்பின் அப்பொருளாய்ப்*
*பைய விளையுமெனப் பார்"*[46]

என்கின்றார் இவர்.

இறைவனின் திருவடிநோக்கி இட்டுச் செல்லும் வல்லமையுடையது 'திருவைந்தெழுத்து'. ஞானாசிரியர் வழி இதனைக்கேட்டு முறைப்படி ஓதிவந்தால், 'தற்போதம்' கெடும். அதனால், அம்மையப்பனாகிய இறைவன், உயிரோடு கூடவே நின்று, துன்பந் துடைத்து, எல்லையில்லாப் பேரின்பத்தை வழங்கி அருளுவன்.

உரைக்கு அடங்காத பெருமையுடையது திருவருள். அதனைப்பெற்று, அதன்வழி ஒழுகி, அரிய பரம்பொருளைக் கண்டவர்களுக்கு வெளியிட்டுச் சொல்லமுடியாத சிவப்பேரின்பத்தை அருளி, அவர்களைப் பேசாத மோனநிலையில் இருத்துவான் சிவபெருமான்.

முன்னர்ச் சொன்ன மெல்வினை, வல்வினை இவற்றில் எதுவுமின்றி, இறைவன் திருவருளில் ஒடுங்கிச் செயலற்று, ஏதும் செய்யாமலிருந்தாற்கூட சிவப்பேரின்பத்தை எய்துதல்கூடும்.

சிவத்தோடு ஒன்றிய சிவஞானச் செல்வர்கள், உள்ளதை உள்ளவாறே அறிவர். ஏனெனில் அவர்களது அறிவு தமக்கென அறியும் அறிவன்று.

ஒளியே வடிவான அருட்சத்தியுடன் என்றென்றும் பிரிப்பின்றி நிற்கும் சிவபெருமான், தன்னிடத்து மீளாத அன்பு பாராட்டும் மெய்யடியார்க்குச் சிவப்பேரின்பத்தை அவர்கள் இவ்வுலகில் வாழ்கின்ற போதே வழங்கியருளுவன்.

> *'அணைந்தோர்' ஆகிய 'சீவன்முத்தர்கள்' இவ்வுலகில் உடம்போடு வாழ்கிற காலத்திலேயே சிவபெருமானது திருவருளுக்கு உரியவர்களாகின்றனர்.*[47]

முதல்வனின் திருவருள்பேற்றினை விதந்து கூறவந்த இந் நூலாசிரியர், "வாக்குமனம் கடந்த வான்கருணையாளனாகிய சிவபெருமான், தன் அடியார்களை ஆண்டுகொண்டு, அவர்களைச் சிவமாக்கி அருள்பாலித்தது, பெருங்கருணைத் திறத்தினாலேயன்றி, வேறன்று. சிவபெருமான், எளிவந்த தன்மையோடு ஆண்டிலனேல், இவ்வுயிர்கள் எவைதாம் அறனாய் நிற்கின்ற தன்மையைத் தாமாக அடையமுடியும்?" என்கின்றார். இதுகுறித்த பாடல் வருமாறு :

> *"அவனிவனாய் நின்ற(து) அவனருளால் அல்ல(து)*
> *எவனவனாய் நிற்கின்ற தேழாய்"*[48]

மணிவாசகர், தமக்குச் சிவபெருமான் காட்டிய திருவருட்பேறு குறித்து நூல் முழுதும் பரக்கப் பேசுவர்.

*"புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானும் தேறினன் காண்க
அவன்எனை ஆட்கொண்டு அருளினன் காண்க"*[49]

என்பது அவற்றுள் ஓரிடம்.

திருக்கடவூர் உய்யவந்ததேவநாயனார், தமக்கு ஞானாசிரியராக எழுந்தருளிவந்து காட்டிய திருவருளைத் தம் நூலின் இறுதிப் பகுதியில் சிறப்பாக எடுத்துரைக்கின்றார். "திருவியலூர் ஆளுஞ் சிவயோகி"; "தாளைத்தந் தென்பிறவித் தாளை அறவிழித்தார்க்கு"[50] என்றெல்லாம் வருமிடங்கள் சான்று.

இதுகாறும் கூறியவற்றால், திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார், தமது நூலில் முதல்வனின் திருவருட்டிறத்தைப் பலபடியாகப் போற்றியுள்ளமை அறியலாம்.

## 7.3 இருபா இருபஃது

### அருள்

அருணந்திசிவாசாரியர் தாம் அருளிய 'இருபா இருபஃது' என்னும் இச்சிறு நூலில், இருபத்தைந்து இடங்களில் 'அருள்' என்ற சொல்லை எழுத்தாண்டுள்ளார் என்பதுகொண்டே முதல்வனின் திருவருட்டிறத்தை ஒருவாறு அறிய இயலும். மேலும், 'சத்தி, தாள், கருணை' முதலான சொற்களையும் கையாள்கின்றார்.[51]

### அத்துவிதமும் திருவருளும்

அருணந்திசிவாசாரியர், தம் ஞானாசிரியராம் மெய்கண்டதேவரையே முதல்வராகக் கொண்டு, அவரை முன்னிலைப்படுத்தித், தமக்கு ஏற்பட்ட ஐயங்களை வினவி அறிவதுபோல இந்நூலை அருளியுள்ளார்; ஆயினும், வினாக்கள் அமைந்த போக்கிலேயே விடைகளும் சுட்டப்படுகின்றன.

"எண்திசை விளங்க" என்று தொடங்கும் பாடலில்,

*"என்னின் ஆர்தலும் அகறலும் என்னைகொல்?"*[52]

எனவருவது, சைவசித்தாந்த அத்துவிதக் கொள்கையை உட்கொண்டது.

முதல்வன், ஒரோருகால் ஆன்மாக்களுடன் கூடியிருத்தல் போலவும், ஒரோருபோது விலகியிருப்பது போலவும் உணரப்படுகின்றான். இவ்வாறான இரண்டு நிலையும் இறைவன் உடையவனா என்னும் ஐயப்பாட்டினை விண்ணப்பித்தற்பொருட்டு இவ்வாறு வினவலுற்றார் ஆசிரியர்.

இப்பகுதிக்குத் தே.ஆ. ஸ்ரீநிவாஸாசாரியன் தரும் உரைவிளக்கம் இவண் குறிக்கத்தகும் :

"முதல்வன், உயிர்களை எல்லாம் தன்னுட் கொண்டிருத்தலால் இரு திறமான இலக்கணங்களுடன் இலகுகின்றான். ஒன்று, பொது இயல்பு. மற்றது, சிறப்பு இயல்பு. உயிர்களோடு ஒன்றியும் வேறாயும் உடனாயும் இருந்துகாட்டி அநுப்பவமூட்டித் தன்னை அடைவிக்கின்றமை பொது இலக்கணமாம். இம் முறையில் சத்தியாகவும், பதியாகவும், ஆசாரியனாகவும் இருந்தருளு-கின்றானாவன். இங்ஙனம் உபகரிக்காவிடில், உயிர்கட்கு உய்தியே இராது. ஒரு வயலில் வளர்ந்து நிற்கும் கரும்பினுள் இனிய சுவைச்சாறிருப்பினும், மற்றும் ஆங்குவளரும் கரும்புகட்கெல்லாம் இனிய சாறூட்டுதற்கான இன்மையை அந்நிலப்பரப்பு எங்கும் குறைவறப் பெற்றிருப்பதுபோல், முதல்வன் மேற்கூறியவாறு சிறப்புவகையில் நடிப்பினும், தன் இயல்பிலே சித்துச் சத்தாக யாண்டும் விளங்குகின்றானாவன். இது, அவனுடைய சிறப்பிலக்கணமாம். இச் சிறப்பின்றேல் மேற்கூறிய பொது இயல்பு நிகழாது. ஆதலால், இவ்விரண்டியல்புகளும் இறைவற்கு வேண்டுவனவாயின. மேற்கூறப்பட்ட பொதுத்தன்மையில் உயிர்கட்கு நிலைத்தல் உதவியைச் செய்தற்பொருட்டு உடம்புடன் உயிர்கலந்திருத்தல்போல உயிருடன் இறைவன் கலந்தே உள்ளான். மேலும், உயிர்கட்கு அறிதல் எனப்படும் உதவியை யாற்றுதற்பொருட்டுக் கண்ணொளியும் சூரியனும் போலப் பொருள்தன்மையால் வேறாகவும் உள்ளான். அகர உயிரும் ஏனைய அக்கரங்களும்போல என்ற உவமமும் இதற்குத் தரப்படும். மற்றும், உயிர்கட்குச் செல்லுதலுதவி புரிதற்பொருட்டு, ஆன்மாவும் ஆன்மஞானமும்போல உடனாய் நின்றும் உபகரிக்கின்றான். இறைவன் எங்கும் வியாபகமாயிருத்தலால் அங்கங்கே உயிர்களோடு உடனாய் நிற்பவனாகின்றான். இங்ஙனம் முதல்வன் திருவருள், உயிர்களோடு யாண்டும் பிரிப்பின்றி நிற்றலால், 'அத்துவிதமா'யுள்ளான் என்பர்"[53]

இவ்வாறே அருணந்திசிவம், "உற்றவர் பெற்றவர்" என்ற பாடலிலும், இதே கருத்தை வலியுறுத்தி,

*"ஒன்று ஆகாமல் இரண்டா காமல்*
*ஒன்றும் இரண்டும் இன்றா காமல்"*[54]

என்று கூறுவர்.

## முதல்வனும் திருவருளும்

பதியாகிய முதல்வன், ஆன்மாவைவிட்டு எப்போதும் நீங்காதிருப்பவன்; பொய்ம்மைக்குப் பகைவன்; வரம்பில் ஆற்றலுடையவன்; இயல்பாகவே பாசங்களில் நீங்கியவன்; அறிவே வடிவான பேரொளிப் பிழம்பு; கட்டற்றவன்; நடுவுநிலைமையாளன்; உயிரின் பக்குவ நிலையறிந்து ஞானாசிரியனாக எழுந்தருளிவந்து அத்துவாக்களைத் தூய்மை செய்து, வினைகளைப் போக்கி அருள்பவன்; உயிரின் பாசப்பிணியை மாய்க்கும் கண் போன்றவன்.

*"மலம்முத லாயின மாய்க்கும்*
*உலக உயிர்க்கு எல்லாம்ஒரு கண்ணே"*[55]

என்று முதல்வனின் திருவருட்டிறம் போற்றுகின்றார் அருணந்திசிவாசாரியர்.

## உயிர்களும் திருவருளும்

உயிர், சார்ந்ததன் வண்ணமாகிப் பிறவிதோறும் வேறுவேறு உடலில் பொருந்தி நீங்கி வருவது, உயிர் - சதசத்து; உணர்த்த உணரும் சிற்றறிவினது; உடலோடு கூடி உயிர் இருக்கும் காலத்து, அது வரையறைக்குள் அகப்பட்டுக் கட்டு நிலையில் உழல்கிறது; அப்போது பொறிகளின் துணையின்றி எதனையும் அதனால் அறியமுடியவில்லை. இத்தகைய கட்டுக்களிலிருந்து இறைவன் திருவருளால் விடுதலை பெற்று, என்றென்றும் திருவருளில் அழுந்துதலே உயிரின் உண்மை நிலையாகும். ஆணவ மலத்தில் முற்றிலும் மறைக்கப்பட்டு அறிவும் செயலுமற்று இருட்டறையில் கிடக்கும்; பிறவியிலேயே கண் ஒளி இழந்தவனாய் இருந்த உயிரைப் படிமுறையிலே முன்னேற்றுவதற்காகத் தத்துவக் கூட்டங்களை உயிரோடு இறைவன் பொருத்துகிறான்; இது, கண்ணொளி இழந்தவனுக்கு ஊன்றுகோல் கொடுத்து உதவுவது போன்றது.[56]

## பாசநீக்கமும் திருவருளும்

பாசங்கள் 'ஆணவம், கன்மம், மாயை' என மூன்றென முன்னரும் பல இடங்களில் கூறப்பட்டுள்ளன. அருணந்திசிவாசாரியர், இவற்றைப் பற்றியும் இந்நூலில் குறிப்பிடுகின்றார்.

'ஆணவமலத்'தின் காரியமாக 'விகற்பம், கற்பம், குரோதம், மோகம், கொலை, அஞர், மதம், நகை' ஆகிய எட்டும் உளவாகும்; 'மாயையின் காரியங்கள் 'அஞ்ஞானம், பொய், அயர்வு, மோகம், பைசாசூனியம், மாச்சரியம், பயம்' என்ற ஏழும் உளவாகும்; 'கன்ம' மலமானது, 'இருத்தல், கிடத்தல், இருவினைகளை இயற்றல், பரநிந்தை, விடுத்தல், மேவல்' என்ற ஆறு விளைவுகள் உடையது. உயிர்கள் செய்யும் வினைக்கேற்ப இறைவன் உடலை வழங்குகிறான். வினை செய்யப்பட்ட உடனே அழிந்துபோகிறது எனத் தோன்றினாலும், அச்செயலின் பதிவு, மனத்தைப் பற்றிக்கொண்டு கிடத்தலால், உரிய காலம் வரும்போது, அவ்வினைப்பயன் இறைவனால் உயிர்கட்கு ஊட்டப்படுகின்றது; இவ்வகையில், வினைப்பயனை வினை செய்தவர்கட்குத் தவறாமல் கூட்டுவிப்பான்.[57]

“இம்மூன்று மலங்களும் என்னைவிட்டு நீங்காதுநின்று, என்னைத் தம் வழியில் செலுத்தி அவையே நானாகும் வண்ணமும் என்வழி என்று ஒன்று இல்லாமல் போகினும் செய்து என்னைத் துன்புறுத்திவருகின்றன. இவற்றிலிருந்து என்னைக் காத்தருளும் பொருட்டுத் திருவெண்ணெய்நல்லூரில் மெய்கண்டதேவர் என்னும் திருப்பெயர் தாங்கி ஞானாசிரியத் திருமேனிகொண்டு எழுந்தருளி, எனது ஊரும் பேரும் உருவமும் என்னைவிட்டு நீங்கும்படி, என்னை முத்திநெறியில் செலுத்தி, என் பிறவியை வேரறுத்து, என்னை ஆட்கொண்டு அருள்பாலிப்பதற்காகச் சைவத்தின் முழுமலையாகவும், மெய் உணர்வு கொண்டவர்களுக்கு எல்லாம் மெய்யனாகவும் விளங்குகின்ற பெருமானே!”[58] என்று தம் ஆசிரியரின் திருவருளை வியந்து போற்றுகின்றார் அருணந்திசிவாசாரியர்.

எனவே, முதல்வன் திருவருள் இருப்பின், உயிர்கள் பாசம் நீங்கும் என்பது தெளிவு.

## சிவப்பேறும் திருவருளும்

இவ், 'இருபா இருபஃது' நூலில் 'சிவப்பேறு' குறித்தும் முதல்வனின் 'திருவருள்' குறித்தும் சுட்டப்பட்டுள்ளன.

முதல்வன், உயிர்களுக்குக் 'காட்டும் உபகாரம், காணும் உபகாரங்'களைச் செய்துவருகின்றான்.

*“அவரவரைக் கூத்தாட்டு வானாகி”*[59]

என்னும் அருளுரை, இதற்குச் சான்று. எனவே பொருள்களை உள்ளவாறு அறிய, முதல்வனின் திருவருள்துணை உயிர்கட்கு இன்றியமையாதது.[60]

உயிருக்கு, 'இருவினையொப்பு' ஏற்படுகின்றபோது, முதல்வன் குருவாகவந்து, அவ்வுயிரின் மலங்களைப் போக்கித் திருவருளையே வழியாகக்கொண்டு, உயிருக்குள் கோயில் கொண்டிருப்பான். 'மலபரிபாகத்தின்' பின்னர்ச் 'சத்திநிபாதம்' நிகழும்போது, முதல்வன் தனது திருவருளை வழங்குகின்றான். இதனால், 'சஞ்சிதம்' அழிக்கப்படுகிறது; 'ஆகாமியம்' பொருந்துவதில்லை; 'பிராரத்தம்' வருத்துவது இல்லை.[61]

"உலகியற் பொருள்களில் என்மனம் ஈடுபடாமல், இருள் நிலையையும், மருள் நிலையையும் அறுத்துத் தீர்த்தான்; தன் திருவடியில் திளைக்குமாறு அருளினான்" என்ற பொருள்பட, அருணந்தி சிவாசாரியர்,

*"அண்ணல் அருள் ஆலயத்தன் நண்ணிய*
*மலம்முத லாயின மாய்க்கும்*
*உலக உயிரிக்கு எல்லாம்ஒரு கண்ணே"*[62]

என்று அருளுவாராயினர்.

எனவே, அருணந்தி சிவாசாரியர், 'இருபா இருபஃது' நூலிலும், முதல்வனின் திருவருளால் உயிர்கள் பெறும் பேரின்பத்தை எடுத்துரைத்துள்ளார் எனலாம்.

*"உயிரானது, இறைவன் திருவடிக்கீழ் அடங்கிச் சிவானந்த ஞானவடிவாகி என்றும் மலராத பேரின்பத்தை நுகர்ந்து கொண்டிருக்கும் என்பது சைவசித்தாந்தம் எடுத்துரைக்கும் முத்திநிலையாகும்"*[63]

என்று சி.சு.மணி கூறுவதும் பொருத்தமேயாம்.

## 7.4 உண்மை விளக்கம்

### 'அருள்'

நூலில் 'அருள்' எனும் சொல் பதின்மூன்று இடங்களில் எடுத்தாளப் பெற்றுள்ளது; 'அநுக்கிரகம்' 'கருணை' என்ற சொற்களும் வந்துள்ளன. ஆசிரியர் 'சிவனருள், ஈசனருள்' என்று தெளிவாகக் குறிப்பிடுவது இங்கு எண்ணத்தகும்.[1]

### அத்துவிதமும் திருவருளும்

இந்நூலின் ஆசிரியராகிய மனவாசகங் கடந்தார், தம் ஞானாசிரியராம் மெய்கண்டாரிடம் ஐயவினா எழுப்புவதாகவும்; அதற்கு அவர் விடையளிப்பதாகவும் கூறியுள்ளார்.

முதல்வனின் 'அத்துவித' நிலைகுறித்து மனவாசகம் கடந்தார். மூன்று பாடல்களில் குறிப்பிடுகின்றார்; அவற்றின் சுருக்கம் வருமாறு:

(1) "சூரியஒளி, கண்ணொளியோடு கலந்து, **வேறாய்** நின்று அக்கண்ணொளியை விளக்கிப் பொருள்களைக் காணும்படி செய்கிறது; அதுபோல யாம், உன் அறிவில் பொருந்து, **வேறாய்** நின்று, நீ பொருள்களை அறிந்து வரும்படி செய்து வருகின்றோம் என்பதை உணர்வாயாக." இதனை உணர்த்துவது பின்வரும் பாடல்:

*".....நின்று அருக்கன்*
*கண்ணுக்குக் காட்டுமாப் போலே உனதறிவில்*
*நண்ணிஅறி வித்திடுவோம் நாம்"*[65]

(2) "மெய்,வாய்,கண்,மூக்கு,செவி என்னும் ஐம்பொறிகளும், உயிரின் துணையினாலேயே தம் புலன்களை அறிகின்றன; அவ்வாறு அறிய, உயிரும் அவற்றில் பொருந்தி அவையேயாய் **ஒன்றுபட்டு** நிற்றல் வேண்டும். அவ்வாறே யாமும் உனது அறிவினுள் பொருந்தாமல் பொருந்தி, நீயேயாய் உன்னை உணரும்படி செய்து வருகின்றோம்." இப்பொருளில் அமைவது பின்வரும் பாடல்:

*"....ஓவாமல் உன்னை உணர்த்துவோம் உன்னறிவில்*
*மேவாமல் மேவி நாமே"*[66]

(3)" 'அகரம்' ஆகிய உயிர், ஏனைய எழுத்துக்கள் எல்லாவற்றிலும் கலந்து **உடனாய்** நின்று அவற்றை இயக்கும். அதுபோல யாமும், எல்லா உயிர்களிடத்தும் உயிர்க்குயிராய் உடனிருந்து, அவற்றை இயக்குவோம்."

*"அக்கரங்கட்கு எல்லாம் அகரவுயிர் நின்றாற்போல*
*மிக்க உயிர்க்குயிராய் மேவினோம்"*[67]

என்பது ஆசிரியர் வாக்கு.

எனவே முதல்வன், உயிர்களிடத்து அத்துவிதமாய் நின்று திருவருள் புரிகின்றான் என்பதை மனவாசகங் கடந்தார் கூறியுள்ளார் என்பது போதரும்.

இறைவன் உயிர்க்கு வேறாகியும், கலந்து நின்றும் உணர்த்தி வரும் இயல்பைக் 'குன்றா அருளாலே' என்ற பாடலிலும் குறிப்பிடுவர்.[68]

## முதல்வனும் திருவருளும்

தொழில்களை வகுத்துக் கூறவந்த ஆசிரியர்,

*".....சதாசிவரும்*
*அன்றே அநுக்கிரகர் ஆம்"*[69]

என்பர். உயிர்கள், அறிவு முதிர்ந்த பக்குவ நிலையில் தம்மை உணர்ந்து, அதனாலே தலைவனையும் உணர்ந்து, பிறப்பு இறப்புக்களினின்றும் நீங்கி வீடு அடையும்படி செய்தல் அருளல் ஆகும் என்பது கருத்து.[70]

என்றும் மாறாமல் தூய அறிவாய் இருப்பது 'சிவம்', அதன்முன் அறிவில்லாத உலகப் பொருள்கள் எதிர்ப்பட்டு நில்லா; ஆதலின் தூய அறிவாகிய சிவம், அப்பொருள்களைச் சுட்டியறிவதில்லை; அனுபவிப்பதும் இல்லை.

சிவபிரான், திருவைந்தெழுத்தையே திருமேனியாகக் கொண்டு, உயிர்களின் பிறவித் துன்பம் நீங்கும்படி, நின்று திருநடனமாடுவான். அவனது கூத்தின் பெருமையை 'யான்எனது' எனும் செருக்கற்றவரே அறிவர். அவ்வாறு அறிந்து வழிபடும் பேறு பெற்றவர், பின் பிறவாப் பெருநிலை பெறுவர்.[71]

## உயிரும் திருவருளும்

தத்துவங்கள் 'ஆன்மா' அல்ல; அத் தத்துவங்களோடு ஒற்றுமைப்பட்டு நின்று அறிந்து வருகிற 'ஆன்மா' என்ற தனிப்பொருள் உண்டு என்று கூறவந்த ஆசிரியர்,

> *"நின்ற பொருள் தானேகாண் நீ"*[72]

என்பதால் குறிப்பிடுவர்.

> *"தில்லை நடராசப் பெருமான், 'துடி'யை அசைப்பது, பக்குவம் எய்திய உயிரின் உணர்விலிருந்து 'மாயை'யை உதறி விலக்குவதற்கு; நெருப்பை ஏந்திய கை, அவ்வுயிரைத் தொடரும் வலியவினையைச் சுட்டெரித்தற்கு; ஊன்றிய திருவடி, ஆணவமலத்தின் வலி கெட்டு நிறுத்த; எடுத்த திருவடி, பிறப்பு இறப்புக்களில் சுழன்றுவந்த அவ்உயிரை அந்நிலைகளிலிருந்தும் உயர்த்தி அருள்நிலையில் வைப்பதற்கு"*[73]

என முதல்வன், உயிருக்குச் செய்யும் திருவருளைக் குறித்துக் குறிப்பிடுகின்றார் மனவாசகம் கடந்தார்:

> *"......நேயத்தால்*
> *ஆனந்த வாரியில் ஆன்மாவைத் தான்அழுத்தல்*
> *தான்எந்தை யார்பாதம் தான்"*[74]

## பாசநீக்கமும் திருவருளும்

மனவாசகம் கடந்தார், பாசங்களைப் பற்றியும் அவை நீங்கித் திருவருளைப் பெறுதல் பற்றியும் அருளியுள்ளார்.

அறிவை மறைத்து அறியாமையைத் தருவது 'ஆணவம்'; இன்பதுன்ப நுகர்ச்சிகளைத் தருவது, 'நல்வினை தீவினை' என இருவகைப்படும் 'வினை'யாகும்.[75]

சுத்தமாயை, அசுத்தமாயை எனும் இரண்டு தவிரப் 'பிரகிருதி மாயை' ஒன்று உண்டு. ஆனால் இது, அசுத்த மாயையிலிருந்து தோன்றியதேயாம். இப் 'பிரகிருதி மாயை'யிலிருந்து, 'குணதத்துவம், புத்தி, அகங்காரம்' முதலாயின தோன்றும். இறைவனது சத்திக்கு நிலைக்களன் 'சுத்தமாயை'யேயாம்; இச் 'சுத்தமாயை'யிலிருந்தே தத்துவங்கள் தோன்றும். இத்தத்துவங்கள் 'ஆன்மா' அல்ல; இவற்றை அறிவது 'ஆன்மா'.

இத்தகு அறிவில்லாத பொருள்களிலேயே அழுந்தி, அவை வேறு தான் வேறு என்றறியாமல், அவற்றோடு ஒற்றுமைப்பட்டு நிற்கும் உயிரானது, நல்லாசிரியரது அருள் உரைகேட்டு, அவற்றைத் தனக்கு வேறு எனப் பகுத்தறிந்து, அவற்றின் தொடர்பிலிருந்து நீங்கத்தக்க அறிவுப் பொருளாய் இருப்பது உயிராகும்.[76]

இவ்வுண்மையை ஞானாசிரியர் உணர்த்தும் போதுதான், ஆன்மா, அசத்தாகிய உலக சார்பைத் தனக்கு வேறு எனப் பகுத்தறிந்து, அதனின் நீங்கிச் சத்தாகிய சிவத்தோடு கூடி இன்புறும்.

*"அன்றே பகுத்தறிவது ஆன்மாவே"*[77]

என்பர் மனவாசகம் கடந்தார்.

## சிவப்பேறும் திருவருளும்

எல்லையற்ற சிவானந்தப்பேறு எய்தற்கான வழிகளையும் மனவாசகம் கடந்தார் மொழிந்தருளுகின்றார்.

திருவைந்தெழுத்தை அண்ணல் சிவனைக் குறிக்கும் 'சிகாரம்' முதலாக வைத்து இடையறாது எண்ணிவந்தால், திருவருள் வெளிப்பட்டு, உயிரைக் 'கேவலம், சகலம்' எனும் நிலைகளினின்றும் நீக்கி, அருள் நிலையில் சேர்க்கும்; எல்லையில்லாச் சிவானந்தத்தை நுகரச் செய்யும்; அப்போது, இருள் ஆணவமலம் பற்றறக் கழியும்.

*"அண்ணல் முதலா அழகுஆர் எழுத்துஐந்தும்*
*எண்ணில் இராப்பகல் அற்றுஇன்பத்தே - நண்ணி*
*அருளானது சிவத்தே ஆக்கும்; அணுவை*
*இருளானது தீர இன்று"*[78]

என்பர் ஆசிரியர்.

பேரின்பமுத்தி எய்தியோர், பழத்திற் சுவை போலவும், பூவில் மணம் போலவும், நெருப்பில் வெம்மை போலவும், வீணையில் இன்னிசை போலவும், சிவமுதற் பரம்பொருளோடு ஒன்றிப் பிரியாது இயைந்து நிற்பர். இம்முத்தியில், மலம் நீங்கிய உயிர்கள், சிவத்திற் பொருந்தித் தாம் வேறாய் நில்லாமல் சிவமே எனும்படி அதனோடு ஒன்றி

இயைந்திருப்பர். சூரியன் புறப்பட்டவுடன், வானத்து நிலவின் ஒளி அடங்கிவிடுவது போல, முதல்வனது திருவடி அணைந்த உயிரும், இறையின்பத்தில் மூழ்கித் தான் என வேறு நில்லாது, தான் சிறிதும் தோன்றாது, அடங்கி நிற்கும். பார்வையற்றவனது கண்ணில், குற்றமாகிய படலம் நீங்க, அக் கண் ஒளியும் சூரிய ஒளியும் தம்முள் இயைந்து நிற்றல் போன்றது, உயிரும் சிவனும் பிரிப்பின்றி நிற்கும் முறைமை.[79]

"முத்தியில், உயிரானது முதல்வனின் தூய பேரின்பத்தை நுகர்ந்து கொண்டிருக்கும்; இறைவன், அத்தகு இன்பத்தை இடையீடின்றிக் கொடுத்து அருள் செய்பவன்; அப்பேரின்பத்தை விளைவித்து நிற்பது மலம்" என்ற பொருள்பட மனவாசகம் கடந்தார் கூறுவது,

*"முத்திதனில் மூன்று முதலும் மொழியக் கேள்"*[80]

எனும் பாடலாகும்.

இத்தகு முத்திநிலை அடைதற்குரிய வழியையும் கூறுகின்றார் ஆசிரியர். "குரு, இலிங்கம், சங்கமம் எனும் மூன்றிடங்களில் முதல்வனைத் தெளியக்கண்டு வழிபடல் வேண்டும். சீவன்முத்தர்கள், இம்மூன்றினையும் கண்டு மனம் கசிந்து உருகுவர். மலம் நீக்கவல்ல பத்திநெறியில் ஊன்றிநிற்பர். எனவே, 'குரு, இலிங்கம், சங்கம' வழிபாடு, முத்திக்குச் சிறந்த சாதனமாகும்.[81]

- இவ்வகையில், மனவாசகம் கடந்தார், தம் நூலில் முதல்வனின் திருவருளைப் பலபடியாகப் போற்றுகின்றார் எனலாம்.

## 7.5 திருவருட் பயன்

### அருள்

'திருவருள்' என்னும் சொல்லையே நூற்பெயராகக் கொண்ட இந்நூலின்கண், 'அருளது நிலை, அருள்உரு நிலை, ஐந்தெழுத்து அருள்நிலை' என மூன்று அதிகாரங்கள் உள்ளன. நிரம்ப அழகிய தேசிகர் தம் 'சிறப்புப் பாயிரத்'தில், மெய்கண்டார் நூலை 'அருட்பயன்' என்றும் குறிப்பிடுகின்றார்.

நூலினுள், 'அருள்' என்னும் சொல், பதின்மூன்று இடங்களில் ஆளப் பெற்றுள்ளது; மேலும், 'சத்தி, ஒளி, ஞானம், ஞானஒளி, சுடர், கருணை' என்ற சொற்களும் வந்துள்ளன. 'அருள்' என்பதற்கு எதிர்மறையாக, 'அருளா வகை' என்றும் வந்துள்ளது. இவற்றால் உமாபதி சிவம், முதல்வனின் திருவருளுக்கு எத்தகைய முதன்மை கொடுத்துள்ளார் என்பது தெரியவரும்.[82]

## அத்துவிதமும் திருவருளும்

முதல்வன் 'ஒன்றாய் - வேறாய் - உடனாய்' நிற்றலாகிய 'அத்துவித' நிலைகுறித்து உமாபதிசிவம் கூறுகின்றார் :

"காய்ச்சிய நீரில் கலந்து நிற்கும் வெப்பம் போல, இறைவன் எல்லா உலகங்களிலும், எல்லா உயிர்களிலும் **ஒன்றாய்க்** கலந்து நிற்கின்றான்; அதே வேளை, அவன் அவற்றிற்கு **வேறாய்த்** தனித்தும் நிற்கின்றான்" என்ற பொருள்பட வரும்பாடல் :

*"எங்கும் எவையும் எரியுறுநீர் போல்ஏகம்*
*தங்கும்அவன் தானே தனி"*[83]

தமிழில் 'தாடலை' என்றொரு சொல் உளது. இது, 'தாள்+தலை' எனப் பிரித்துப் பொருள்காணக் கூடியது. தாள், தலை என்பன இருசொற்கள். என்னும் 'தாடலை' எனுங்கால் ஒரு சொல்போல உள்ளது. இதுபோன்றே, முத்தியில், ஆன்மா சிவத்துடன் கூடி நிற்கும்போது இரண்டறக் கலந்து நிற்கிறது. எனினும், சிவம் வேறு, உயிர் வேறு.

*"தாடலைபோற் கூடிஅவை தான்நிகழா வேற்றின்பக்*
*கூடலைநீ ஏகமெனக் கொள்"*[84]

இதனை மேலும் விளக்குவதாக அமைவது பின்வரும் பாடல்:

*"ஒன்றாலும் ஒன்றா திரண்டாலும் ஓசையெழா(து)*
*என்றால்ஒன் றன்றிரண்டும் இல்"*[85]

இதற்குச் 'சிந்தனையுரை' வருமாறு :

*"ஆன்மாவுஞ் சிவமும் ஒருபொருளாகில் ஒருவருங் கூடவேண்டுவதில்லை; இரண்டாய் நிற்குமென்று சொல்லுவாயானால், அங்கே சாயுச்சியமென்று சொல்ல வேண்டுவதில்லை; ஒன்றுமல்ல இரண்டுமல்லவென்று வேதாகமங்கள் சொல்லுகையினாலே 'அத்து விதமா'யிருக்கும்"*[86]

இதனை, கு.வைத்தியநாதன் விளக்குவது இவண் சுட்டத்தகும் :

*"முத்திநிலையில், சார்ந்ததன் வண்ணமாம் தன்மை உடைய ஆன்மா, சிவத்தைச் சார்ந்து, சிவத்துடன் அத்துவிதமாய் நின்றாலன்றிப் பேரின்பத்தை அனுபவிக்க இயலாது. எனவே, முத்தியில் ஆன்மா சிவத்துடன் அத்துவிதமாய் நிற்க வேண்டுவது அவசியமாகும்."*[87]

"சூரியனது உதவியாலேயே உலகப் பொருள்களை அறிந்து, அனுபவிக்கின்றனர் மாந்தர். ஆயின் அவர்கள், சூரியவொளியை நினைப்பதில்லை. அதன்மீது கருத்துச் செலுத்துவதில்லை. அவர்கள் உரிய பொருள்களிலேயே அழுந்தி நிற்பதுதான் அதற்குக் காரணம். இனி, உலகப் பொருள்களை நோக்காமல் தமது பார்வையைச் சூரிய ஒளியின் மீது செலுத்தி, அதனைப் பற்றிக் கொண்டு அதன்வழியே மேலே நோக்கினால், அவர்களுக்கு அச்சூரியஒளி மேலேயுள்ள சூரியனைக் காட்டும்.

"இறைவனது ஞானமாகிய அருளும் இவ்வாறே இரண்டுவகையில் செயல்படுகிறது. அது, பக்குவமில்லாத உயிர்களுக்கு, உலகைக் காட்டி உலகையே நோக்கும்படி செய்யும். இனி, உலக ஆசையைத் துறந்து தன்னை நாடுகின்ற பக்குவ ஆன்மாக்களுக்கு அவ்வருள் தன்னைக் காட்டிப் பின் தனக்கு முதலாய் உள்ள சிவத்தையும் காட்டும்"[88]

எனத் 'திருவருட்பயன்' நூலினை விரிவாக ஆராய்ந்தெழுதிய ஆ.ஆனந்தராசன் குறிப்பிடுவதுகொண்டு முதல்வனின் திருவருட்டன்மையை ஒருவாறு அறியலாம்.

நூலின் தொடக்கத்தில் அமைந்த, நிரம்ப அழகிய தேசிகரின் 'சிறப்புப் பாயிரத்'திலேயே 'அருள்நூல்' என மெய்கண்டாரின் 'சிவஞானபோதம்' சிறப்பிக்கப்படுவதோடு, 'அருட்பயன்' என இத் 'திருவருட்பயன்' எனும் நூலும் போற்றப்படுகின்றது.

முதல்வன், அகரவுயிர்போல, உலக இயக்கத்திற்கு முதல்வன் ஆவன். அவன், தன் சத்தியோடு பிரிப்பின்றி நிற்பன்; தனக்குவமை இல்லாதவன், அவனியற்றும் முத்தொழிலும் திருவருளினாலேயாம். உயிர்கள் உய்யும் பொருட்டு 'அரு, உரு, அருவுரு' என்னும் மூவகைத் திருமேனி கொள்கின்றான்; எல்லாம் அறிபவன்; தன்னை நினைந்துருகும் அடியார்கள்தம் அறிவில் நிறைந்துள்ளவன். அனைத்துயிர்க்கும் பேரின்பம் அருளவேண்டுமென்பது அவனது திருக்குறிப்பாம். பிறவிக்கு மருந்தும் அவனே.[89]

"முதல்வனது திருவருளைப் போல் அகில உலகெங்கும் வேறு காண்டல் இல்லை" என்ற பொருள்பட,

"அருளிற் பெரிய தகிலத்தில் வேண்டும்
பொருளிற் றலையிலது போல்"[90]

என்கின்றார் ஆசிரியர். இத்தகைய திருவருளை உணராமல் உயிர்கள் துன்புறுகின்றன. நிலமே அனைத்திற்கும் ஆதாரம்; ஆயினும் மக்கள் அதனை நினைத்துப் பார்ப்பதில்லை. அதுபோலத் திருவருள்தான் தம்மைத் தாங்கிநின்று நடாத்துகின்றது என்றுணராமல் உயிர்கள் வாழ்கின்றன. திருவருள் உணர்வை இழந்தோர், தமக்குத்தாமே கேடு சூழ்ந்தவராவர். நன்னீர்ப் பொய்கையில் நின்றுகொண்டு நீர்வேட்கையால் நாவறண்டு நிற்பது போலத் திருவருள் என்னும் பெருவெளிக்குள் இருக்கும் உயிர்களும், அதன் இன்பத்தை நுகராமல் துன்புறுகின்றன.

பால்நிறைந்த கலத்தின் மேல் ஏறிநின்ற பூனை, அந்தப் பாலைப் பருகாமல், சற்றுத் தொலைவில் உள்ள கரப்பான்பூச்சியைப் பிடித்துத் தின்னக் கருதுவதுபோல இவ் உயிர்களும் திருவருளை மறந்துவிட்டு, உலகப் பொருள்களினால் கிடைக்கும் அற்ப சுகத்தைப் பெற விரைகின்றன. இத்தகைய திருவருளைத் தெரிந்து கொள்ளாமல், அதற்கு ஆட்படாமல், பயனின்றி வாழும் உயிருக்கு ‘முத்திஇன்பம்’ பெற என்ன தகுதியுண்டு என்று வினவுகின்றார் உமாபதிசிவம்.[91]

முதல்வனது திருவருள் - சூரியஒளி போன்றது. அத்திருவருளின் உதவியினால்தான், உயிர்களுக்குள் கட்டுநிலையில் பொதுஇயல்பும், முத்திநிலையில் தன்னியல்பும் விளங்குகின்றன.[92]

## உயிர்களும் திருவருளும்

உமாபதிசிவம், ‘உயிரவைநிலை’ என்னும் அதிகாரத்தில், உயிரின் இயல்புகளைக் கூறுகின்றார்.

உயிர்கள் எண்ணற்றவை. மும்மலமுடையவர் ‘சகலர்’; இருமலம் உடையவர் ‘பிரளயாகலர்’; ஒருமலமுடையவர் ‘விஞ்ஞானகலர்’. உயிர், ‘சதசத்தா’ய் உள்ளது; சார்ந்ததன் வண்ணமாயிருப்பது; ஆணவ இருளின் வயப்பட்டிருக்கும். இத்தகைய உயிர், அளவற்ற துன்பத்திற்கு ஆளாகி வருவதுகண்ட உமாபதிசிவம்,

> “*அன்றளவும் ஆற்றும்உயிர் அந்தோ அருள்தெரிவ(து)*
> *என்றளவொன் றில்லா இடர்*”[93]

எனக் கழிவிரக்கம் கொள்கின்றார். “இது, ஞானமாகிய திருவருள் ஒளியைப் பெற்று இன்பமடைவது எந்நாளோ” என்பது பொருள்.

உயிர்கட்கு என்றும் உறவாக உள்ளது முதல்வனின் திருவருளே. ஆனால், ஆணவமலத்தின் செயற்கையினால், திருவருளே பகைப்பொருளாகத் தோன்றுகிறது. அம்மலம் நீங்கிவிட்டால், திருவருளே இயற்கை உறவுப்பொருள் எனத் தோன்றும்.

பெத்தநிலையிலும் முத்திநிலையிலும் உயிர், யாதொன்றையும் அறியும்படியாக அறிவித்து வருவது திருவருளே; செய்யும் படியாகச்

செய்வித்தும் வருவதும் திருவருளே. ஆனால் உயிரோ, திருவருளாலே இவை நிகழ்கின்றன என்று எண்ணுவதில்லை.

உச்சிப்பொழுதில், பளிங்குத்தூண், பிறபொருள்களின் நிழல்கள் தன்னிடத்தில் படாதபடி, சூரியஒளி ஒன்றையே கவர்ந்து நிற்கும். அதுபோல, உயிரானது, தன்பால் பிற உணர்வுகள் சிறிதும் எழாதவாறு திருவருள் ஒன்றையே முழுதுமாகப் பற்றிநிற்குமானால், மலஇருள் அடியோடு நீங்கும்.

'பாசப்பற்று' எனும் இருளை விலக்கி, 'ஞானநெறி' என்ற ஒளியில் செல்லும் உயிர்கட்கு, முதல்வன் தன் திருவருளாகிய ஒளியை வழங்குகின்றான்.

உயிரானது, அருளுக்கு முதலாகிய சிவத்தோடு கூடும்போது பேரின்பம் உண்டாகும். உயிர், தன்னை மறந்து, தன் அறிவு மறந்து, 'சிவம்' ஒன்றையே அறிந்து அதில் அழுந்தும் இன்பநிலை இத்தன்மைத்தென இயம்ப இயலாது.[94]

**பாசநீக்கமும் திருவருளும்**

பாசம் மூன்று; அவை 'ஆணவம், கன்மம், மாயை' என முன்னர் விளக்கப்பட்டுள்ளது. உமாபதிசிவம், இம்மூன்று குறித்தும், இவற்றை நீக்கித் திருவருட்பேறு பெறுவது குறித்தும் மொழிகின்றார்.

"இறைவன் இல்லை; பேரின்பம் இல்லை" என்று கூறுதற்கு ஆணவமலமே காரணம். இவ் ஆணவமலம் - அக இருள். புறஇருள், ஒரு பொருளையும் பார்க்க முடியாதபடி கண்ணை மறைக்கும்; ஆனால் தன்னைக் காட்டிவிடும். அகஇருளான ஆணவமலமோ, இறைவன், உயிர் இவற்றை அறியவொட்டாது; தன்னையும் காட்டிக் கொள்ளாது. ஆதலின் 'பொல்லாத ஆணவம்' எனப்படும்.

உமாபதிசிவம்,

*"பலரைப் புணர்ந்தும் இருட்பாவைக் குண்டென்றும்*
*கணவற்கும் தோன்றாத கற்பு"*[95]

எனக் கடுமையாக இவ் ஆணவமலத்தைக் குறிப்பிடுகின்றார்.

உயிரின் அறியும் தன்மையை விளங்கவொட்டாமல் தடுப்பது இவ் ஆணவமே. உயிருக்குத் துன்பம் உண்டாவதும் இதனாலேயாம். உயிரினிடத்தில் தொன்றுதொட்டே இருந்துவருவது.

உயிரானது, திருவருள் ஒளியைச் சிறிது சிறிதாகப் பெற்றகாலத்து இக் கொடிய ஆணவமலமும் படிப்படியாக நீங்கிவிடும். இதனை ஆசிரியர்,

*"ஒன்று மிகினும் ஒளிகவரா தேல்உள்ளம்*
*என்றும் அகலா திருள்"*[96]

என்பதால் குறிப்பிடுவர்.

**கன்மம்**

உயிர்கள் செய்யும் நல்வினை, தீவினைகட்கேற்பப் புண்ணிய பாவங்களை ஈட்டவும், அவற்றின் பயன்களாகிய இன்பதுன்பங்களை நுகரவுமாகத் துணை செய்வது முதல்வனின் திருவருட் சத்தியேயாம்.

*"பெருக்க நுகரவினை பேரொளியாய் எங்கும்*
*அருக்கன் எனநிற்கும் அருள்"*[97]

என்கின்றார் உமாபதிசிவம்.

"வினையைச் செய்பவன், செய்யப்படும் இருவினைகள், அவற்றின் பயன்களாகிய இன்பதுன்பங்கள், அப்பயன்களைச் செய்தவர்கட்கே சேர்ப்பிக்கும் முதல்வன் என ஒருவன் உளன்" என்கின்றார் இவர்.

*"செய்வானும் செய்வினையும் சேர்பயனும் சேர்ப்பவனும்*
*உய்வான் உளனென் றுணர்"*[98]

என்பது இவர் வாக்கு.

**மாயை**

மாயையினின்று உடம்பு முதலியன தோன்றி உயிர்களைப் பொருந்துகின்றன. ஆணவ இருள்நீங்கி, விடிவு வரும்வரை, மாயையின் காரியமாகிய உடம்பு, உயிருக்கு விளக்குப்போல் நின்று உதவுகின்றது.[99]

*"நடனமங்கையைப் போல, மாயை தனது காரியமாகிய உலகப் பொருள்களில் மாந்தரின் அறிவைமயக்கி நிற்கிறது"*[100]

என இம்'மாயை' பற்றி ஆ.ஆனந்தராசன் குறிப்பிடுவர்.

பாற்கடலில் உள்ள மீன்கள், அப் பாலை அருந்தாமல், அங்குள்ள சிற்றுயிர்களைப் பிடித்து உண்ணும்; அதுபோல, அருளை ஆதாரமாகக் கொண்டிருக்கும் உயிர்கள், அவ் அருளைப் பொருந்தி நின்று பேரின்பத்தை நுகர அறியாமல், மாயையின் காரியமாகிய உலகப் பொருள்களையே நுகரவிரும்பி, மயக்கமாகிய கடலில் ஆழ்ந்துள்ளன.

*"பால்ஆழி மீன்ஆளும் பான்மைத்து அருள்உயிர்கள்*
*மால்ஆழி ஆழும் மறித்து"*[101]

என்பது ஆசிரியர் கூற்று.

**சிவப்பேறும் திருவருளும்**

உயிர் பக்குவமுற்றபோது, இறைவன், அவ்வுயிரினுள் மறைந்துநின்று அதன் அறிவைச் சிறிதுசிறிதாக வளர்த்து வருவன்.

அவ்வுயிர், உண்மை உணரும் பக்குவம் எய்தியபோது, இறைவனே, கண்ணால் காணும் வடிவுடைய ஞானாசிரியனாகத் தோன்றிவந்து, அப்பக்குவ ஆன்மாவுக்குத் திருவருளைத் தெளிய உணர்த்துவான். "சிவமாகிய முதற்பொருள் நேராகவந்து அருளாமல், குருவடிவில் மறைந்து நின்று அருள் செய்ய நினைந்து இவ்வாறு வந்துள்ளது" என்பதை உலகோர் அறியமாட்டார்கள்.

*"அருளா வகையால் அருள்புரிய வந்த*
*பொருளா அறியா புவி"*[102]

என்பது ஆசிரியர் வாக்கு.

இத்தகைய ஞானாசிரியன் துணையின்றி ஞானத்தைப் பெறாலாமென எண்ணுதல் பேதைமை. இறைவனாய் நிற்கும் ஞானாசிரியரின் திருநோக்கத்தால் ஆணவமலம் நீங்கும். 'விஞ்ஞானகலர்' முதலான மூவகையினர்க்கு அவரவருக்கேற்ப ஞானாசிரியன், அஞ்ஞானத்தைப் போக்கி மெய்ஞ்ஞானத்தை வழங்கியருள்வன்.

அறியும் நெறியால் திருவருளை உணர்த்த உயிர், தான் வேறாய் நில்லாமல், அத்திருவருளோடு ஒன்றுபட்டு, அதனுள் அடங்கி, அதுவேயாய் நிற்கும். திருவருளின் பின்னால் சென்றால், பேரின்பப் பயனை அடையலாம்.

தாம் வேறு நில்லாது, திருவருளிற் பொருந்தி, அதனோடு ஒன்றாய் நின்றவரும், அதன்மேல் சிவப்பேறு எய்தி நிட்டையில் நின்றவரும் மெய்ப்பொருளை ஒருபோதும் நீங்கமாட்டார்; அவர்க்கு இனிப்பிறவி இல்லை.[103]

இன்பங்கள் அனைத்திலும் இனிமையுடையது 'சிவப்பேறு. அவ்வின்பத்தை இப்பிறப்பிலேயே பெறலாம். இறைவனிடத்து இடையறாது அன்பு செய்தொழுகுதல் இதற்கு அடிப்படை.

திருவைந்தெழுத்தை முறைப்படி ஓதி, முதல்வனை வழிபட்டால், பிறவித்தளை நீங்கும்.

சிவப்பேற்றின் இன்பத்தை இப்பிறவியில் அடைவோர், 'சீவன்முத்தர்' எனப்படுவர். அவர்களது உணர்வில், 'சிவனது ஞானமாகிய திருவருள்' மேம்பட்டு விளங்கி நிற்கும். அப்போது சிவனைத்தவிர வேறொன்றையும் அறியமாட்டார்கள். உலக ஆசை, தம்மைத் தாக்குவதாக உணர்ந்தால், உலகை நோக்கிச் செல்லும் மனத்தை அவ்வாறு செல்லவிடாமல் அடக்கித் தமக்கு முதலாய் உள்ள சிவனது வியாபகத்துள்ளே ஒடுங்கி, உலகை நினையாதிருப்பர். இவர்கள், அகம்புறம் என்னும் வேறுபாடின்றி ஒரே தன்மையாய்ச் சிவத்தையே காண்பர்.[104]

இத்தகைய சீவன்முத்தர்க்குப் பிராரத்தவினை, உடம்பு நீங்கும் போது, முடிந்தொழியும். அவ்வினையை நுகரும் போது, புதிதாக ஆகாமிய வினை தோன்றின், அதனை முதல்வனின் திருவருளே எரித்துவிடும்.

> *"ஏன்றவினை உடலோடு ஏகும்; இடையேறும் வினை*
> *தோன்றில் அருளே சுடும்"*[105]

என்கின்றார் உமாபதிசிவம்.

இவ்வாறு சிவனை அணைந்தோர், சிவனைப் போலவே பேரருள் உடையவராயிருந்து, உலகிற்கு உய்நெறி காட்டுவர்.

> *"கள்ளத் தலைவா துயர்கருதித் தம்கருணை*
> *வெள்ளத் தலைவர் மிக"*[106]

என இந் நூலினை நிறைவு செய்கின்றார் அருளாளர் உமாபதிசிவம்.

இவ்வகையில் முதல்வனின் திருவருளை உலகுக்கு உணர்த்தற்பொருட்டே இந்நூலினை அருளிச் செய்துள்ளார் உமாபதிசிவம் எனல் மிகையன்று.

## 7.6 வினாவெண்பா

### அருள்

பதின்மூன்று வெண்பாக்களே கொண்ட இச்சிறு நூலிலும், இதன் ஆசிரியர் உமாபதிசிவம், ஆறு இடங்களில் 'அருள்' எனும் சொல்லை ஆண்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. 'ஒளி' என்ற சொல்லை ஈரிடங்களில் எடுத்தாண்டுள்ளார்.[107]

### அத்துவிதமும் திருவருளும்

உமாபதிசிவம், கீழ்வரும் பாடல் வாயிலாகச் சைவசித்தாந்தம் கூறும் 'அத்துவித'க் கொள்கையைச் சுட்டுகின்றார் எனலாம் :

> *"ஒன்று இரண்டாய் நின்று ஒன்றில் ஓர்மையதாம் ஒன்றாக*
> *நின்றிரண்டாம் என்னில்உயிர் நேராகும் - துன்றிருந்தார்*
> *தாங்கியவாழ் தண்கடந்தைச் சம்பந்தா, யானாகி*
> *ஓங்கியவா றெவ்வா றுரை."*[108]

"மறைஞானசம்பந்தப் பெருமானே! ஒருபொருளாய் இருக்கும் பரம்பொருளே, உலகியல் தோற்றத்தில் இரண்டாக நின்று, அதன் பின்னர், வீட்டு நிலையில் ஒன்றாகச் சேரும் என்றால், ஒன்று மற்றொன்றோடு சேர்ந்தது என்று கூறுதற்கு இடமில்லை. உள்ளபொருள் ஒன்றேதான் என்றாகும். அவ்வாறன்று, உள்பொருள் இரண்டு என்று கொண்டால், பரமான்மா ஆகிய சிவபரம்பொருளும், சீவான்மா

எனப்படும். உயிரும், தம்முள் ஒத்தன எனக் கருதப் பெற்று இழுக்காகும். உயிராகிய யான், எவ்வாறு சிவமாய் விளங்கும் தன்மையைப் பெறுவேன், விடைகூறி அருள வேண்டும்" எனத் தம் ஞானாசிரியரை நோக்கி வினவுவதாக அமைந்துள்ளது.

இதன்கண் 'ஏகான்மவாதியர், பேதவாதியர், விசிட்டாத்துவ்ாதியர்' ஆகியோர் கருத்துக்கள் மறைமுகமாக மறுக்கப்பட்டுள்ளன. எனவே, "உயிரானது, சுத்தநிலையில் சிவபரம்பொருளோடு அத்துவிதமாய் நிற்கும்" எனும் சைவசித்தாந்தக் கொள்கையே மேலானது என்பது 'விடை'யாகக் கொள்ளப்படும்.[109]

## முதல்வனின் திருவருளும் சிவானந்தப் பேறும்

முதல்வன், கட்டு நிலையிலும் வீட்டு நிலையிலும் உள்ளவரிடத்து அத்துவிதமாய்க் கலந்து ஒரு தன்மையனாய் நிற்பினும், கட்டுநிலையில் உள்ளவர்கட்குப் 'பாசஞானம்' ஆகியும்; வீட்டுநிலையில் உள்ளவர்கட்குத் **திருவருளாகவும்** தோன்றுவன். ஆணவமலம் மேலிட்டபோது ஞானஒளி கிட்டுவதில்லை. உயிர்களுக்குச் சுத்த தத்துவங்கள் ஐந்தினால் ஞானம் உண்டாகும். உயிரானது, திருவருளோடு கூடிக் கட்டினைத் தகர்த்து, அவனருளால் அவனை அறியும் அறிவு பெறும்; உயிரின் சிற்றறிவு கெட்ட பின்பே, இறைவனின் அருளால், பேரறிவாகிய மெய்ஞ்ஞானம் அதற்குவிளங்கும். இறைவனுக்கு அவனது திருவருளே - திருமேனி. அவனது 'திருவருள்' அவனது 'சத்தி' என்று சொல்லப்படும். உயிர்களுக்கு அருள் பாலிப்பதற்காகவே அவன், திருமேனி கொள்கின்றான். மூவகை உயிர்களுக்கு மூவகையில் அருள்புரிகின்றான்.[110] இறைவன், உயிர்களுக்கு வினைப்பயன்களைக் கொடுத்துப் படிப்படியாக அவற்றிலிருந்து விடுவிக்கின்றான். அவ்வாறு முற்றிலும் விடுவித்தபிறகு, அவன் அருளாலே உயிரானது சிவானந்தப் பெருவாழ்வு பெறும்.

*"ஒன்றி நுகர்வதிவன் ஊணும் உறுதொழிலும்"*[111]

எனும் பாடலால் ஆசிரியர் இதனைச் சுட்டுவர்.

இவ் 'வினாவெண்பா' மிகச்சிறிய நூலாக இருந்தாலும், முதல்வனின் திருவருளைச் சிறப்பித்துப் பாடுகின்றார் உமாபதிசிவம் எனலாம்.

## 7.7. போற்றிப் பஃறொடை

## அருள்

உமாபதிசிவம் அருளிய 'போற்றிப் பஃறொடை' எனும் இந்நூலில், ஆசிரியர், 'அருள்' எனும் சொல்லை மூன்றிடங்களிலும்; 'சத்தி' , 'கருணை' இவற்றை ஒவ்வோரிடத்திலும் எடுத்தாள்கின்றார்.[112]

## முதல்வனும் திருவருளும்

"உயிர்களுக்குப் பாதுகாப்பாக விளங்கும் சிவபரம்பொருள், உயிர்களை உய்விக்க வேண்டும் என்ற பேரருளில், தன்னை வணங்குபவர் யாவருக்கும் பேரின்பத்தை வழங்குதற்பொருட்டுத் தில்லைச் சிற்றம்பலத்தே நிறைந்துநின்று உயிர்களின் பிறவிப்பணி அறுமாறு எல்லையற்ற திருக்கூத்தை நிகழ்த்துகின்றான்" என உமாபதிசிவம், நூலின் தொடக்கத்திலேயே முதல்வனின் பேரருளைப் போற்றுகின்றார்.

எண்ணற்ற உயிர்களை அவற்றின் வினைக்கு ஏற்ப வெவ்வேறு வகையான பிறவிகளாகப் படைத்தும், காத்தும், பிறவியுட்பட்டு இளைத்துப்போன உயிர்களை ஒரு கால எல்லையில் இளைப்பாறுமாறு ஒடுக்கியும், தான் மட்டும் கால எல்லைக்கு அப்பாற்பட்டு நிற்பதனால், 'முதல் - நடு - இறுதி' என்று காண்பதற்கு அரியதாய், அவற்றின் அளவைக் கடந்து நிற்பவன் முதல்வன்.[113] பல்வேறுபட்ட பிறப்புக்களால் மலநீக்கம் பெற்ற, பக்குவமுடைய உயிர்களுக்கு மீட்சியை வழங்கி எல்லையற்ற அறிவாகிய தனது பேரின்பத்தைத் தந்தருள்பவன் முதல்வன்.

*". . . . வினையிரண்டும்*
*காட்டி அதனாற் பிறப்பாக்கிக் கைக்கொண்டு*
*மீட்டறிவு காட்டும் வினைபோற்றி"*[114]

என்பர் உமாபதிசிவம். "இருவினை ஒப்பும் மலபரிபாகமும் எய்திய உயிரிடத்தில், பிறவியின் முடிவிலன்றோ வீடுபேறு என்று காலம் பார்த்திருந்து, அவ்வுயிரிடத்துத் தன் **திருவருட்சத்தியைப்** பதிக்கின்ற கருணையாளன் முதல்வன்" என்ற பொருள்பட,

*". . . . பல்பிறவி*
*அத்தமதில் அன்றோ அளவென்று பார்த்திருந்து*
*சத்தி பதிக்கும் தரம் போற்றி"*[115]

என்கின்றார் ஆசிரியர்.

## உயிர் - பாசநீக்கம் - சிவானந்தப்பேறு

முன்பிருந்தே நெல்லுக்கு உமியும் தவிடும்; செம்பில் களிம்பும்; கடல் நீரில் உப்பும் உடனாய் இருப்பதுபோல, உயிரோடு கலந்திருப்பதாய், இங்குக் கூறப்பட்ட உவமைகள் எல்லாம் தனக்கு ஒருபுடை ஒப்புமையாய் மட்டிலுமே நிற்கத் தான் என்னும் நிலைபேறு உடையதாகவும், வடிவற்றதாகவும், எல்லா உயிர்களையும் தனக்குள் அடக்கும் தன்மையுடையதாகவும் உள்ளது 'ஆணவமலம்'. ஒளிமிக்க நாகமணியைத் தன்னுள் அடக்கியிருக்கும் பாம்பு போலவும்; நெருப்பைத் தன்னுள் அடக்கியிருக்கும் விறகுபோலவும்; உயிர்களின் அறிவை

முற்றிலும் மறைத்து, அவற்றிற்கு அறியாமையைத் தருகின்ற இத்தகைய ஆணவமலத்தால், எல்லா உயிர்களும் கட்டுப்பட்டுச் செயல் இழந்து நிற்கும்.

உயிர்களுக்குக் காலம் தவறாமல் முற்பிறப்பில் செய்தவினை, நுகரும் வினை, ஏறுவினை ஆகிய மூன்றுக்கும் தவறாது கணக்கு எழுதி, அவ்வினைப் பயனை உரியவர்கட்குச் சேர்ப்பிப்பதும் முதல்வனின் திருவருளேயாம்.[116]

கட்டு நீங்கி, இருவினையொப்பும் மலபரிபாகமும் உற்றுச் சத்திநிபாதம் அடைந்த உயிர்களுக்கு முத்திப் பேறு வழங்குவான் முதல்வன்.

"இருளானது, கதிரவன் தோன்றியவுடனேயே அப் பேரொளியால் அடங்கி ஒழியும் தன்மைபோல், என்னைப்பற்றி நிற்கும் ஆணவத்தை நிலைபேறு அழியாமலும், அதேநேரத்தில் அது என்னைப் பற்றாமலும் செய்கின்ற நீதியை நிலைநிறுத்துகிற பெருந்தகைமையை வணங்குகிறேன்" என்கின்றார் உமாபதிசிவம்.

*"சேணார் இருள்வடிவும் செங்கதிரோன் பால்நிற்பக்*
*காணா தொழியும் கணக்கேபோல் - ஆணவத்தின்*
*ஆதி குறையாமல் என்பால் அணுகாமல்*
*நீதி நிறுத்தும் நிலைபோற்றி."*[117]

என ஏத்துகின்றார். "அவன், தன் அழகிய திருத்தாளை என்தலைமீது சூட்டி அருளிய பேராளன்" என்றும் போற்றுகின்றார்.

*". . . சுந்தரத்தாள் என்தலைமேல்*
*ஆளும்படி தந்து அருள்செய்த பேராளன்"*[118]

என்பது உமாபதிசிவம் வாக்கு.

" 'யாம் இறைவனோடு ஒன்றாவேம்; யாமே சிவம்' என்று கூறுவோராகிய கீழானவரோடு நான் சேர்ந்து விடாதபடி என்னைத் தடுத்தாட்கொண்டாய்; எங்கும் நீக்கமற நிற்கும் உன்னுடைய பெருநிலையைக் காட்டி, அழிவில்லாத பேரின்ப வீட்டினை வழங்கும் உன் திருவடி மலர்களில் என்னை ஆட்படுத்தி, 'அழியாத வீட்டுநிலை இதுவே' என்று உணர்த்திய இறைவனை எவ்வாறு புகழ்வேன்?" என்று ஏங்குகின்றார் உமாபதிசிவம்.

*"ஆனந்த மாக்கடலில் ஆரா அமுதளித்துத்*
*தான்வந்து செய்யும் தகுதியானால் - ஊனுயிர்தான்*
*முன்கண்ட காலத்தும் நீங்காத முன்னோனை*
*என்கொண்டு போற்றிசைப்பேன் யான்?"*[119]

என்றுகூறி இந்நூலினை நிறைவு செய்கின்றார் ஆசிரியர்.

இவ்வாறு முதல்வனைப் பற்றியும் அவனது திருவருளைப் பற்றியும் இந்நூல் எடுத்துரைப்பது எனலாம்.

## 7.8 கொடிக்கவி

### அருள்

உமாபதிசிவம் அருளிய இந்நூலில் நான்கு பாடல்கள் உள எனினும், இதன்கண் மூவிடங்களில் 'அருள்' என்ற சொல் வந்துள்ளது. இதுதவிர 'ஒளி' என்ற சொல்லும் ஆளப்பட்டுள்ளது.[120] தில்லைத் திருக்கோயிலில் 'கொடி' ஏறற்பொருட்டுப் பாடப்பட்டதாதலின் ஒவ்வொரு பாடலிறுதியிலும் 'கொடி' எனும் சொல் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

### முதல்வனும் திருவருளும்

இந்நூலிலும் உமாபதி சிவம், 'பதி, பசு, பாசம்' எனும் முப்பொருள் பற்றியும் கூறுகின்றார்.

சிவஞானப் பேரொளிக்கும் ஆணவக் காரிருளுக்கும் இடம் கொடுத்து நிற்பது உயிர்; இவ் உயிரில் 'பதிஞானம்' மேலோங்கினால் 'ஆணவம்' ஒளிந்திருக்கும்; 'ஆணவம்' மேலோங்கினால் 'ஞானப்பேரொளி' ஒளிந்திருக்கும். இறைவன் திருவருளால், உயிர்களுக்குச் சற்றே அறிவு தோன்றுமாயினும், ஆணவமலச் சார்பால் அவை மும்மலங்களில் மூழ்கிக்கிடக்கின்றன.

உமாபதிசிவம், "இவ் உயிர்களை மும்மலங்களிலிருந்து விடுவித்துத் தீக்கை முறைப்படி செலுத்தித் திருவருட் பேரொளியில் கூட்டும்படிக்காகவே இக் கொடியை உயர்த்தினேன்"[121] என்கின்றார். "ஒளிக்கும் இருளுக்கும்" எனும் பாடலால் இதனை அறியலாம்.

மெய்ப் பொருளாக விளங்குவது - என்றும் நிலைத்திருப்பது - உயிருக்கு உயிராக உள்ளது - பேரின்ப வடிவாகத் திகழ்வது - தனக்கு வேறு முதல் இல்லாதது, அதுவே சிவபரம்பொருள். அவன், வாக்காலும் மனத்தாலும் எக்காலத்தும் உணர்தற்கு அரியன்; அறிவுக்கு அறிவாக விளங்குபவன்; அவனை அறிய, அவனது திருவருளே தேவை.

முதல்வனின் சிவப்பேறு எய்துதற்குத் துணையாக இருப்பது 'திருவைந்தெழுத்து' என்னும் அருமந்திரமாகும்.[122]

மிகச்சிறிய நூலாயினும் முதல்வனின் திருவருளைக் கூறாமல் விடவில்லை உமாபதிசிவம் என்பது எண்ணுதற்குரியது.

## 7.9 நெஞ்சுவிடுதூது

### அருள்

உமாபதிசிவம் அருளிய 'நெஞ்சுவிடுதூது' என்னும் இந்நூலின், ஆசிரியர், 'அருள்' எனும் சொல்லைப் பதினொரு இடங்களிலும்; 'கருணை, ஆணை, தண்ணளி' முதலானவற்றை ஒவ்வோரிடத்திலும் எடுத்தாண்டுள்ளார் என்பது குறிப்பிடத்தகும்.[123]

### முதல்வனும் திருவருளும்

உமாபதிசிவம், தம் ஆசிரியர் மறைஞானசம்பந்தரையே சிவபெருமானாகக் கருதி வழிபடுகின்றார். இந்நூலின்கண், முதல்வனது திருவருளைப் பற்றிய கருத்துக்களே மிகுதியாக இடம்பெற்றுள்ளன எனலாம்.

முதல்வன், உணர்தற்கரியவன்; ஆனால் அடியார்கட்கு எளியன்; நுண்ணியன்; ஆனால் பெரியன். உருவாக - அருவாக - அருஉருவாக விளங்குபவன்; ஆனால் இம் மூன்றும் அல்லாதவனாகவும் விளங்குபவன். பொய்யர்க்குப் பொய்யன்; மெய்யர்க்கு மெய்யன். உயிர்கட்கெல்லாம் முதல்வன்.

உயிர்கள் தோற்றுவிக்கப்படாதவை; என்றும் அழியாதவை; எண்ணில் அடங்காதவை. இறைவன் என்று உள்ளானோ அன்றைக்கே உயிர்களும் உள. இறைவன், நிலையில் திரியாதான்; உயிர்களோ, வினைகளில் அழுந்தி மாறிமாறிப் பிறந்து இறந்து துன்புறும் இயல்பின. உயிர்கள், கருவி, கரணங்களின் கடலனைய துன்பத்தில் அகப்பட்டு மயங்கும். உயிருக்கு உண்மையான உறவினன் இறைவன் ஒருவனே.

முதல்வன், முன்னைப் பழம் பொருளாகவும், குற்றமற்றவனாகவும், இயல்பாகிய பாசங்களினின்று நீங்கியவனாகவும் திகழ்பவன். அருளாளர் உள்ளத்தே குடிகொண்டிருக்கும் பண்பினன்; என்றும் நிலைபேறாக உள்ளவன்; நீக்கமற நிறைந்தவன். உலகமெலாம் நிறைந்திருப்பவன்; ஆனால் உலகப் பொருள்களால் தொடக்குறாதவன்.[124]

உள்ளுகும் மெய்யடியார்களின் மனத்தைத் தன்பால் ஈர்க்கும் பேரருளையே மாலையாகக் கொள்பவன். **அருளே - அவனது மாலை.**

"*. . . . அருள்*
*மேலாய் விளங்கு அலங்கல் மெய்யினான்*"[125]

என்பர் உமாபதிசிவம்.

தம் ஆசிரியர் மறைஞான சம்பந்தர், தமக்குச் செய்த அருட்டிறம் குறித்து இவர் கூறுவது வருமாறு :

*". . . . . பொறியிலியேன்*
*வெம்பும் பிறவியலை வீழாமல் வீடளித்த*
*சம்பந்த மாமுனி . . ."*[126]

"பிறவிப் பெருங்கடலில் நான் விழுந்து அழுந்தாமல், எனக்குச் **சிவப்பேறு** அளித்த அருள்வள்ளல் சம்பந்தமாமுனிவர்" என்பது பொருள்.

''இத்தகு பெருமைமிகு தலைவன், என்னைத் தன் திருக்கண்களால் நோக்கினான்; என், பழவினைகளோடு கூடிய பஞ்ச மலக் கொத்தை அடியோடு அறுத்தான்; உடலின்மீது உண்டான துடக்கினையும் அறுத்தான். இப் பேரருள் நினைந்து ஆனந்தக் கண்ணீர் சிந்தினேன். தூய வெண்ணீறும், சிவனடியார் திருவேடப் பொலிவும், சிவபூசையுமே நிலையான இன்பம் தரும் என்ற மெய்யினை அறிவுறுத்தினான். திருவைந்தெழுத்தின் உட்பொருளை உணர்த்தினான்; அதன் பயனாய்ப் பேரின்பத்தை அடையும் நெறியைக் காட்டினான். என் உயிர், உடல் ஆகியவற்றை எல்லாம் தனது அருள் வெள்ளத்திலே அழுந்துமாறு என்னை இயைவித்தான்; என் பிறவியை வேரோடு அறுத்து அருள் செய்தான்" என்கின்றார் உமாபதிசிவம்.

*". . . . அருள்*
*வெள்ள மயலளித்து மேவினான் - கள்ளம்*
*மறப்பித்தான் மெய்ஞ்ஞான மாக்கி மனமெல்லாம்*
*இறப்பித்தான் என்பிறவி யீர்த்தான் . . ."*[127]

என்பது இவர் திருவாக்கு.

- இவ்வாறு, உயிர்களின் இயல்பைப் பொதுவாகக் கூறும் உமாபதிசிவம், குருவாக எழுந்தருளிவந்த முதல்வன், தமக்குக் காட்டிய திருவருளின் திறத்தை விதந்து ஓதுகின்றார்.

## 7.10 உண்மை நெறிவிளக்கம்

### அருள்

ஆறு செய்யுட்கள் கொண்ட இச் சின்னஞ்சிறு நூலில் மூன்று இடங்களில் 'அருள்' எனும் சொல்லாட்சி இடம்பெற்றுள்ளது. இதுதவிர 'எழிற்பரை' (சத்தி) எனும் சொல்லும் வந்துள்ளது.[128] நூலின் இறுதியிலமைந்த பாயிரத்திலும் இச்சொல் ஆளப்பட்டுள்ளது.

### முதல்வனும் திருவருளும்

உயிரானது, முதல்வனின் திருவருட்டுணையினால், முப்பத்தாறு தத்துவங்களின் இயல்பையும் விளைவையும் நன்கு தெளிந்து, இவற்றோடு பொருந்திநில்லாமல் விலகி நிற்குமாயின் அது **'தத்துவசுத்தி'** எனப்படும். அவ்வுயிர், பரந்த இருளாக, அனைத்து

உயிர்களையும் பற்றிக் கொண்டிருக்கும் ஆணவ மலத்தின் பிடியிலிருந்து விலகித் தன் அறிவுக்கு உதவுவது, இறைவனுடைய பேரறிவே என்பதை உணருமாயின், அது 'ஆன்ம ரூபம்' எனப்படும். தன் சிறுமை உணர்ந்த உயிர், இறைவனின் பேரறிவுச் சத்தியின்றித் தனக்கென ஓர் ஆற்றல் அல்லது செயல் இல்லை என உணருமாயின், இது 'ஆன்ம தரிசனம்' எனப்படும். உயிரானது தன் முனைப்பு நீங்கப் பெற்று, முதல்வன் திருவருளில் ஒன்றி, ஆணையாம் சிவத்தைச் சார்ந்து, அவனே தானேயாகிய அந்நெறி நிற்பின், அது 'ஆன்ம சுத்தி' எனப்படும்.

பராசத்தியைத் தனக்கு வடிவமாகக் கொண்ட முதல்வன், உயிர்கள்மீதுகொண்ட பேரருள் காரணமாக அவற்றுக்கு உடல், கருவி, உலகம் முதலாயின தந்து, அவற்றின் வினைக்கு ஈடாகப் பிறப்பு இறப்புக் கொடுத்துப் பின்னர்ப் பக்குவப்பட்ட உயிர்களுக்குப் பிறவி ஒழித்து வீடுபேறு அளிப்பன்; 'அவனே சிவபெருமான்' என உயிர் உணர்வது 'சிவரூபம்' எனப்படும்.[129]

'யான், எனது' என்னும் அகப்பற்றும் புறப்பற்றும் அறவே நீங்குமாறு உயிரில் திருவருள் பதிதல், சிவபெருமானது 'திருவடி' ஆகும். பார்க்குமிடமெங்கும் அனைத்தும் அவனாகவே தோன்றுதல், 'சிவனின் திருமுகம்' ஆகும்; இதனால் உண்டாகும் பேரின்பம், அப்பெருமானின் 'திருமுடி' ஆகும்; 'சிவனைத்தவிர வேறுபொருள் இல்லை' என உணர்ந்து; தன்முனைப்பில் அழுந்தாமல், திருவருளின்சிறப்பை உணர்ந்து, அதற்குமேலும் பேரின்பத்தில் திளைத்திருத்தல் 'சிவதரிசனம்' ஆகும். இதனை விளக்குவது,

> *"பரை உயிரில் யான்எனதொன்று அறநின்றது*
> *அடியாம்"*[130]

என்ற பாடல்.

இனி, அகமும் புறமும் அந்தச் சிவத்துடனே கூடி நிற்றல் 'சிவயோகம்' எனச் சிவாகமங்கள் கூறும். தனக்கென ஓர் செயலற்றுத் தான் அதுவாய், ஏகனாகி இறைபணி வழுவாது நிற்பின், அந்தச்சிவன், இவன் உடலும் உயிருமாய் நின்று, உண்டு உறங்கி நடந்து, பிராரத்தமாகிய நானாவித விடய போகங்களையும் சிவபோகமாகவே செய்து, இவனைப் பேதமற நின்று தானாக்கிவிடுவன்; இது, ஆன்மலாபமெனப் பரமான்தத்தைப் பொசித்து நிரம்பி அது பொங்கி மேலிட்டது கரைபுரண்டு அவசமுறுஞ் 'சிவபோகம்' என்று சிவாகமங்கள் சொல்லும்.[131]

> *". . . . பேதமற நின்றிவனைத் தானாக்கி விடுவன்*
> *பெருகுசிவ போகமெனப் பேசுநெறி இதுவே"*[132]

என்பர் இந்நூலாசிரியர்.

எனவே இச்சிறுநூலிலும் முதல்வனின் திருவருள் எடுத்தியம்பப்பட்டுள்ளமை தெளிவு.

## 7.11 சங்கற்ப நிராகரணம்

### முதல்வனும் திருவருளும்

உமாபதிசிவம் செய்த எட்டு நூல்களில் சங்கற்ப நிராகரணம் எட்டாவதாகும். இந்நூலின் பெரும்பகுதி புறச்சமய மறுப்பாதலின், 'திருவருள்' பற்றி ஈண்டுச் சுருக்கமாக ஆராயப்படுகின்றது.

மறுப்பு : புறச்சமயமாகிய மாயாவாதமும், அகப்புறச் சமயமாகிய ஐக்கியவாதி சமயமும், அகச் சமயங்களாகிய பேதவாதம், பாடாணவாதம், சிவசமவாதம், சங்கிராந்தவாதம், ஈசுர அவிகாரவாதம், நிமித்த காரண பரிணாமவாதம், சைவவாதம் என்னும் சமயங்களும் ஆகிய இவற்றின் கொள்கையும் மறுப்பும் இந்நூலில் கூறப்பட்டுள்ளன.

இந் நூலுள், சிவசத்தியாகிய 'திருவருள்' பற்றிய விளக்கம் பிறசமயங்களை மறுக்குமுகமாகச் சிற்சில இடங்களில் கூறப்பட்டுள்ள நிலைமையைக் காணலாம்.

அவ்விடங்களில் ஒன்று, நிமித்த காரண பரிணாமவாதி சங்கற்பத்தை மறுக்கும் இடமாகும். சிவசத்தியே உலகமாகப் பரிணமித்துள்ளது என்பது அவர் கொள்கை.

அனுபவிக்கப்படுவன சத்தாதி விடயங்கள். அவையெல்லாம் சத்தி. அனுபவிப்பன உயிர்கள். அவையெல்லாம் சிவம். சிவமாகிய ஒரு பொருளே தானாகவும், சத்தியாகவும் இருந்து நுகர்பொருள் என்றும், நுகர்பவன் என்றும் அப்படி நடிக்கிறது. சத்தி சிவங்களின் நடிப்பே அனைத்து உலகங்களுமாம். இந்த ஞானம் உண்டாவது அருமையினும் அருமை. இவ்வாறு அவர்கள் கூறிப் போவர்.

இக் கொள்கையை உமாபதிசிவம் பின்வருமாறு மறுக்கிறார் :

நுகர்பொருள் சத்தி; நுகர்பவன் சிவம் என்றாய். எனவே, சத்தி சிவங்கள் தவிர வேறு பொருள் இல்லை என்பதாகிறது. அப்படியானால் நீ கூறுகிற அந்த ஞானம் யாருக்கு உண்டாக வேண்டும்? அச் சத்தி சிவங்களுக்கு உண்டாக வேண்டும் என்று ஆகிறது. அப்படித்தான் சொல்ல முடியும். வேறு வழியில்லை. ஒன்றை அறியாதிருத்தலும், இன்னொன்றைத் தெளிவில்லாமல் அறிதலும் ஏகதேசஞானம். அதனை உடையவரே வினைகளின் வயப்பட்டு அவற்றைச் செய்வர்; பயனை நுகர்வர், சத்தி சிவங்களுக்கு ஏகதேச ஞானம் ஏது? அவை வினைவயப்படா; வினைகளைச் செய்யா; பயன்களை நுகரா. ஆதலால், சத்தி சிவங்களின் நடிப்பே பிரபஞ்சம் என்ற உள் கொள்கை பொருந்தாது.[133]

## சிவப்பேறும் திருவருளும்

இனி, ஆன்மா தன்னை அறவே யிழந்து திருவருளோடு ஒன்றுபட்டு நிற்றலாகிய ஏகனாகி நிற்றலை,

> "திரண்டாம் பயனெனும் திருவருள் தெளியிற்
> சென்றுசென்று அணுவாய்த் தேய்ந்துதேய்ந்து ஒன்றாம்
> என்றிறை இயற்கை இயம்புதல் தகும்"[134]

என விளக்கியுள்ளார் உமாபதிசிவம்.

இதனைப் 'பரம சித்தாந்தம்' எனச் சிறந்தெடுத்துப் போற்றி, மேற்கோளாக ஆளுகிறார் சிவஞான முனிவர்.[135]

இந்நூலின் முடிவில், ஆசிரியர் தாம் இயற்றியுள்ள சிவப்பிரகா நூலைக் குறிப்பிட்டு, "அந் நூலை நீ ஆராய்ந்தால் சிவனருள் எப்படிப்பட்டது என்கின்ற வினாவுக்கு விடை கிடைக்கும்" என்று கூறி முடித்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

## முடிவுரை

இவ் இயல் வாயிலாக அறியத்தகும் முடிபுகளாவன :

1. 'திருவுந்தியார்' முதல் அனைத்துச் சாத்திர நூல்களிலும் 'அருள்' என்ற சொல் மிகுதியாக ஆளப்பட்டுள்ளது.
2. உயிர்கள், சிவஞானத் தேனைப் பருகாமல், சிற்றின்பக் கள்ளை உண்டு மயங்கும்; ஆதலின், பால்வற்றிப்போன வறட்டுப் பசுக்களைப் போன்றவை என, உய்யவந்த தேவநாயனார் சாடுகின்றார்.
3. 'திருவுந்தியார்' உலகமக்களைப் பாசக் கடலிலிருந்து மீட்டு, இறைவனின் திருவடிப் பேறாகிய அக்கரைக்கு இட்டுச்செல்லும் தோணியாகும்.
4. சிவபரம்பொருளான முழுமுதல் - வித்து; அதனின்றும் வெளிப்பட்டுத் தோன்றும் முளை - திருவருள்.
5. உயிர் - முத்தி முதற்கொடி; அதனைப்பற்றும் மோகம் - மோகக்கொடி; திருவருள் - சத்தி என்பது, திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனார் கூறும் கூற்று.
6. சிவபெருமான் எளிவந்த தன்மையோடு ஆண்டிலனேல், உயர்களில் எவைதாம் அறனாய் நிற்கும் தன்மையை அடைய முடியும் என்று வினா எழுப்புகின்றார் இந் நாயனார்.
7. உயிரின் பக்குவ நிலையறிந்து, இறைவன், ஞானாசிரியனாக எழுந்தருளிவந்து, அத்துவாக்களைத் தூய்மை செய்து. வினைகளைப் போக்கி அருள்வான்.

8. ஞானாசிரியர் உணர்த்தும்போதுதான், உயிரானது; அசத்தாகிய உலகச் சார்பைத் தனக்கு வேறு எனப் பகுத்தறிந்து, அதனின் நீங்கிச் சத்தாகிய சிவத்தோடு கூடி இன்புறும்.

9. பேரின்ப முத்தி எய்தியோர், பழத்திற் சுவை போலவும், பூவில் மணம் போலவும், நெருப்பில் வெம்மை போலவும், வீணையில் இன்னிசை போலவும், சிவமுதற் பரம்பொருளோடு ஒன்றிப் பிரியாது இயைந்து நிற்பர்.

10. 'திருவருள்' என்பதையே நூல் தலைப்பாகக் கொண்ட சிறப்பு, 'திருவருட்பயனு'க்கு உண்டு.

11. முத்தியில், உயிரானது சிவத்துடன் கூடிநிற்கும் நிலையைத் 'தாடலை' என்பதால் சுட்டுவர் உமாபதிசிவம்.

12. முதல்வனது திருவருளைப்போல் அகில உலகெங்கும் வேறு காண்டல் இயலாது.

13. இன்பங்கள் அனைத்திலும் இனிமையுடையது 'சிவப்பேறு'. அத்தகு இன்பத்தை இப்பிறவியிலேயே பெறலாம். அவ்வாறு பெறுவோர் 'சீவன் முத்தர்' எனப்படுவர்.

14. 'உயிரானது, சுத்த நிலையில் சிவபரம்பொருளோடு அத்துவிதமாய் நிற்கும்' எனும் சைவசித்தாந்தக் கொள்கையே மேலானது.

15. இருவினை ஒப்பும் பலபரிபாகமும் எய்திய உயிரிடத்தில், 'பிறவியின் முடிவிலன்றோ வீடுபேறு' என்று அமயம் பார்த்திருந்து, அவ்வுயிரிடத்துத் தன் திருவருட் சத்தியைப் பதிக்கின்ற கருணையாளன் முதல்வன்.

16. 'யாம் இறைவனோடு ஒன்றாவோம்; யாமே சிவம்" என்று கூறுவோரின் சேர்க்கை தீது.

17. முதல்வனின் 'சிவப்பேறு' எய்துதற்குத் துணையாய் இருப்பது 'திருவைந்தெழுத்து'.

18. முதல்வனின் திருவருளே அவனது 'மாலை'.

19. 'சிவனைத்தவிர வேறு பொருள் இல்லை' என உணர்ந்து தன் முனைப்பில் அழுந்தாமல், திருவருளின் சிறப்பை உணர்ந்து, அதற்கு மேலும் பேரின்பத்தில் திளைத்திருப்பது 'சிவதரிசனம்' ஆகும்.

20. உயிரும் சிவமும் தன்னிலே கூடி, இரண்டும் ஒரு முதலாய், அவ்விடத்து உற்றதொரு பயனும், பிரியமுமாகிய இரண்டும் இல்லையாய் - இப்படி இருக்கும் நிலை 'சிவகதி' எனப்படும்.

21. ஆன்மா, தன்னை அறவே இழந்து, திருவருளோடு ஒன்றுபட்டு நிற்றலாகிய 'ஏகனாகி நிற்றலை' உமாபதிசிவம் சிறப்பாக விளக்குகின்றார்.

22. முதல்வனாகிய சிவபெருமானின் திருவருள், எல்லையற்றது; பரந்தது; விரிந்தது; சொல்லுக்கடங்காதது. அவன் திருவருளில்லையேல் எதுவும் எங்கும் எக்காலத்தும் நிகழாதெனின் அதனியல்பை அளவிட்டுரைத்தல் ஒல்லாது.

23. மெய்கண்டார் கூறிய 'திருவருளை'த்தான், பின்வந்தோரும் கூறியுள்ளனர். ஆனால், அதனை விளக்கும் வகையும் சான்று காட்டும் முறையும் வெவ்வேறுபட்டன.

24. இப்போது வாய்க்கப் பெற்ற இம் மனித்தப் பிறவியை வீணாக்காமல், முதல்வனின் திருவருள் வழிநின்று ஒழுகி, அவனின் சிவானந்தப் பேரின்பத்தை அடைதலே வாழ்வின் குறிக்கோளாகக் கொள்ளல் இன்றியமையாதது.

## சான்றெண் விளக்கம்

1. கு. சுந்தரமூர்த்தி, 'ஆராய்ச்சி முன்னுரை', **மெய்கண்டசாத்திரம்,** ப.5.
2. **திருவுந்தியார்**, 11:1.
3. ஆ. முத்துக்குமார சுவாமிகள், **சிவஞானதத்துவ தீபம்,** 82.
4. **திருவுந்தியார்,** 34.
5. **மேலது,** 35:2;29.
6. **மேலது,** 44.
7. **மேலது,** 6, 13.
8. **மேலது,** 15:1-2.
9. **திருக்குறள்,** 350
10. **திருவுந்தியார்,** 18.
11. **மேலது,** 21,30.
12. **மேலது,** 41.
13. **மேலது,** 43.
14. **மேலது,** 12
15. சி.சு. மணி, (வ.ஆ.) **திருவந்தியார் - திருக்களிற்றுப்படியார்,** ப.10.
16. **திருவுந்தியார்,** 41.
17. **மேலது,** 3; 37; 33; 42.
18. **மேலது,** 14.
19. **மேலது,** 20.
20. **மேலது,** 45.
21. **'அருள்'** : 5.7,13.75.92.93.95.
22. **திருக்களிற்றுப்படியார்,** 86.
23. **மன்றப்பதிப்பு,** ப.703.
24. கு. வைத்தியநாதன். **'திருவுந்தியார் - திருக்களிற்றுப்படிய** மெய்கண்டார். மே. 1993.
25. **திருக்களிற்றுப்படியார்,** 1:1-2.
26. **மேலது.** 43:3-4.
27. **மேலது,** 51.83.5.
28. **மேலது,** 10.35.36.

